# மாணிக்க விருந்து



சித்தாந்தச் செந்நாவலர்
வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., பி.எல்.,
தமிழ்ப் பேராசிரியர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

மணிவாசகர் நூலகம்
சிதம்பரம்

## பதிப்பகத்தார் உரை

பேராசிரியர் சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் தேவார திருவாசகப் பக்திப் பனுவல்களில் ஈடுபாடும் பற்றும் கொண்ட பெரும் புலவர். பக்தி இலக்கியங்களைப் பல்காலும் ஓதி உணர்ந்தவர்கள் ஆதலால் எழுத்துக்கள் பக்தி மணம் கமழ்கின்றன. தத்துவக் கருத்துக்களை மிக எளிய உலகியல் உவமைகள் கொண்டு தெள்ளத்தெளிய விளக்கியுள்ளார்கள். சைவ சித்தாந்தப் பேருண்மைகளை அங்கை நெல்லிக்கனியென அழகுற விளங்கச் செய்துள்ளார்கள்; தமக்கே உரித்தான சுவைமிக்க நடையில் கவினுறக் கருத்துக்களை வடித்துத் தந்துள்ளார்கள். நுண்ணிய கருத்துக்கள் பேராசிரியர் கை வண்ணத்தால் கலைவடிவு பெற்று அலை அலையாய் நம் உள்ளத்து எழுகின்றன. சிந்தனையைத் தூண்டும் சிறந்த முறையில், எதுகை மோனை எழில் நலம் மிக்க நடையில் எந்தப் பொருளையும் சுவையாகக் கூறுவது பேராசிரியர் அவர்கட்குக் கைவந்த கலை. கற்றதுணர விரித்துரைக்கும் மாண்பு, நூல் முழுதும் பிறங்கக் காண்கின்றோம். பக்தி இலக்கியத்தின் கங்கைப் பேராறு போன்ற திருவாசகத்தைக் கற்றுக் கரைசேர இந்நூல் ஓர் உற்ற துணையாகும் என்று நம்புகிறோம். திருக்குறள் சிறப்பெல்லாம் வள்ளுவர் விருந்தென வழங்கினார்கள். நாவுக்கரசர் நற்றமிழ்த் திறத்தை அப்பர் விருந்தென அளித்தார்கள். திருவாசகப் பெருங்கருவூலத்தின்

கவின் எல்லாம் மாணிக்க விருந்தாக்கிப் படைக்கின்றார்கள். நலம் திகழ் நல்விருந்தைச் 'சேர்ந்துண்ண வாரீர் செகத்தீர்' என அன்போடு அழைக்கின்றோம். மணிவாசகர் நூலகத்தாராகிய நாங்கள், பேராசிரியர் பெரிதும் போற்றி எழுதிய மாணிக்க விருந்தினை அளிப்பதில் பெரு மகிழ்வு எய்துகின்றோம். எங்கள் பால் பேரன்பு கொண்டு முத்தான பத்து நூல்களை வெளியிட வாய்ப்பளித்த பேராசிரியப் பெருந்தகை அவர்கட்குப் பெரிதும் நன்றியுடையோம்.

பேராசிரியர் அவர்களது அணிதிகழ் மணி விழா நாளில் மாணிக்க விருந்தினை உங்கள் முன் படைப்பதில் மட்டிலா மகிழ்ச்சியுறுகிறோம்.

நம் செந்தமிழ் மொழியில் சிந்தனைச் செழிப்புள்ள நூல்கள் பல வெளிவரத் துணைநிற்கும் திரு. ச. மெய்யப்பன் எம்.ஏ. அவர்கட்கும் எம் நன்றி உரியது.

சிதம்பரம்<br>11-12-66

ச. முத்துப் பழநியப்பன்

# வாசகரும் வாகீசரும்

"சைவத்தின் மேற் சமயம் வேறில்லை யதிற்சார் சிவமாம்
தெய்வத்தின் மேற் றெய்வம் இல்லெனும் நான்மறைச்
செம்பொருள் வாய்
மைவைத்த சீர்த்திருத் தேவா ர முந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற்றுள்எம் உயிர்த்
துணையே."

"சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்நம் சுந்த
ரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்-முற்கோலி
வந்திலரேல் நீற்றெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே"

உலகில் வகுக்கப்பட்டுள்ள சைவம் முதலாய் உள்ள அளவில் சமயங்களையும், மேற்சமயங் கடந்த மோன சமரசத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டு மேலோங்கி நிற்பது சைவ சித்தாந்தம். இதற்கு முதற்கடவுள் சிவபெருமான். அவன் கடவுள் வரிசையில் முன்னவனாக வைத்து எண்ணப்படுபவன். அவனே முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாயவன்; அவனே பொறிவாயிலைந் தவித்தவன்; அவன் கூறிய நெறியே பொய்தீர் ஒழுக்க நெறியாகிய சைவ சித்தாந்த நெறி. அதுவே சிவனையடைவிக்கும் சீர் நெறி. அவ்வருள் நெறியே எவ்வுயிர்க்கும் பாதுகாவலாகும் என்பது உறுதி. அந்நெறியினை விளக்க எழுந்த இலக்கியம் பன்னிரு திருமுறைகள். அவ்வருள்நெறிவழியே யொழுகுவாரனைவர்க்கும் நல்ல சாதனமாய் நின்று பயனளிப்பது திருவைந் தெழுத்தாகிய நமசிவாயம். இதனை அப்பர் எவ்வாறு கூறுகிறார் பாருங்கள்:

"முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென் றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நவச்சி வாயவே."

(இப்பாடலில் முதலடியில் நெறி என்பது வரிசை; இரண்டாவது அடியில் நெறி என்பது சமயம்; மூன்ருவது அடியில் நெறி என்பது வழி; நான்காவது அடியில் நெறி என்பது உபாயம்.)

நால்வர் நாம மந்திரம்

இறைவன் அருள்வழியே சென்று சித்தாந்த சைவத்தைப் பற்றினுர் யாவர்க்கும் நல்ல சாதனமாய் நின்று பயனளிப்பது திருவைந்தெழுந்து மந்திரம் ஆகும். அஃது இறைவனுடைய திருநாமம். அது போன்று அவனுடைய சிறந்த முதன்மை அடியார்களாகிய நம் சைவ சமய குரவர்கள் நால்வர் பெயர்களும் ஐந்தெழுத்திலேயே அமைந்து நாம் நாநவின்றேத்தி உய்வதற்கு உதவுவன வாயுள்ளன. அப்பெயர்கள் முறையே ஞானசம்பந்தர், நாவுக்கரசர், திருவாரூரர், மணிவாசகர் என்பன ஆகும். இப்பெயர்களில் வரும் ஒற்றுக்களை நீக்கினுல் ஒவ்வொரு பெயரும் ஐந்தெழுத்து மந்திரம் ஆவதைக் காணலாம். அப்பெயர்கள் இறைவன் திருவருளாலேயே அவர்களுக்கு வந்து வாய்த்தன. வேறு தவமின்றி அப்பெயர்களையே நாம மந்திரமாகக் கொண்டு ஓதியும் வழுத்தியும் உய்திபெற்ருர் பலர் ஆவர். எடுத்துக் காட்டாக, அப்பூதியடிகள் திருநாவுக்கரசு என்னும் பெயரை எழுதியும் ஓதியும் முத்தி பெற்ருர். வேறு தவமே அவர் செய்யவில்லை என்று பாடுகிருர் சிவப்பிரகாசர்:

"உற்ரு னலன்தவந் தீயினின் ருனல னூண்முதலா
அற்ரு னலனுகர்வுந் திரு நாவுக் கரசெனுமோர்
சொற்ரு னெழுதியுங் கூறியு மேஎன்றுந் துன்பில்பதம்
பெற்ருனொரு நம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே."

ஆ! ஆ! இதுமட்டும்மா! சேக்கிழார் திருநாவுக்கரசர் புராணத்தைத் தொடங்கும் பொழுதே "வாகீசர் வாய்மை திகழ் பெருநாமச் சீர்பரவலுறுகின்றேன் பேருலகில், ஒரு நாவுக்குரைசெய்ய வொண்ணுமை உணராதேன்" என்று கூறி விம்மிதங் கொள்கிருர்.

திருஞான சம்பந்தரின் திருப்பெயரும் ஒரு திருநாம மந்திரமேயாகும். சமணர்களால் தீர்க்க வழியின்றிக் கூன் பாண்டியன் வெப்பநோயால் துயருற்றுக் கிடந்த போது அமைச்சர் குலச்சிறையார் ஞானசம்பந்தர் வந்தால் இத்தீப்பிணி தீர்ந்துவிடும் என்று பாண்டியனுக்குக் கூறினுர். அவர்கூறிய ஞானசம்பந்தர் என்னும் மந்திரம் பாண்டியன் செவியில் விழுந்தவுடனே அயர்வு நீங்கி நல்லறிவு பெற்றுவிட்டான் என்பதைத் தொண்டர் சீர் பரவுவார் மிக அழகாகக் கூறுகின்ருர்:

"மீனவன் செவியி னூடு வெய்யுணர் வளிப்போர் கூற
ஞானசம் பந்தர் என்னும் நாமமந் திரமுஞ் செல்ல
ஆனபோ தயர்வு தன்னை அகன்றிட அமண ராகும்
மானமில் லவரைப் பார்த்து மாற்றமொன் றுரைக்க
லுற்ருன்."

இதனுல் ஞானசம்பந்தர் என்னும் மந்திரத்தை உரைப்பவர்க்கே யன்றிக் கேட்பவர்க்கும் நற்பயன் விளையும் என்பது தெளிவாகும்.

மற்றும், தம்மையடைந்த ஆன்மாக்களை ஈடேற்ற அவதரித்த திருஞான சம்பந்தரை உபாசனு மூர்த்தியாகக் கொண்டு அவர் திருவடியை எப்போதும் அர்ச்சித்துக் கணநாத நாயனுர் முத்திபெற்ருர்.

இதுபோன்று நம்பியாரூரர் நாமம் புகன்ற நன்மையினுல் நல்ல பேறுகளைப் பெற்றவர் பெருமிழலைக் குறும்ப நாயனுர். மற்றும் சோமாசிமாற நாயனுர், குண்டையூர்க் கிழார் போன்ற பெரியார்களும் சுந்தரமூர்த்தி நாயனுர்

திருவடிக்கு அன்பு செலுத்தியே உய்வு பெற்றோர்கள் ஆவர். இதுமட்டுமா ? சேக்கிழார் பெருமான் திருவாரூரராகிய சுந்தரமூர்த்திகளின் திருவடிகளை வணங்கும்படியான வாய்ப்பினையளித்த தம்முடைய மனிதப் பிறப்பிற்கே வணக்கம் செலுத்துகிறார் என்றால் சுந்தரர் பெருமையையெடுத்துரைக்க நந்தரமாமோ ?

"நேசம் நிறைந்த உள்ளத்தால்
நீலம் நிறைந்த மணி கண்டத்து
ஈசன் அடியார் பெருமையினை
எல்லா உயிரும் தொழ எடுத்துத்
தேசம் உய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல் வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்"

இறுதியாக, மணிவாசகரின் சுந்தரப் பெயரும் ஒரு மந்திரப் பெயரேயாகும். மாணிக்கவாசக சுவாமிகளின் மாணடி போற்றி வணங்குவார் சிவன் திருவருளுக்குப் பாத்திரராவர் என்பது திண்ணம். இதனைச் சிவப்பிரகாசரும் கூறியுள்ளமை இங்கே நோக்கத்தகும்:

"தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே."

நாவுக்கரசர், மணிவாசகர்-இவர்கள் இருவருக்கும் அமைந்த பெயரின் சிறப்பைத்தான் எவ்வாறு புகழ்வது ? அவர்கள் இருவரின் திருப்பெயரும் அன்னார் நாநலம் கருதி அமைத்த பெயராகும். அவர்களுடைய நாநலமும், சொல்வளமும், வாய்மையும், தூய்மையும் நிகரற்றன. செம்பொருளைத் தரிசிக்கும் பேறுபெற்ற பெரியோர்கள் வாயினின்றும் வரும் சொற்கள் இனிய சொற்களாய் இருக்கும். ஏனெனில், அவை அன்பு கலந்து குற்றம் இல்லாதன

வாய் இருக்கும். ஆகவே, அவை அருள்மொழிகளாய் வாய்மை நிறைந்து விளங்கும். அன்பு கலவாத வன்சொற்களும், பொய் முதலிய குற்றமுள்ள சொற்களும் இன் சொற்களாகா, அவை கேட்டோர்க்கு இன்பம் பயவாமையின் செம்பொருள் கண்டோர்க்கே இன்சொல் வழங்குதல் கூடும். சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி யெம்மானையன்றிச் செம்பொருள் வேறின்மையின், அச்சிவனருள் பெற்ற இச்சிவனடியார்களின் இன்னிசைப் பாடல்கள் எவ்வளவு உயர்ந்தன என்பதை எண்ணிப் பார்த்தல் வேண்டும். திருவாசகம் தேன் என்ருல் திருத் தாண்டகம் பாலேதான்.

ஒருவரோ நாவரசர், மற்றவரோ மணிநாவர். அவர்கள் நாவினின்று பயிலும் சொற்களின் இனிமைக்கு அன்னுரை ஒப்பாரும் மிக்காரும் இவ்வுலகில் இல்லே. கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் ஆற்றல் பெற்ற இவ்விருவர் சொல்லும் சொல் எல்லாம்வெல்லும் சொல்லாகவும் செல்லும் சொல்லாகவும் விளங்கின. திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்டவர் திருநாவுக்கரசர். அவர் செம்மையுள் நின்று சிவகதி விளேத்தவர். அதுபோல் மணிவாசகரும் 'கொம்மை வரி முலேக் கொம்பனையாள் கூறனுக்குச் செம்மை மனத்தால் திருப்பணிகள்' செய்தவர். இறைவனுல் செம்மையேயாய சிவபதம் அளிக்கப் பெற்றவர். இவ்வாறு இருவரும் சிவனுகிய செம்பொருளேக் கண்டு, சிவனருள் பெற்றுச் சிவமாகவே நின்றவர்கள். இவர்கள் கூறும் சொற்கள் இன் சொற்களாகாமல் வேறு என்சொற்களாகும் ? புன் சொற்கள் பயிலாத அவர் நாவினின்றெழும் தென்சொற்கள் யாவும் நன்சொற்கள், பொன் சொற்கள், இன்சொற்கள். அழகான சொற்களால், மணி மணியான வார்த்தைகளால் இறைவனுடைய இயல்புகளே எடுத்துக் கூறும்

சக்தி அவர்கள் நாவிலே இயல்பாகவே அமைந்திருந்தது. அப்பர் தமது நாவைப் பற்றித் தேவாரப் பாடல் ஒன்றில் எவ்வாறு கூறுகிறார் பாருங்கள்:

"நாதனாய் உலக மெல்லாம் நம்பிரான் எனவும் நின்ற
பாதனும் பரம யோகி பலபல திறத்தி னாலும்
பேதனாய்த் தோன்றி னானைப் பெருவேளூர் பேணி னானை
ஓதநா வுடையனாகி உரைக்குமா றுரைக்கின் றேனே."

அவ்வாறு அப்பர் இறைவனின் திறத்தையெல்லாம் எடுத்துக் கூறியது கற்பனையினாலன்று; பிறர் சொல்லக் கேட்டதினாலன்று; தம்முடைய அனுபவ உணர்ச்சியைக் கொண்டும், தாம் இறைவனோடு கலந்து அளவளாவும் நெருங்கிய தொடர்பையும் பழக்கத்தின் பெற்றியைத கொண்டுமே யாகும். அதனால் அவ்வாறு பழகியறியாத உலக மக்களுக்கு எளிதில் உணரும் விதத்தில் எப்படி எப்படி எடுத்துக் கூறினால் அவர்கள் உணர்ந்து கொள் வார்களோ அப்படி உணர்த்தும் ஆற்றலைப் பெற்றனராம். இதனையும் அவர் தெளிவாக எடுத்து விளக்கியுள்ளார்:

"குறவி தோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை யென்று
நறவிள நறுமென்கூந்தல் நங்கையோர் பாகத் தானைப்
பிறவியை மாற்றுவானைப் பெருவேளூர் பேணி னானை
உறவினால் வல்லா னாகி உணருமா றுணர்த்து வேனே."

சித்தனாய் எல்லா உயிருமாய்த் தழைத்துப் பிழைத் தவை யல்லையாய் நிற்கும் எத்தனாகிய இறைவனோடு இரண்டற அத்துவிதமாய்க் கலந்து நின்ற நிலையில் நாவரசரும் மணிவாசகரும் உலகிற்கு நன்மையுண்டாகும் படியாக அழகான கருத்துக்களை எடுத்துப் பாடினார்கள். பேய்த் தன்மை படைத்தோர் பேசும் பேய்ச் சொற்களை, வெட்டெனப் பேசும் வெளிறிய சொற்களை, புல்லறிவிற் பிறக்கும் பொய்மை யுரைகளைப், புன்மொழிகளைப் பேச மாட்டார்கள். அவர்களுடைய சொல்லும் செயலும் எண்ணமும் யாதொரு பிழையையும் அறியாதிருந்தன.

அவர்கள் செம்பொருளின் அடியிணையைக்குறுகினவர்கள்; துரிசற்றவர்கள்; பற்றற்றவர்கள்; செம்பொருளோடு தொடர்புற்றவர்கள்; புண்ணியனை நண்ணிய புண்ணியத் துள்ளவர்கள்; கடுமையோடு களவற்றவர்கள்; ஈசனை நேசனாய் நித்தலும் நினையப் பெற்றவர்கள்; ஈசனுடைய எண்குணத்துள்ளவர்கள்; பாசமற வீசும் படியோர்; வல்வினையின் வாயிற் பொடியட்டி அதனைப் பொரு தொழித்த மாவீரர்கள். அவர்கள் அச்சம் என்பதை அணுவும் அறியாத ஆண்மையாளர்கள். இச்சகம் பேசி இழிதொழில் புரிந்தும், மன்னரை மதித்து மாண்பினை இழந்தும், செல்வரைப்பின் சென்று சங்கடம் பேசியும் திரிகின்ற பேயர்கள் பேசும் பேச்சு மயக்கமும் கலக்கமும் விளைவிப்பதாய்ப் பொருளற்றிருக்கும். ஆனால் இவர் களின் மொழிகள் தெய்வமணம் கமழும் சிவவாக்கேயாகும். இதனை அப்பரே கூறுகின்றார்:

"நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்
நெருப்பினொடு காற்றாகி நெடுவா னாகி
அற்பமொடு பெருமையுமாய் அருமை யாகி
அன்புடையயார்க் கெளிமையதாய் அளக்க லாகாத்
தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும்
ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்
பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
பேசுவன பேசுதுமோ பிழையற் றோமே."

திருநாவுக்கரசர் தமிழோடிசை பாடல் மறந்தறியா தவர், சிவன் நாமத்தைத் தந் நாவில் மறந்தறியாதவர். அதுபோல் மணிவாசகரும் சிவ சின்னங்கள் கேட்பச் சிவன் என்றே வாய் திறப்பார். நம்பெருமான் சீரொரு கால் வாயோவார். அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அள்ளூறித் தித்திக்கப் பேசுவார். பேசுவதென்றால் "ஈசனே! எந்தாய்! எந்தை பெருமானே!" என்றென்றே பேசிப் பேசித் திருநீற்றை நிறையப் பூசுவார். அவர்

வெறும் பேச்சுப் பேசவே மாட்டார். அவர் பேசுவ தென்ருல் சிவனைப் பற்றியே பேசுவார். சிவனே அவர் பேச்சின் குறிக்கோளாக இருப்பான். "சிவனே என் பேச்சின் இலக்கிதம்" என்று பாடுகின்ருர் மணிவாசகர்:

"பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி என்மனத்தே வைத்து."

பேசற் கரியனை மாசில்லாத மணிபோல்வானுகிய சிவ பெருமானைப் பற்றிப் பேசுவதே தமது இலக்காகக் கொண்டவராதலால் அவர் மணிவாசகர் என்றும் மாணிக்கவாசகர் என்றும் பெயர் பெற்ருர். மணிவாசகர் என்பதற்கு அழகான வாசகம் உடையவர் என்று பொருள் கூறுவது அத்துணைச் சிறக்காது. மாசில்லாத மணி போல் வானுகிய சிவனைப் பற்றிய வாசகம் உடையவர் என்பதே சிறந்த கருத்தும் பொருளும் உரையும் ஆகும். அத்தகைய

"வாசகம் வல்லார் முன்னின்று யாவர்வாய் திறக்க
வல்லார்"

என்று தமது இராமாவதாரத்தில் கம்பரும் கவின் பெறப் போற்றியிருப்பதைக் கற்ருேர் அறிவார்கள்.

நமது சைவ சமய குரவர்கள் தம் காலத்து அரசியல் உலகிலும் சீரும் சிறப்பும் செல்வாக்கும் பெற்றுத் திகழ்ந் தார்கள் என்பதை உற்ருேர்தல் ஈண்டைக்குப் பொருத்த மாகும். திருஞானசம்பந்தரை மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மதுரைக்கு அழைத்து வந்து சைவத் தைப் பரவச் செய்தார்கள். சோழன் மகளும் பாண்டிமா தேவியுமான மங்கையர்க்கரசியாரின் கணவனை நின்ற சீர்நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னனுடைய உடற் கூனையும் உளக் கூனையும் திருத்தி அவன் வெப்ப நோயைக் களைந்து சமண மன்னனுகிய அவனுக்கு

நல்லறிவு புகட்டிச் சைவனுகச் செய்த பெருமை சீர்காழிப் பிள்ளையாருக்குச் சிறப்பாக உண்டு.

இதுபோல் சுந்தரமூர்த்தி நாயனுரும் மன்னர்களோடு தொடர்பு கொண்டவர். அவர் பாலருவாயராய்த் தெருவில் சிறு தேருருட்டி விளையாடிய பொழுதே நரசிங்க முனையரையர் என்னும் அரசரின் உள்ளத்தைக் கவர்ந் தவர். கண்ட அந்நாள் முதல் அவ்வரசரே அவரை வளர்ப்புப் பிள்ளையாய் எடுத்து அரச வாழ்க்கை ஆடம்பரங்களோடு அருமையாய் வளர்த்து வந்தார். பின்னர், இறைவன் திருவருளால் சுந்தரருக்குக் கழறிற்றறிவார் என்னும் சேரமான் பெருமாள் நாயனுரின் நட்பும் கிடைத்தது. அவர் சேரநாட்டு மன்னர். அதுபோல் சோழபாண்டிய மன்னர்களுடைய நேசமும் பூசனையும் பின்னர் சுந்தரருக்கு ஏற்பட்டன.

நாவரசர் மணிவாசகர் இருவரும் வாழ்ந்த காலத்தில் பேரரசராய்த் தோன்றிய மன்னர்கள் முதலில் அவர்களைத் துன்புறுத்தக் காரணமாய் இருந்து, பின்னர்த் தங்கள் தவற்றை உணர்ந்து, அவர்கள் தாளடி பணிந்து அவர் களின் ஏவலாளராய் வழிமொழிந்து நின்றனர் என்பது நோக்கத்தகும். திருநாவுக்கரசர் காலத்தில் மகேந்திர வர்மன் என்னும் பல்லவன் காஞ்சிபுரத்தில் பேரரசனுய்த் திகழ்ந்தான். அவன் முதலில் சமண சமயத்தைத் தழுவி யிருந்தான். அப்பொழுது திருநாவுக்கரசரும் சமண சமயத் தைச் சார்ந்து தருமசேனர் என்னும் பெயரோடு விளங் கினுர். பின்னர்ச் சிவபெருமான் சூலை நோயைக் கொடுத்து அப்பரைத் தடுத்தாட்கொண்டு சிவநெறிக்கு மீட்பித்தார். அதுகண்டு பொருத சமணர்கள் பல்லவ மன்னனின் துணை கொண்டு அப்பருக்கு நஞ்சைக் கொடுத்தும், யானையால் இடறச் செய்தும், நீற்றறையில் அடைத்தும், கல்லோடு பிணித்துக் கடலில் தள்ளியும் கொல்ல

முயன்றனர். அப்பர் எதற்கும் அஞ்சாது, நமசிவாய மந்திரத்தை நாவால் ஓதி நாதன் அருளால் நலிவடையா திருந்தார். இவ்வதிசயத்தைக் கண்ட பல்லவ மன்னன் உண்மையை உணர்ந்து சைவ சமயத்துக்கு மாறினுன். மகேந்திரவர்மனுன இப் பல்லவனைக் குணபரன் என்றும் குணதரன் என்றும் வழங்குவர். திருச்சிராப்பள்ளிக் குகையில் காணப்படும் இவன் காலத்து வடமொழிக் கல் வெட்டில் இவன் சமண சமயத்திலிருந்து சைவம் புகுந்த செயல் கூறப்பட்டுள்ளது. இவன் சமணத் தொடர் பினின்றும் வீடுபெற்றுச் சைவன் ஆனதும் பாடலி புத்திரத்திலிருந்த அமண குருமார் தங்குமிடமாகிய பள்ளி களையும் சமண்பாழிகளாகிய கோயில்களையும் ஒருங்கே இடித்துக் கொண்டுவந்து திருவதிகை நகரில் நுதற் கண்ணுடைய சிவபெருமானுக்குக் குணபர ஈச்சரம் என்ற திருக்கோயிலைக் கட்டினுன். இதனைச் சேக்கிழார் பின்வரு மாறு புகல்கின்ருர்:

“புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பல்லவனுந் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய
அல்லலொழிந் தங்கெய்தி யாண்டவர சினைப்பணிந்து
வல்லமணர் தமைநீத்து மழவிடையோன் தாளடைந்தான்.
வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனுந் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொடு பா ழிகளுங்
கூடவிடித் துக்கொணர்ந்து குணபரவீச் சரமெடுத்தான்.”

இதுபோல், திருவாதவூரரும் முதலில் அரிமர்த்தன பாண்டியனுலே சிறப்புச் செய்யப்பெற்று, அவனுக்கு முதல் மந்திரியாய் விளங்கினுர். போர்க்குதிரைகளின் குணம் குறி இலக்கணங்களையெல்லாம் நன்கு தேர்ந்த ஒரு குதிரைப்படைத் தலைவராகவும் அவர் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், பாண்டியன் படைக்கு வேண்டிய குதிரைகளை வாங்கி வருவதற்கு அவரையே அம்மன்னன்

தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்தான். அரச கருவூலத்தி லிருந்து நிதித்திரளை வாரிக் கொண்டு குதிரை வாங்கி வரப் புறப்பட்டார் வாதவூரர். திருப்பெருந் துறையில் இறைவன் குருவடிவில் வந்து அவரை ஆட்கொண்டு சிவஞானத்தை அளித்தருளினன். மணிவாசகர் கொண்டு வந்த பொன்னையெல்லாம் செலவிட்டுத் திருப்பெருந் துறையில் பெரிய கோயில் ஒன்றைக் கட்டி இறைவனை வழிபடலானர். அதனை அறிந்த பாண்டியன் சீற்றம் கொண்டு அவரை அழைத்துவரச் செய்தான். அவரைக் காக்கும்பொருட்டு இறைவன் நரிகளைப் பரிகளாக்கிக் காட்டி மறைத்தான். அதனல் பாண்டியனின் சினம் பன்மடங்கு பெருகியது. துதிக்கும் பக்தரைக் கொதிக்கும் வைகை மணலில் கல்லைச் சுமந்து நிற்க வல்லை ஏவினன் அரசன். அடியார் உள்ளம் உருகியது. ஆற்றில் வெள்ளம் பெருகியது. கரைபுரண்ட வெள்ளத்திற்கு அணைகோல ஆட்கள் விரைந்தனர். பிட்டுப்பொடியும் பிரம்படியும் ஏற்றுக்கொள்ள இறைவனும் கூலியாளாய் வேடம் கட்டினன். முட்டிக் குனிந்த பாண்டியனும் அறிவு தட்டி னன். மன்னன் மணிவாசகரின் பெருமையை உணர்ந்து அவரைப் பணிந்து, தன் அரியணையை அவருக்கு அளிக்க முன் வந்தான். அதனை மறுத்த மணிவாசகர் ஞானத்துறவியாய் ஞாலம் சுற்றத் தொடங்கினர். இவ் வரலாறுகளால் அப்பரும் வாசகரும் அரசியல் உலகில் அக்காலத்தில் எத்தகைய சீரும் சிறப்பும் பெற்று விளங் கினர்கள் என்பதும், மன்னர்கள் எவ்வாறு அவர்களைப் போற்றினர்கள் என்பதும் நன்கு புலனகும்.

அங்ஙனம இருந்தும் அவ்வடியார்கள் மன்னர்களை மதித்ததும் இல்லை, அவர்களுக்கு அஞ்சி ஏவல் புரிந்ததும் இல்லை. சமண சமயத்தை நீத்துச் சிவநெறிக்கு ஆளாகி விட்டார் திருநாவுக்கரசர் என்பது தெரிந்தவுடன் தங்கள் நெறிக்குப் பெரும்பழி வந்துவிட்டதாகச் சமணர்

கள் அஞ்சினர்கள். அவர் இருக்கும்வரை தங்கள் சமயம் தலையெடுக்க முடியாது என்பதை நன்குணர்ந்து அப்பரை ஒழித்துவிட வேண்டும் என்று கருதித் தங்கள் சொற்படி ஒழுகிவந்த மகேந்திரவர்மனிடம் இல்லனவும் பொல்லனவும் பல்லனவாய்ச் சொல்லி அப்பரைப் பிடித்துக் கொண்டுவர வேண்டினர்கள். காவலனும் ஏவலரை நாவரசர் மேல் விடுத்தான். பெரும்படை யொன்று திரண்டு வந்தது. அப்பர் அரசன் கட்டளையை எட்டுணையும் மதிக்கவில்லை. "நீங்கள் யார்? உங்களை ஏவி விட்ட அரசன்தான் யார்? களவு, கொலை முதலிய குற்றம் எதுவும் எம்மிடம் கிடையாது. நாம் சிவபெருமான் ஒரு வனுக்கே அடிமை. நாம் வேறு எந்த அரசனுக்கும் அடிமை இல்லை. உங்கள் அரசன் அஞ்சுகின்ற இயம னுக்கும் நாம் அஞ்சமாட்டோம். மறுமையிலும் எமக்கு நரக வேதனை கிடையாது. நாம் பொய் வாழ்வு வாழ மாட்டோம். நாம் பேரின்பக்களியினால் பெருமிதத்தோடு இருப்போம். நோய் முதலியவற்றாலும் மலப்பிணிப்புக் களாலும் அல்லற்படோம். நாம் ஒருவருக்கும் கீழ்ப்படோம். இன்பம் தவிரத் துன்பம் இன்னதென்று அறியாதபடி இறைவன் திருவடி நீழலில் இணைபிரியாதிருப்போம்" என்று முழங்கினர் :

" நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே."

இத்தெய்வ மறைத் திருநெறிய தீந்தமிழ்ப் பாடல் சிவநேசச் செல்வர்களின் சுதந்திரப் பிரகடனமாய்த் திகழ்

கிறது. சிவனடியார்களின் உரிமைப் பட்டயமாய் ஒளி விடுகிறது; பாசப் பிணிப்பினின்றும் விடுபட்டு வீடு பெற்ற ஓர் உயிரின் வெற்றிப் பறையொலி கொண்டெழு வீர முழக்கமாய் விளங்குகிறது; செந்தமிழின் இன்பச் சாற்றினை வடித்துத் தெளியவிட்ட தேறல் வெள்ளமாய்த் தித்தித்து நம்மை இறும்பூது கொள்ளச் செய்கிறது. இப் பாடலை இசைக்குந்தோறும் நம் உள்ளத்தில் ஓர் இன்ப உணர்ச்சியும் விடுதலை வேட்கையும் வாழ்க்கையில் ஒரு புது மலர்ச்சியும் உண்டாகும். சிவனடி சேர்ந்த உயிர் சிவமாகி நிற்கின்ற தன்மை இப்பாடலில் நன்கு வெளியாகிறது. நாம் ஆர்க்கும்குடி அல்லோம் என்பதால் தன் வயத்தனாதலும், நமனை அஞ்சோம் என்பதால் தூய உடம்பினனாதலும், நரகத்தில் இடர்ப்படோம் என்பதால் இயற்கை உணர்வினனாதலும், நடலை இல்லோம் என்பதால் இயல் பாகவே பாசங்களின் நீங்குதலும், ஏமாப்போம் என்பதால் பேரருளுடைமையும், பிணி அறியோம் என்பதால் முற்று முணர்தலும், பணிவோம் அல்லோம் என்பதால் முடி விலாற்றலுடைமையும், இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை என்பதால் வரம்பிலின்பமுடைமையும் பெறப்படும். இவை இறைவனுக்குரிய எண் குணங்கள். சிவபெருமான் திருவடிகளை யடைந்ததால் இவை தமக்கு உண்டாயின என்று அப்பர் கூறுகிறார். சிவபெருமானுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையாதல் நோக்கித் தாமார்க்கும் குடி யல்லாத் தன்மையன் என்றும், ஒரு காதிற் குழையும் ஒரு காதில் தோடும் அணிந்த மாதொரு பாகனாய் அம்மையப் பரின் திருவுருக் கொண்டிருத்தல் நோக்கிச் சங்கக் குழை யோர் காதிற் கோமான் என்றும் சிவபெருமானின் சிறப் பியல்புகளைத் தெளிவுபடுத்தினார். சீவனாய் நின்ற உயிர் இறைவன் திருவடியடைந்ததும் சிவனாகின்ற முறையும் இப்பாடலில் விளக்கமுறுகிறது. அவ்வாறு இறைமைக் குணங்களை அடைந்தாலும் சீவன் முத்தனாகிய உயிர் சிவ

னுடைய திருவடியாகிய வியாபகத்தன்மையுள் வியாப்பிய மாய் ஒடுங்கி அடங்கவேண்டும் என்பதைக் "குறுகி னோமே" என்ற சொல் தெளிவிக்கிறது. உயிர் தன் முனைப்புக்கெட்டு ஒடுங்குதலே இங்குக் குறுகுதலாகும். இவ்வாறு ஆழ்ந்த கருத்துக்கள் பல இப்பாடலிற் செறிந்து மிளிர்கின்றன. தன்னைத் தொழுது வந்தடையும் அடியவர்க்கு இறைவன் தனது இறைமைக் குணங்களை அளித்து, அடிமைத்தளையை அகற்றி இன்பம் ஊட்டு கிருன் ஆதலின் அவனுக்கே நாம் மீளா ஆளானோம் என்று பாடுகிருர் அப்பர் அடிகள்.

இதேபோல் பாண்டிய மன்னனின் படைவீரர்கள் திருபெருந்துறைக்குச் சென்று மணிவாசகரை அழைத்த பொழுது அவர் மன்னன் ஆணைக்கு அஞ்சவில்லை; தாம் எந்த மன்னனுக்கும் குடி இல்லை, அடிமை இல்லை, அச்சமும் இல்லை என்று நாவரசரின் நன்மொழிகளையே நாவீறு கொண்டு நவின்று நின்ருர். அப்பர் அடைந்த அந்நிலையையே அவரும் அவ்விடத்தில் அப்பொழுதே பெற்று நின்று அங்ஙனம் பேசினர்.

ஆண்டானகிய சிவபெருமான் அடிமையாகத் தம்மை ஆட்கொண்டபின் அவருக்கு உலகம் காட்சிப்படாது சிவமே காட்சிப்படுதலின், " யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்" என்ருர்.

" திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேர் அறுத்தபின் யாவரையும் கண்டதில்லை "

என்று அடிகள் தெள்ளேணம் கொட்டியது காண்க. திருவாசகத்தில் அவர் பாடிய மற்றும் ஒரு பாடலிலிருந்து இதை நாம் யூகித்தறியலாம். அப்பாடல் வருமாறு:

"தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை

யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியா ரோடும்
மேல் மேலுங் குடைந்தாடி யாடு வோமே."

இப்பாடலில் முதல் ஐந்து வரிகளில் சிவபெருமானின் தலைமையையும் இறைமையையும் முதன்மையையும் பெருமையையும் தெளிவுபடுத்திக் கூறுகிறார். தேவர்கோ என்பது இந்திரன். இந்திரனாலும் அறியமுடியாத மகாதேவன் சிருபெருமான் என்றார். இது கேனோபநிடதத்தில் கூறப்படும் ஒரு நிகழ்ச்சியைக் குறித்ததாகும். இந்திரன் ஒரு காலத்தில் தானே தலைவன் என்று தலை தருக்கினான். அப்பொழுது பரமசிவன் ஓர் இயக்கனாகத் தோன்றி ஒரு துரும்பை நட்டு "இதை அசைத்தவரே முதற்பொருளாவார்" என்று சாற்றினார். இந்திரனும் மற்றைத் தேவர்களும் அதை அசைக்க முடியாது தளர்வுற்றனர். சிவபெருமான் மறைந்து விட்டார். பின்னர் உமாதேவியார் வானில்தோன்றி "இவ்வியக்கனே பிரமம்" என்று கூறிச் சிவபெருமானின் பரம்பொருள் தன்மையை வெளிப்படுத்தினர் என்று அந்நூலில் கூறப்படுதலால் தேவர்கோ அறியாத தேவதேவன் என்றார். வளமையான எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கின்ற நான்முகன், மால், உருத்திரன் மூவரும் பிறப்பு இறப்பு உள்ளவர்கள். அவர்களை உள்நின்று இயக்கி அநாதியே பிறப்பு இறப்பு இல்லாதிருக்கிற சிவபெருமானை மூவர் கோனாய் நின்ற முதல்வன் என்றார். பிரளய காலத்தில் எல்லா உயிர்களையும் தன்னுள் ஒடுக்கிக் கொண்டு தான் அழியாதிருத்தலின் 'நின்ற' என்றார். உலகமெல்லாம் சிவபெருமானுடைய திருமேனியாக அமைதலின் அவனை மூர்த்தி என்றார். எல்லா உயிர்களுக்கும் தந்தையாகிய மும்மூர்த்திகளுக்கும் சிவன் தந்தையாதலின் அவனை மூதாதை (பாட்டன்) என்றார். சிவன் தனது பொது

வியப்பு நிலையில் அருட்சத்தியாகிய உமையோடு கூடி எவ்வுயிர்க்கும் தந்தை போன்று அருள்புரிதலின் அவனை மாதாளும் பாகத் தெந்தை என்றார். யாவர் கோன் என்றதனாலே தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் முழு முதல் தலைவன் என்பது கூறப்பட்டது. தம்மை மிகச்சிறியனாகக் கருதி 'என்னையும்' என்றும், 'வந்து' என்றதால் வலிய வந்து ஆட்கொண்டு அருளினான் என்றும் கூறினார். சிவபெருமான் தம்மை ஆட்கொண்டபின் அவ்வாறு முன்னே ஆட்கொள்ளப் பெற்ற அடியார் கூட்டத்தோடு அன்பினாலே உருகி விரும்பிச் சேர்தலின் மேவினோம் அவனடியார் அடியாரோடும் என்றார். இறைவன் தம்மை அடியார் கூட்டத்தில் சேர்த்தருளியதை அடிகள் அதிசயப் பத்திலும் கூறியிருத்தல் காண்க. பேரின்பத்தில் திளைக்கும் அடியார்களுக்குப் பெரும் போகம் புதிது புதிதாய் விளைந்து வருவதால் மேன் மேலும் குடைந்தாடி என்றார். ஆடியாடுதல் முழுகுதலையும் கூத்தாடுதலையும் குறிக்கும்.

'நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என்றார் நாவரசர். 'யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்' என்றார் மணிநாவர். 'நற்சங்க வெண்குழையோர் காதிற் கோமான்' என்று உமையோடு கூடிய சிவனை, அம்மையப்ப மூர்த்தத்தில் குறிப்பாகவைத்துச் சுட்டினார் நாவரசர். 'மாதாளும் பாகத்தெந்தை' என்று வெளிப் படுத்துப் பாடினார் மணிநாவர். 'சேவடியிணையே குறுகினோமே' என்றார் நாவரசர். 'மேவினோம் அவனடியார் அடியாரோடும்' என்றார் மணிநாவர். நாவரசர் 'கோமான்' என்றார். மணிநாவர் 'யாவர் கோன்' என்றார். இவ்வாறு இருவரும் அச்சம் தவிர்த்த ஆண்மையோடும் விடுதலை விளைத்த வீறுப்போடும் விம்மிதராகி வீரமுழக்கம் செய்கின்றார்கள். 'எனனையும்' என்பதில் திருநாவுக்கரசரைப் போல் என்னையும் என்றும், 'அவனடியாரடியாரோடும்' என்பதில் அத்திருநாவுக்கரச போன்ற அடியாரோடும் என்றும்

பொருள் கொள்ளும் விதத்திலும் மணிநாவர் பாடியிருப்பாரோ என்று நாம் மயங்கும் விதத்தில் திருவாசகப் பாடல் தித்திக்கிறது.

தேவர்க்கரசனும் தெரிதற்கரியவனுய் யாவர்க்கும் அரசனுய் அழியா முழுமுதலாகிய முதல்வன் வந்து ஆண்டு கொள்ளவும் தாம் அவனுக்கு அடிமையாகிவிட்ட பெரியார்கள் சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவுடைய இம்மண்ணுலக மன்னர்க்கு எவ்வாறு குடியாக முடியும்? ஆண்டவனுக்கு ஆட்பட்ட உயிர் வேறு எதற்கும் ஆட்படாது. இத்தகைய உணர்ச்சியே ஆனந்தக் களிப்பாகித் திருநாவுக்கரசரிடம் முனேவிட்டு, மணிவாககரிடம் மலர்ந்து பாரதியார் பாடலில் பழுத்தும் விட்டது என்றே சொல்லும் படியாய் அமைந்திருக்கிறது.

''பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம் பரி
பூரணனுக் கேஅடிமை செய்து வாழ்வோம்''

என்று சங்கநாதம் செய்தவர் பாரதியார் அல்லரோ? அவரும் ஆங்கில அரசாட்யை அஞ்சாது எதிர்த்து நின்ற சத்தி நிறைந்த சித்தராகவே நமக்குக் காட்சியளிக்கிருர். வாழையடி வாழையென வந்ததிருக் கூட்டமரபினில் அவரும் ஒருவர் எனக்கொள்ளுதல் சாலும். அத்தகைய அடியார் திருக்கூட்டத்தில் கலந்து கொள்பவருக்கு அச்சம் அறவே அற்றுப் போகும். அதற்கொண்டே 'மேவினேம் அவனடியார் அடியாரோடும் என்ருர் மணிவாசகர், 'மேன் மேலும் குடைந்தாடி யாடுவோமே' என்ற மணிவாக்கைத் தொடர்ந்து பிடித்துக் கொண்டுதான் பாரதியாரும் 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே, ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் என்று, ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே' என்று எக்களித்துப் பாடினுர் போலும். இவ்வாறு அடியார்க்கும் அடியார் திருக்கூட்டத்தில் கலந்திருப்பவர்களுக்கும் அச்சமோ கவலேயோ

குறையோ எதுவும் கிடையாது என்பதை அப்பர் அடிகளும் கூறுகிறார்.

"விடையான் விரும்பி என் உள்ளத்திருந்தான் இனி நமக்கிங்கு
அடையா அவலம் அருவினை சாரா நமனை அஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையான் அடியார் அடியடியோங்கட் கரியதுண்டே."

இவ்வாறு அடியார்கள் பெருமையை உணர்ந்து அவர் திருவடியை அடைந்து ஆளாகிக் கலந்திருப்பதுதான் பேரறிவு. ஞானப் பால் உண்ட திருஞான சம்பந்தருக்கு 'எப்பொருளும் ஆக்குவான் ஈசனே எனும் உணர்வும், அப்பொருள்தான் ஆளுடையான் அடியார்கள் எனும் அறிவும்' சிவஞானமாய்க் கைவரப் பெற்றன என்பதை யாவரும் அறிவர். 'மாலறநேயம் மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே' என்று மெய் கண்டார் மெய்மொழியும் சீவன்முத்தர் செய்ய வேண்டிய தொழிலாக அறுதியிடுகின்றது! 'இணங்கத் தன் சீரடியார் கூட்டமும் வைத்து' என்ற மணிவாக்கை நாம் மறக்க முடியுமா? அதுவே மணிவாசகரின் அடிமனத்தே அழியாது ஊறிக் கிடந்த உயர்கருத்து என்பதை அவர் வாசகமே சான்று பகர்கின்றது:

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதானல் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே."

மணிவாசகரின் இக்கருத்தே சைவ சித்தாந்தத்தின் முடிவான கருத்தும் ஆகும். ஆண்டவனை அகத்தில்

இருத்தி அடியார் குழாத்தின் நடுவில் இருக்கும் அதுவே இந்த உயிருக்குப் பிழைத்துப் போகும் வழி. அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் என்றார் மணிநாவர். அதுபோல் அப்பர் அடிகளும் 'விடையான் விரும்பி என் உள்ளத்திருந்தான்' என்றார். இதனால் சிவனை மனதி லிருத்திய வண்ணமே அவன் அடியார் திருக்கூட்டத்தில் இருக்க வேண்டும் என்பது நன்கு தெளிவாகும். அப்பொழுது அச்சம் அகலும்.

'நமனை அஞ்சோம்' என்றார் நாவரசர். "கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்" என்று கூறுகிறார் மணிநாவர். "தென்றிசைக் கோன் தானே வந்து கோவாடிக் குற்றேவல் செய் கென்றாலும் குணமாகக் கொள்ளோம்" என்று அப்பர் அதிர்ந்து முழங்குகிறார். 'வரைபுரண்டி டினும் அஞ்சேன்' என்றும், 'தறிசெறிகளிறும் அஞ்சேன் தழல்விழியுழுவை அஞ்சேன்' என்றும் மணிநாவர் புகல் கிறார். அதேபோல் மலைவிழுந்தாலும் யானைவந்தாலும் நிலைகலங்க வேண்டாம் என்று அப்பர் நம்மை நோக்கிக் கூறுகிறார் பாருங்கள்.

"மலையே வந்து விழினு மனிதர்காள்
நிலையி னின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே."

சமணர்களால் ஏவி விட்ட யானை திருநாவுக்கரசரை வணங்கிப் பணிந்து விட்டுத் தன்னை முடுகிவிட்ட சமணர் களையே அழித்த நிகழ்ச்சி அப்பர் வரலாற்றிலே காணக் கிடக்கின்றது. மற்றும் மணிவாசகர் 'மன்னரோடு உறவும் அஞ்சேன்' என்று கூறுகின்றார். அப்பர் அடிகளும் 'பாராண்டு பகடேறி வருவார் சொல்லும் பணிகேட்கக் கடவோமோ பற்றற்றோமே' என்று பாடுகின்றார்.

இன்னொரு பாடலில் மணிவாசகர் நாட்டையாள்கின்ற வேந்தர்களைத் தாம் பெரிதாகக் கருதி அஞ்சி வாழ்ந்ததில்லை என்று பாடுவதைப் படிக்கும் பொழுது நம் உடல் சிலிர்க்கின்றது.

'யானேதும் பிறப்பஞ்சேன்
இறப்பதனுக் கென் கடவேன்
வானேயும் பெறில் வேண்டேன்
மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயும் மலர்க் கொன்றைச்
சிவனேயெம் பெருமான் எம்
மானேயுன் அருள் பெறுநாள்
என்றென்றே வருந்துவனே.'

அஞ்சத் தக்கதாகிய பிறப்பிற்கே அஞ்சமாட்டேன் எனின், அத்துணை அஞ்சத் தகாதது ஆகிய இறப்பைப் பற்றியான் செய்யக் கடவது யாதுளது என்பார், 'இறப்பதனுக்கு என்கடவேன்' என்றார்; அஃதாவது, இறத்தலைக் குறித்து யான் செய்யத்தக்கது யாதுளது? அஃதொரு பொருளன்று என்பதாம்.

'வானேயும் பெறில் வேண்டேன்' என்றார் மணிவாசகர். ஆம்; அப்பரும் மணிநாவரும் மண்ணாள்வாரையும் மண்ணாள்வதையும் மதித்ததில்லை என்பதென்? விண்ணாள்வாரையும் விண்ணாளும் விழுமிய பதவியையும் அவர்கள் விழைந்ததில்லை, மதித்ததும் இல்லை. இந்திர போகத்தையும் வானுலகாட்சியையும் அவர்கள் இனிதாகக் கொண்டதில்லை. அவற்றை ஒரு பெரும் பேருகவும் கருதியதில்லை. தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியத்தையும் சிவனருளையுமே அவர்கள் விரும்பினர். அப்பர் பாடுகிறார் பாருங்கள்:

"அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
கண்டுவீற் றிருக்கும் கருத் தொன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே.'

இன்னொரு பாடலில், சிவனுக் கன்பில்லாதார் விண்ணையும் மண்ணையும் ஆளும்படி தமக்குக் கொடுத்தாலும் வேண்டாம் என்றும், சிவனடியார்களாயின் அவர்கள் பரம சண்டாளராய் இருப்பினும் கடவுளாகக் கை தொழுவேன் என்றும் அப்பர் உருக்கமாகப் பாடியுள்ளார் :

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானளத் தருவரேனும்
மங்குவா ரவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்குங் கடவுளாரே."

இதுபோல் மாணிக்கவாசகரும், "சிவனடியார்களோடு சேர்ந்து வாழும் வாழ்வுக்கு ஈடாக இந்திர பதவியையும் திருமாலின் வாழ்க்கையையும் நான்முகனின் நலமுழுதையும் நாடேன்! சிவன் அருள் ஒன்றையே நாடுவேன்" என்று கூறும் முகத்தால் சிவபெருமானைத் தவிர வேறு தெய்வங்களைக் கனவிலும் கருதேன், மனதிலும் மதியேன் என்றுமனமுருகிப் பாடுகிறார் :

"கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்கள் உத்தமனே."

இந்திரன் மால் பிரமன் வாழ்வு உலக வாழ்வினை நோக்க மிகச் சிறந்த வாழ்வாயினும் பேரின்ப வாழ்வு போல நிலைத்து நிற்காது அழியும் ஆதலின் அவற்றைக் கொள்ளேன் என்றார். குடியே கெடுவதாயினும் சிவனடியாரோடு அல்லாமல் வேறு யாருடனும் கூடேன் என்றார், அது சைவசித்தாந்தம் கண்ட உண்மையாதலின். நரகம் புகுந்திருத்தல் வேண்டும் என்று நின் திருவருளானை பிறக்குமாயின் அதனையும் மகிழ்ச்சியுடன் ஏற்பேன் என்றும் கூறினார். ஏனெனில் தலைவனாகிய ஆண்டவன் அடியவனுக்கு வேண்டுவதென்று எதனை நினைப்பானோ அதனையே அவ்வடியானும் வேண்டுவதன்றி வேறு எதையும் வேண்டுதல் அடிமைக்கு அழகாகாது என்பது தோன்ற 'இறைவா' என்று விளித்தார். முத்தியிலும் மேலான பரமுத்தி அளிப்பவன் சிவபெருமானே யாதலின் 'உத்தமனே' என்றார்.

'உள்ளேன் பிறதெய்வம்' என்று மணிவாசகர் கூறியது நமது சைவ சமய குரவர்கள் நால்வர்க்கும் ஒக்கும். திருத்தொண்டத் தொகையில் சுந்தரர் ஞான சம்பந்தரைப்பற்றிக் குறிப்பிடும்போது "வம்பரு வரிவண்டு மணநாற மலரும் மதுமலர் நற்கொன்றையான் அடியலாற் பேணு எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்" என்று கூறுவதும் ஈண்டு நினைக்கத்தகும். அப்பர் அடிகள் "பொதுநீக்கித் தனை நினைய வல்லோர்க் கென்றும் பெருந்துணையை" என்றும் "ஏற்றேன் பிற தெய்வம்" என்று கூறியதும் காண்க.

இங்கே சுந்தரர் சிவபெருமானை "வம்பரு வரிவண்டு மணம் நாற மலரும் மதுமலர் நற்கொன்றையான்" என்று சிவன் அணியும் கொன்றை மலரின் மணத்திலும், குணத்திலும், நிறத்திலும், புதுமையிலும், பெருமையிலும் ஈடுபட்டுக் கூறியது சிந்தனைக்குரித்தாகும். அதனால் திருஞானசம்பந்தர் சிவபெருமான் திருவடிகளுக்குப் பல

பிறவிகளில் அன்றலர்ந்த கொன்றை நறுமலர்களைக் கொண்டு அருச்சித்த திறமையும் அதனால் பெற்ற சிறப்பும் ஒருவாறு வியந்து பாராட்டப்பட்டிருப்பதும் ஓர்ந்துகொள்ளத் தகும்.

பாரதப் போர் பதின்மூன்றும் நாளாக நடந்துகொண்டிருந்தது. அருச்சுனன் மகன் அபிமன்னன் மிகக் கடுமையாகப் போர் செய்தான்; கௌரவர்கள் வளைத்திருந்த வியூகத்தை எறிந்து வீசி உள்ளே புகுந்து விட்டான். அவனுக்குப் பக்கத் துணையாக பீமன் பொருது கொண்டு வந்தான். அபிமன்னன் உதவிக்கு பீமன் வராதபடி தடுப்பதற்காக அபிமன்னன் நின்ற இடத்தைச் சுற்றிக் கொன்றை மாலையைப் போட்டுவிட்டனர் எதிரிகள். பகைவர் படையின் உட்புகுந்த அபிமன்னன் வெளியில் வர இயலாது தட்டழிந்தான். பீமனைத் துணைக்கு அழைத்தான். பீமன் ஒரு சிறந்த சிவபக்தன். சிவனுக்கு உரிய மாலையாகிய கொன்றையைத் தாண்டிக் கொண்டு உள்ளே புகுதல் கூடாது என்று திகைத்துப் போய் வெளியிலேயே நின்றுவிட்டான் பீமன். இளைஞன் அபிமன்னன் வீரப் போர்புரிந்து துறக்கம் புகுந்தான். இவ்வாறு கொன்றை மாலையின் சிறப்பு பாரதத்தில் பேசப் பட்டுள்ளது.

கொன்றை மாலையின் சிறப்பினையும் புகழினையும் பாடினால் சிவனைப் பாடினதற்கு ஒப்பாகும். ஆகவே திருவெம்பாவையில் "சூழ் கொன்றைத் தார் பாடி" என்று பாடினர் மாணிக்கவாசகர். கொன்றை சூடி அல்லது கொன்றையான் என்று சிவபெருமானுக்கு ஒரு பெயர் உண்டு. கொன்றைப் பூவிற்குப் புறத்தே ஐந்து இதழும் அகத்தே நடுவண் ஓங்காரவடிவமான அகவிதழும் உடைமையால் பிரணவத்தை உள்ளே கொண்டு விளங்கும் திருவைந்தெழுத்தைப் புலப்படுத்தலால்

கொன்றை மலர் சிவனுக்கு மிகவும் உகந்ததாயிற்று. தார் மாலை, கண்ணி என்னும் வகை யெல்லாம் சிவனுக்குக் கொன்றை மலர் ஆதலின் 'சூழ் கொன்றைத் தார்பாடி' என்றார் மணிநாவர். சிவபெருமான் உறைகின்ற இடங்கள் பலவற்றையும் கூறிவரும் பாடல் ஒன்றில் கொன்றை மலரையும் ஒன்றாகப் பிணைத்து அப்பர் பாடி யுள்ள அற்புதத் திருத்தாண்டகம் ஒன்றும் இங்கே நோக்கத்தகும் :

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கின் உள்ளான்
வாயால் தன்னடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பால் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதில் உள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றில் [உள்ளான்
கனத்கத்ததான் கயிலாயத்து உச்சி யுள்ளான்
காளத்தி யான்அவன்என் கண்ணுள் ளானே"

சிவனுக்குக் கொன்றைப் பூ சிறப்பாக உரியது என்று சங்க இலக்கியத்திலும் பேசப்படுகின்றது. புறநானூறு கடவுள் வாழ்த்துப் பாடல்:

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பில் தாருங் கொன்றை"

என்று தொடங்குகிறது. பதிற்றுப் பத்துக் கடவுள் வாழ்த்தில்,

"விரியிணர்க் கொன்றையம் பைந்தார் அகலத்தான்"

என்று காணப்படுகிறது அதுபோல் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்திலும்,

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்"

என வந்துள்ளது. தார் ஒரு விசேடமாக இடுவது; மாலை அழகுக்கு இடுவது; கண்ணி போர்ப்பூ, மலர்களைச்

சேர்த்துத் தொடுப்பது தார், கட்டுவது மாலை, தனித்துத் தொடுப்பது கண்ணி என்பதும் அறிய வேண்டுவதாகும். கொன்றைத் தாரை இறைவனது திருவடியிலும் சாத்து வார்கள் என்பதை "அணி தில்லைச் சிவனடிக்குத் தார் அணி கொன்றையன்" (திருக்கோவையார்-400) என்ற மணிவாக்காலும் அறியலாம்.

உலகியலில் காதலன் அணிந்திருக்கும் பூமாலையை அடைவதற்குக் காதலி காமுறுவாள். பாண்டியன் வேப்பந்தாரையும் சோழன் ஆத்தி மாலையையும் சேரன் பனம்பூவையும் வேட்டுப் பெண்கள் மெலிந்ததாகப் புலவர்கள் பாடல் பாடுவது மரபு. அதுபோல் சமயத் துறையிலும் உயிரைப் பெண்ணாகவும் இறைவனை நாயக னாகவும் வைத்து, இறைவனின் கொன்றை மாலையைக் காமுற்றுப் பெண்ணான உயிர் இரங்குவதாகப் பாடுவது இயல்பாகும். இவ்வாறு திருநாவுக்கரசர் பல பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று வருமாறு :

"பொங்கோத மால்கடலிற் புறம்புறம்பே யிரைதேரும்
செங்கால்வெண் மடநாராய் செயற்படுவ தறியேன்நான்
அங்கோல வளைகவர்ந்தான் அணிபொழில்சூழ் பழனத்தான்
தங்கோல நறுங்கொன்றைத் தார்அருளா தொழிவானே."

இறைவனுடைய கொன்றை மாலையை வேட்டு ஒரு பெண் நாரைப் பறவைகளை நோக்கிப் பாடியதாக அப்பர் அழகாகப் பாடியுள்ளார். அல்லது தம்மையே பெண்ணாக வைத்துப் பாடியதாகவும் கொள்ளலாம். இவ்வாறு கொன்றை மாலையை வேட்டு மெலிகின்ற பெண்ணுக்கு இறைவன் மனம் உவந்து கொன்றை மலரைக் கொடுத்தால்தான் அவள் மனக்கவலை தீரும். கழன்று விழுகின்ற கைவளையல்களும் இறுகிக் கழலாது கையில் விளங்கும்; மெலிவு நீங்கி உடல் பூரிக்கும்,

அவளுடைய பசலை நோயும் தீரும் என்று அப்பர் மற்றொரு பாடலில் குறிக்கின்றார்:

"சித்தந் தேறும் செறிவளை சிக்கெனும்
பச்சை தீரும் என் பைங்கொடி பால்மதி
வைத்த மாமயி லாடு துறையரன்
கொத்தி விற்பொலி கொன்றை கொடுக்கிலே."

ஒரு பெண் சிவபெருமானிடம் கொன்றையைப் பெற்று வருவதாகக் கொண்டு, அது சிவபெருமானால் எவ்வாறு கொடுக்க முடிந்தது என்றும் அப்பர் வியந்து பாடுகிறார். ஏனெனில் மார்பிலே கிடக்கிற கொன்றை மாலையைக் கழற்றினால் இடபாகத்திலே யிருக்கிற உமா தேவியார் தடுத்து விடுவார். தலையிலே தரித்திருக்கிற கொன்றையங்கண்ணியை அவிழ்த்தால், கங்கா தேவி விடமாட்டாள், கண்டிப்பாய் மறுத்திருப்பாள். வேறு எங்கிருந்தும் அவர் பெற்றிருக்க முடியாது. ஏதாவது கடையிலிருந்து வாங்கிக் கொடுத்துவிட்டாரா என்று கேட்பதுபோல், இப்பெண்ணுக்குக் கொன்றை மாலையைக் கொடுக்க அவருக்கு எப்படி முடிந்தது? என்ன ஆச்சரியம் என்று பாடுகிறார் பாருங்கள்:

"மங்கை காணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார் முடிக் கண்ணியை
நங்கைமீர் இடைமருதர் இந்நங் கைக்கு
எங்கு வாங்கிக் கொடுத்தார் இதழியே."

(இதழி-கொன்றை)

இதுபோல் மணிவாசகரும் அகத்துறைப் பாடலில் கொன்றையை அமைத்துப் பாடும் திறம் அற்புத மாயிருக்கும். ஆகா! அக்கொன்றை மலரைச் சூடின வுடனே அவர் உள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சிகள் தாம் எத்தகைய தெய்வத் தன்மை வாய்ந்தவை! அவர் ஒரு பெண்ணாகவே மாறிவிடுகிறார். சிவனது கொன்றைப்

பூவைச் சூடினவுடனே சிவனது திரண்ட தோள்களை அணைத்துக் கொண்டது போன்ற உணர்ச்சி மேலிடுகிறது. அவ்வாறு கூடிக்கலந்து முயங்கி மயங்கி ஊடவும் செய்கிறார்; இறைவனது செவ்விதாகிய வாயினின்று ஊறும் அமுதம் பெறக் கருதி ஊடினது தவறு என்று உள்ளம் உருகுகிறார்: அதனையடையும் வழிவகைகளை ஆராய்கிறார். தேடும் பொருளும் சிவன் கழலே எனத் தெளிகிறார். அதனைச் சிந்தையால் தியானிக்கிறார். அகமும் முகமும் வாட்டம் அடைகிறார்; அருள் பெற்று மலர்ச்சி அடைகிறார். இத்தனை உணர்ச்சி மாற்றங்களையும் ஒரு கொன்றைமலர் தந்துவிடுகிறது. அவ்வழகிய அம்மானைப்பாடல் வருமாறு:

"சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன் திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கி நின்று
ஊடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்."

இஃது ஒரு கிடைத்தற்கரிய சிவானந்தப்பேரனுபவம். இது போன்ற பேரின்ப நுகர்ச்சிகள் அப்பர் அடிகளுக்கும் அடிக்கடி நிகழ்வதுண்டு. தம்மை ஒரு பெண்ணாகப் பாவிப்பதும், சிவபெருமான் சுந்தரம் வேடம் கட்டி அவரிடம் பலி கேட்டுவருவதும், அவர் பிச்சை கொண்டு இறைவனை நெருங்குவதும், மயங்குவதும் முயங்குவகும் போன்ற உணர்ச்சிகள் ஏற்படுவதும், பிரிந்து வாடுவதும் போன்ற எண்ணங்கள் அவர் தூய உள்ளத்திலே தோன்றாநிற்கும். அவற்றை அமைத்து எத்தனையோ அகத்துறைப் பாடல்கள் பாடியுள்ளார். ஒப்புமைக்காக ஒன்றைமட்டும் பார்ப்போம்:

"நிலைப்பாடே நான்கண்ட தேடீ கேளாய்
நெருநலைநற் பகலிங்கோர் அடிகள் வந்து
கலைப்பாடுங் கண்மலருங் கலக்க நோக்கிக்
கலந்து பலியிடுவேன் எங்குங் காணேன்
சலப்பாடே யினியொரு நாட் காண்பே னாகில்
தன்னாகத் தென்னாகம் ஒடுங்கும் வண்ணம்
உலைப்பாடே படத்தழுவிப் போக லொட்டேன்
ஒற்றியூர் உறைந்திங்கே திரிவா னையே."

இது நிற்க, அரச வாழ்க்கையையும் இந்திர போகத்தையும் அப்பரும் மணி நாவரும் விரும்பவில்லை என்றால், வேறு ஏதேனும் சொத்து சுகம் உடையராய் இருந்தனரோ என்றால், இல்லை. ஓடும் கவந்தியுமே உறவென்று வாழ்ந்தவர் மணிவாசகர். கந்தை மிகையாம் கருத்துடையவர் நாவரசர். அவர்களுக்கு வீடு வாசல் கிடையாது, உண்ண உணவில்லை, ஒதுங்க நிழல் இல்லை, கையில் ஒரு காசும் இல்லை. வீட்டுக்கு ஆசைப்பட்டாரை வீட்டை விட்டு விரட்டியே வேட்டாண்டியாய் உலகில் ஓட்டாண்டி ஆக்குபவர் சிவபெருமான் அல்லவா? அத்தகைய ஆண்டி நிலை தான் இவர்களுக்கும் அடுத்து நின்றது. இதனைத் திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவர் திருவாதவூரர் வரலாற்றில் குறிப்பிடுகிறார்:

"ஊரெலாம் அட்ட சோறு நம்மதே யுவரி சூழ்ந்த
பாரெலாம் பாயல் துன்னற் கோவணம் பரிக்கும் ஆடை
சீரெலாஞ் சிறந்த சாந்தம் தெய்வநீ றணிபூண் கண்டி.
நீரெலாஞ் சுமந்த வேணி நிருத்தன்ஆட் கொண்ட அன்றே."

இது பரஞ்சோதியார் திருவாக்கு. திருவாசகத்தின் கருத்தை முழுதும் வாங்கிக் கொண்டுதான் பாடியிருக்கிறார். எவ்வளவு அழகாகவும் செறிவாகவும் பாடியிருக்கிறார் என்று வியந்தேன். ஆனால் இஃது அப்பர் பாடல் ஒன்றின் கருத்துதான் என்பதை அறிந்த பொழுது நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. மணிவாசகரைப்

போன்றதொரு வாழ்க்கையையே அப்பரும் மேற்கொண்டிருந்தார். அவர் பாடிய பாடலிருந்தே அவரது வறிய வாழ்க்கையின் நிலையைக் கண்டு ஒப்புமை கொண்டு உளம் போற்றலாம்:

"அகலிடமே இடமாக ஊர்கள் தோறும்
அட்டுண்பார் இட்டுண்பார் விலக்கார் ஐயம்
புகலிடமாம் அம்பலங்கள் பூமி தேவி
உடன்கிடந்தால் புரட்டாள்பொய் யன்று மெய்யே
இகலுடைய விடையுடையான் ஏன்று கொண்டான்
இனியேதுங் குறைவிலோம் இடர்கள் தீர்ந்தோம்
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொற்கேட்கக் கடவோமோ துரிசற் றேமே".

ஆகா! தித்திக்கும் அப்பாடல் நம் சித்தம் நிறை கொண்டு புத்தியைப் புகட்டி வித்தகம் விளக்கும் ஒரு விநோதப் பாடல்! எத்தனை அருமை! ஆகா! நகைச் சுவை ததும்ப நாவரசர் இப்பாடலில் செல்வரைப் பார்த்துச் சிரிக்கிறார். விளையாட்டும் காட்டுகிறார். இந்த உலகமெல்லாம் அவருக்குச் சொந்தமான இடம்தான் என்கிறார். ஊர் ஊராய்த் திரிந்து கொடுத்த இடத்திலே சோறு உண்டு வாழ்வாராம். இல்லையென்று ஒருவரும் விலக்கமாட்டார்களாம். சத்திரம், சாவடி, தெருத்திண்ணைகளே தங்கும் இடம். பட்டால் விரித்த அமளி வெறும் கட்டாந்தரைதான். பூமாதேவி மிகப் பொறுமைசாலி; பிடித்துத் தள்ளிவிடமாட்டாள் என்று அவர் சொல்லும் பொழுது நமக்கு அழுகையும் வருகிறது, சிரிப்பும் வருகிறது. வறுமையின் உயர் எல்லையிலே வதங்கி நிற்கும் அவர் "எனக்கு ஒரு குறையும் இல்லை, என் துன்பங்கள் எல்லாம் தீர்ந்துவிட்டன" என்று பூரித்து மகிழ்கிறார். இவ்வளவும் யாரைப் பார்த்துச் சொல்கிறார். பளப்பளபான பட்டாடைகள், பொன்னுடைகள், பீதாம்பரங்கள் முதலியன உடுத்தி வரும் செல்வச்சீமான்கள்; குலுங்கக் குலுங்க

அங்கமெல்லாம் மினுங்கத் தங்க விலங்கிட்டு இலங்கி நிற்கும் மன்னர்கள், இவர்களைப் பார்த்துச் சொல்கிறார். திருநாவுக்கரசர் தமது இடுப்பிலுள்ள ஒரு முழக் கந்தை யையும் ஒரு சுமையாகக் கருதினார். துகிலையும் தூசையும் தூசாகத் துறந்தார் பொன்னைப் பொல்லாதெனப் போக விட்டார். அவரது ஏழைமை நிலையைக் கண்டு உலகம் ஐயோ! என்றது. வேண்டாத பட்டையும் பொன்னையும் வேண்டுமட்டும் சுமந்துகொண்டு அறியாமை என்னும் அரங்கிலே அவலக் கூத்தாடும் கவலை மாந்தரை நோக்கி ஐயோ! என்று அப்பர் இப்பாடலைப் பாடியிருக்கிறார்.

பற்றும் பற்றுங்கது பற்றிப் பற்றுங்கவையற்று நற்றுங் கதியடைந்தவர் மணிவாசகர். அவர் வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன் மண்ணும் விண்ணும் என்று பற்றறுத்தவர். இறைவன் விருப்பம் எதுவோ அதையே அவர் வேண்டினார்.

"என்னதோ இங்கு அதிகாரம்? வேண்டத்தக்கது
அறிவோய் நீ",

என்று எல்லாப் பொறுப்பையும் இறைவன் பாரமாகவே விட்டிருந்தார்.

"பாடிமால் புகழும் பாதமேயல்லால் பற்று நான் மற்றிலேன்
கண்டாய்"

என்று பாடினார் மணிவாசகர். அதுபோல் திருநாவுக்கரசரும் பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பற்றுவிட்டவர். சிவ பெருமான் ஒருவரைத் தவிர அவருக்கு வேறு எப்பற்றும் இருந்ததில்லை. அவர் எவ்வாறு உருகிக் குழைந்து பாடுகிறார் பாருங்கள்:

"கருவுற்ற நாள்முத லாகஉன் பாதமே காண்பதற்கு
உருகிற்றென் உள்ளமும் நானும் கிடந்தலந் தெய்த்
தொழிந்தேன்
திருவெற்றி யூரா திருவால வாயா திருவாரூரா
ஒரு பற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே."

எத்தகைய செல்வம் உள்ளவர்களுக்கும், மண்ணுளும் வேந்தர்களுக்கும், விண்ணுளும் தேவர்களுக்கும் ஒரு குறை அல்லது மற்ரெரு குறை இருந்து கொண்டேயிருக்கும். குறையே இல்லை என்று கூற அருகதை உடையவர்கள் கிடையவே கிடையாது. ஆனுல், அப்பருக்கும் மணிவாச கருக்கும் ஒரு குறையும் கிடையாதாம். இதனை அப்பர் வாயாலேயே சொல்லக் கேட்போம் :

"என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா வாரும் இல்லை
சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்ருேம்
ஒன்றினுற் குறைவுடையோ மல்லோ மன்றே
உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனுர்
பொன்றினுர் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே."

இறைவன் திருவடி இன்பத்தின் இருப்பிடம். அத் திருவடி நிழலை இருப்பிடமாக் கொள்வோர்க்கு என்ன குறை இருக்க முடியும்? அப்பர் பாடுகிருர்:

"பூங்கழல் தொழுதும் பரவியும் புண்ணியா
புனிதாவுன் பொற்கழல்
ஈங்கிருக் கப்பெற்றேன் 'என்ன குறையுடையேன்
ஓங்குதெங்கிலையார் கமுகிள வாழை மாவொடு
மாதுளம் பல
தீங்கனி சிதறுந் திருவாரூர் அம்மானே."

இவர்கள் மேற்கொண்ட வாழ்க்கையோ மிகக் கொடிய எளிய வாழ்க்கை. ஆனுல் ஒரு குறையும் இல்லாது வாழ்ந்தார்கள். போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்தாகி அவர்கள் மிடி என்னும் பிணியைப் போக்கி நல்ல வளமான வாழ்வை அளித்து விட்டது. புண்ணியனுகிய சிவனை நண்ணிய புண்ணியத்தைவிட மேலான செல்வம் வேறில்லை. சிவபெருமான் திருவடி

யைச் சேர்ந்து விட்டார்கள். சிவனடியார் திருக்கூட்டத்திற்கு அடித்தொண்டு செய்ய ஆர்வமுடன் முனைந்து விட்டார்கள். ஆகவே அவர்கள் செம்மை மனம் சிறந்து சிவஞானச் செல்வம் பல்கி இன்பம் கொழிக்கத் தொடங்கி விட்டது. என்ன குறையும் இல்லை. இக்கருத்துக்களை மணிவாசகரும் மறவாமற் கூறுகின்றார் பாருங்கள்:

"உணர்ந்தமா முனிவரும்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா வுயிர்கட்கு முயிரே
எனைபிறப் பறுக்குமெம் மருந்தே
திணிந்ததோர் இருளில் தெளிந்ததூ வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கள்தாம் இல்லா இன்பமே உன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே."

மணிவாசகரின் மற்றொரு பாடலையும் நோக்குவோம்:

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே
பாங்காவோம்
அன்னவரே யெங்கணவர் ஆவார் அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையு மிலோம் ஏல்ஓர் எம்பாவாய்."

(இதை நினைந்துதான் தாயுமானவரும் "அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கி விட்டு விட்டால், இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்று பாடினார் என்பது நோக்கத்தகும்.)

இறைவன் பழமைக்குப் பழமையானவன், புதுமைக்குப் புதுமையானவன். முன்னுக்குப் போனால் முன்னேயே முந்திக் கொண்டிருப்பான். பின்னுக்குப்

போனால் பின்னேயே போய்க் கொண்டிருப்பான். பழமை புதுமை என்பதெல்லாம் கால தத்துவத்திற்கு உட்பட்ட கருத்துக்கள். கால தத்துவத்தையும் கடந்து நிற்பவன் இறைவன். ஆகவே நம்முடைய நிலையில் வைத்தே அவன் பழையவன் என்றும் புதியவன் என்றும் பேசப்படுவான் என்பதை முதலில் நாம் கருத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். அந்நிலையில் நின்றே நம் சமயப் பெரியார்களும் பேசியுள்ளனர். இது வரை வெளிவந்துள்ள மாயா காரியமாகிய விசித்திரப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் முற்பட்ட பழைய பொருளாவானும் அவ்விறைவனே; இனிமேல் புதிதாக ஒரு பொருள் வெளிப்படுமாயின் அப்பொருளில் அமைந்துள்ள புதுமைத் தன்மையுடையானும் அவ்விறைவனே. பழமையெனக் கருதப்படும் எதற்கும் மிகப் பழமையாய், புதுமையென ஒன்று தோன்றுமாயின் அதற்கும் புதுமையாய் உள்ள பொருள் இறைவனேயாகும். சிவபெருமானைத் "துன்னருந் துப்பின் தொன்முது கடவுள்" என்று மதுரைக் காஞ்சியில் கூறப்படுகிறது. மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் "தில்லைத் தொல்லோன்" என்று சிவபெருமானைக் குறிப்பிடுகிறார். திருவண்டப் பகுதியில் "சொற்பதங் கடந்த தொல்லோன்" என்றும், "படைப்போற் படைக்கும் பழையோன்" என்றும், "பரமன் காண்க பழையோன் காண்க" என்றும் கூறுகிறார். அது போல் உமாதேவியாரைப் "பழையோள்" என்று திருமுருகாற்றுப் படை கூறுகின்றது.

"வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்குங் காணலன் புதியரிற் புதியன்
மூதக் கார்க்குமூ தக்கவன் முடிவிற்கு முடிவாய்
ஆதிக் காதியாய் உயிர்க்குயிராய்நின்ற அமலன்"

என்று கந்தபுராணம் கரைந்துருகுகின்றது.

மற்றும், பழையன கழிதலும் புதியன புகுதலும் மரபாயுள்ள இவ்வுலகில் உடலும் உருவும் பெற்ற எல்லா உயிர்களும் பொருள்களும் தோன்றி வளர்ந்து மூப்படைந்து மறைந்து போகவும், சிவபெருமான் நிலைபெற்ற இளமைத் தன்மையுடன் என்றும் இருத்தலின் புதுமைத் தன்மையுடையன் என்பதையும் எல்லா உருவுடல்களுக்கு முன்னே தனது இசையாற் கொள்ளப்பட்ட திருமேனியையுடையனுதலின் பழமையானவன் என்பதையும் நாம் அறிதல் வேண்டும். எல்லா உலகங்களையும் வரவழைப்பவன் சிவபெருமானுதலின் அவன் பழமைக்கும் பழமையானவன். எல்லா உலகங்களையும் போக்குவிப்பவனும் அவனுதலின், அவன் புதுமைக்கும் புதுமையானவன்.

"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி யிறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே"

என்ற அப்பர் பாடலைக் காண்க. எல்லா உயிர்களுக்கும் வரவேற்பு (*Welcome*) அளிப்பவனும் சிவபெருமான். எல்லா உயிர்களுக்கும் பிரிவுபசாரம் (*Farcwcll*) கொடுப்பவனும் சிவபெருமான். இவ்வாறு திருமால் நான்முகன் முதல் புல்லும் புழுவும் ஈருகவுள்ள பல்லுயிர்த் தொகுதிகளும் வருவன வந்து போவன போகி மாறிக் கொண்டிருக்கும் நிலையில் பிறவா யாக்கைப் பெரியோனுகிய இறைவன் மட்டும் அன்றுபோல் என்றும் இளையனுய் அழியாதவனுய் மன்னி நிற்பதால்,

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் போர்த்துமப் பெற்றியனே"

என்றுர் மணிநாவர்.

மற்றும் உணர்ந்தார்க்குணர்வரியோனுகிய சிவபெருமான், உணர்ந்தால் உணருந்தோறும் பேரின்பம் முன்பு

போலப் பின்னும் புதிதாய் அவன் புகழ்போல வளரா நிற்பதாலும் "பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" என்றார். பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பது போலன்றிப் பழகப் பழக இனிப்பும் சுவையும் இன்பமும் மேன்மேலும் புதிதுபுதிதாய்ப் பெருகி வளர்ந்துகொண்டேயிருக்கின்றதன்றோ? அறிதோறறியாமை கண்டது போல், ஒவ்வொரு நாளும் அவனை அறிய அறிய, ஆகா! இதுவரை இது தெரியாமற் போனோமே! இதை அநுபவியாது இருந்தோமே! என்று இறும்பூதுகொண்டு மேன்மேலும் அதிலேயே திளைக்கச் செய்யும் புதிது புதிதான இன்பத்தைத் தரவல்லவன் சிவபெருமான் ஆதலின், 'பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே' என்றார். இப் பேரின்பக் கருத்தை அமைத்து மணிவாசகர் திருச்சிற்றம்பலக் கோவையாரில் ஒரு பாடல் பாடுகிறார் பாருங்கள்:

" உணர்ந்தார்க் குணர்வரி யோன் தில்லைச்
சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ்
வாயிக் கொடியிடை தோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும்
போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல்
போல வளர்கின்றதே."

உணர்ச்சிக்கண் தோன்றி ஒருகாலைக் கொருகாற் பெருகாநின்ற பேரின்ப வெள்ளத்தைத் தந்து கொண்டிருப்பதுவே தில்லைச் சிற்றம்பலத்தொருத்தனான சிவபெருமானின் சிறந்த குணம் என்பதை மணிவாசகர் இங்கே அழகாகக் குறிப்பிட்டுள்ளார். அவன் பழைய கடவுள் தான். ஆனால் உயிர்கள் அவனைப்பற்றி நாள்தோறும் புதிது புதிதாய்த் தெரிந்துகொண்டு வருகிறார்கள். சிற்றறிவுள்ள உயிர்களின் அறிவு வளர வளர இறைவனுடைய நவ நவமான திருக்கல்யாண குணங்களையும் புதிது

புதியதாய் உணர்கின்றவையாயுள்ளன. அவன் இவ்வாறு புதிது புதிதாய்க் காட்சியளிப்பதால் புதுமையானவனாய்த் தோன்றுகிறான்.

பழமைப் பொருளாயும் புதுமைப் பொருளாயும் இறைவன் இருக்கின்றான் என்பதிலுள்ள மற்றொரு கருத்தும் ஈண்டுச் சிந்திக்கற்பாலதாயுள்ளது. முற்காலத்திலே, அஃதாவது பழமையான காலத்தில் முனிவர்களும், ஞானிகளும். இருடிகளும் சிவபெருமானைக் காண்பதற்கு யோக நிலைகளைக் கைக்கொண்டு கடுந்தவங்கள் செய்தார்கள். ஐம்பொறிகளை அடக்கி விரதங்களை மேற்கொண்டார்கள். சிவபெருமான் அருளின்றி எவர்க்கும் பிறவிப் பிணியைப் போக்க முடியாது. இதைக் கந்தபுராணம் கூறுகின்றது.

“ பரசிவ னுணர்ச்சி யின்றிப்
பல்லுயிர்த் தொகையு மீண்டே
விரவிய துயர்க்கீ றெய்தி
வீடுபே றடைது மென்கை
யுருவமில் விசும்பிற் றோலை
யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற்
பின்னுமோர் சான்று முண்டோ.”

சுவேதாச்சுவதர உபநிடதத்தின் சுருதிப் பொருளே இதுவாகும். வீடுபேறு சிவனையறியும் அறிவில்வழி உண்டாகாது என்பது காஞ்சிப் புராணத்திலும் கூறப்பட்டுள்ளது:

“ மானுடன் விசும்பைத் தோல்போற்
சுருட்டுதல் வல்லோ னயின்
ஈனமில் சிவனைக் காணு
திடும்பைதீர் வீடு மெய்தும்

மானமார் சுருதி கூறும்
வழக்கிவை யாத லாலே
ஆனம ரிறையைக் காணு
முபாயமே யறிதல் வேண்டும். ''

ஆதலால் அறிவுடையார் எல்லாரும் சிவன்சேவடிக்கே சிந்தைவைத்து அவனையே வழிபட்டார்கள். அறிவு மயமாய் வாலறிவனாய் இருக்கிற சிவபெருமானை அடைவதற்கும் சிவஞானமே வேண்டுமாதலாலும், சிவஞானத்தை அளிப்பவன் சிவனைத் தவிர வேறு யாரும் இல்லையாதலாலும் அவனை நினைந்தே பெரியோர்களெல்லாரும் தவம் செய்தார்கள். யோக நிலையிலிருந்தே உலகம் தன்னையடைய முடியும், அதுவே மேலான தூய வேண்டப்படும் நிலை என்பதைக் காட்டுவதற்கே சிவபெருமானும் தவம் புரியும் யோகநிலைக் கோலத்தில் அமரலானான் என்பதைக் கம்பரும் தாடகை வதைப் படலத்தில் மிக அருமையாக எடுத்துக் கூறியுள்ளார் :

" பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேல் முடுகினார் அறிவுசென்று
உற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனிற்
சொற்றவா மளவதோ மற்றிதன் தூய்மையே. "

ஆகா! வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்பதை உணர்ந்த வாலறிவுபடைத்த வாலியோரின் சிந்தனை யாவும் சிவன் கழலடிகளிற் குவிந்திருக்கும் என்று கம்பரே பாடுவது நம்மைக் கம்பிக்கச் செய்கிறதல்லவா! வைணவர்களும் சிவனை சர்வக்ஞன் என்று போற்றுகின்றனர். ஞானம் கொடுத்தற்குரியவன் அவனே என்பதையும் ஒப்புக்கொள்கின்றனர். "சங்கராத்ஜ்ஞாநமந் விச்சேத்" (சிவபெருமானிடத்தினின்று தத்துவஞானத்தைப் பெறக்கடவன்) என்ற வேதவாக்கையும் நோக்குக.

இறைவனை உணர்வதற்குத் தவயோக விரதங்களை மேற்கொள்ளுதல் என்பது பழைய முறை. இப்பழைய முறையில் உணரும் கடவுளைப் பழம்பொருள் என்றனர். ஆனால் தற்காலமோ புதுமையை விரும்புகின்ற காலம். இது விஞ்ஞான அறிவு விஞ்சியெழுகின்ற விந்தைக் காலம். ஆண்டவனையும் ஆராய்ச்சிக் குப்பிக் குள்ளே (*Test-tube*) அடைத்துக் காண ஆசைப்படுகின்ற காலம். நமது ஆக்கையாகிய குப்பிக்குள்ளே ஆண்டவனைக் கண்டார்கள் நம் முன்னோர்கள். அது பழைய கடவுள். ஆனால் இப்பொழுது பகுத்தறிவாளர்கள் விஞ்ஞான வள்ளத்துக்குள் (*Crucible*) ஆண்டவனை விளையாட விட்டுப் பார்க்கிறார்கள். ஆண்டவன் இவர்கள் பிடிக்குள் அகப்படாமல் கள்ளனாய் ஓடுகிறான். இதை அப்பர் அடிகள்பாட்டு ஒன்றால் அறியலாம்:

“ வள்ளத்தா னென்று மாட்டேன் விரும்பெனும்
வேட்கையாலே
வள்ளத்தேன் போல நுன்னை வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனும் உயிர்ப்புளே வருதி யேனும்
கள்ளத்தே நிற்றி யம்மா எங்ஙனம் காணு மாறே.”

இப்புதுக் காலத்தை அணு சகாப்தம் என்கிறார்கள். அறிவாளிகளாகிய விஞ்ஞானிகள் அணுவையும் துளைத்துப் பார்த்து விட்டார்கள். அந்த அணுக்குள்ளேயும் நியூட்டான்ஸ், எலெக்டிரான்ஸ், புரோட்டான்ஸ் என்று இப்படியாகப் பல பரமாணுக்கள் பதுங்கியிருக்கின்றன. அந்தப் பரமாணுக்களைச் சத கூறிட்ட கோணிலும் கோயில் கொண்டிருக்கிறான் இறைவன் என்பதை இப்பொழுது ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக் கொள்ள வேண்டிய ஒரு கட்டாய நிலைக்கு வந்திருக்கிறார்கள்.

“ சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும்
திருப்பெருந் துறையுறை சிவனே

ஒன்றும் நீயல்லே யன்றி யொன்றில்லே
யாருன்னே அறியகிற் பாரே ''

என்றும்,

'' அணு அணுவில் இறந்தாய் என்றங்கெண்ணம்
தான் தடுமாறி''

என்று மணிவாசகர் கூறினர்.

'' அணுவை யார்க்கும் தெரியாத தத்துவனே ''

என்று திருநாவுக்கரசர் கூறினர். இவர்கள் கூறியவற்றையே இன்று விஞ்ஞானிகளும் கூறுகின்றனர்கள். இதனே நோக்க,

'' முன்னேப் பழம் பொருட்கும் முன்னேப்
பழம் பொருளே
பின்னேப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே ''

என்ற மணிவாக்கு எவ்வளவு உண்மையாய்த் திகழ்கிறது பாருங்கள். இக்கருத்தை அப்பர் வாக்கு ஒன்றும் தெரிவிப்பதை இங்கு ஒப்புக் காணலாம்:

'' உரையார் பொருளுக் குலப்பி லானே
ஒழியாமே யெவ்வுருவும் ஆனன் தன்னேப்
புரையாய்க் கனமாயாழ்ந் தாழா தானேப்
புதியனவு மாய்மிகவும் பழையான் தன்னேத்
திரையார் புனல்சேர் மகுடத் தானேத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனே
நிரையார் மணிமாட நீடு ரானே
நீதனே னென்னேநான் நினேயா வாறே. ''

திருவாசகம், திருவண்டப் பகுதியில் ''தன்னே ரில்லோன் தானே காண்க'' என்றார் மணிவாசகர். ''நின்னே வார் பிறரன்றி நீயே யானுய்'' என்றார் அப்பர். ''சிவனே டொக்கும் தெய்வம் தேடினும் இல்லே'' என்றார் திருமூலர். சிவபெருமானுக்கு இணையான தெய்வம் கிடையாது. சிவ

னுக்கு ஒப்பாகத் திருமால், நான்முகன் முதலிய தேவர்களைச் சொல்லக்கூடாது; அவர்கள் பரிவார தேவதைகளே என வேதம் விதிக்கின்றது. மணிவாசகரும் பாடுகின்றார் பாருங்கள் :

" சாவமுன் னாள்தக்கன் வேள்வித்
தகர்தின்றுநஞ்சம் அஞ்சி
ஆவஎந்தாயென் றவிதா
இடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொம்
எண்ணிவின் ணாண்டுமண்மேல்
தேவரென் றேஇறு மாந்தென்ன
பாவந் திரிதவரே."

இதனை அப்பர் அடிகளும் கூறாமல் இல்லை :

" செத்துப் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்தன் என்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே."

சிவபெருமான் ஒருவனே பசுபதி எனப்படுவான். மாலயனாதியோர் பசுக்களே என்று வேதமும் கூறுகிறது. பிரம்ம கற்பம், விஷ்ணு கற்பம் எனவரும் ஊழி முடிவுகள் தோறும் பிரம்ம கபாலங்களையும் அரியின் கங்காளங்களையும் மாலையாக அணிந்து கொண்டு சிவபெருமான் மட்டும் தான் ஒருவனாக அழியாது நிலைத்து நின்று ஊழித்தாண்டவம் புரிகிறான். எண்ணத் தொலையாத இந்திரர்களும், பிரமர்களும், திருமால்களும் இதுவரை இறந்திருக்கிறார்கள். மாணிக்கவாசகர் பாடுகிறார் பாருங்கள்:

" என்னுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்
கண்ணுதல் எந்தை கடைத்தலைமுன் நின்றதற்பின்
எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம்."

இதேபோல் அப்பர் அடிகளும் ஈசன் ஒருவனே ஈறு இல்லாதவன் என்பதைக் கூறுமுகத்தான் இறந்தோரை எண்ணிக்கையிட்டுச் சொல்கிறார் :

" நூறு கோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே. "

இவ்வாறு ஊழியின் முடிவில் மால்பிரமன் இந்திராதியர் மடிந்து மறைவார்கள் என்பது மட்டும் அல்ல. தக்கன் வேள்வியைச் சிவபெருமான் தகர்த்துத் தேவர்களுக்கு வெவ்வேறு தண்டங்கள் செய்ததைப் பற்றியும் நாவரசரும் வாதவூரரும் பலபடியாகப் பாடியுள்ளார்கள். சந்திரனைக் காலால் தேய்த்து, எச்சனையும் தக்கனையும் தலையறுத்து இந்திரனைத் தோள்முறித்த செயல்களை அப்பர் இதோ பாடுகிறார் பாருங்கள் :

" சந்திரனைத் திருவடியால் தளர்வித் தான்காண்
தக்கனையும் முனிந்தெச்சன் தலைகொண் டான்காண்
இந்திரனைத் தோள்முறிவித் தருள்செய் தான்காண்
ஈசன்காண் நேசன்காண் நினைவோர்க் கெல்லாம்
மந்திரமும் மறைபொருளும் ஆயி னான்காண்
மாலொடயன் மேலொடுகீழ் அறியா வண்ணம்
வெந்தழலின் விரிசுடராய் ஓங்கி னான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. "

யார் யார் எல்லாம் சிவன் சீற்றத்திற்காளாகித் தண்டிக்கப்பட்டார் என்பதை ஒரு பட்டியலாகக் கொடுக்கிறார் வாதவூரடிகள் :

" சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட்டு எச்சன் தலைஅரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த

செந்தார்ப் பொழில் புடைசூழ் தென்னன்
பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய்.''
"அங்கி யருக்கன் இராவணன் அந்தகன் கூற்றன்
செங்க ணரியயன் இந்திரனும் சந்திரனும்
பங்கமில் தக்கனும் எச்சனுந்தம் பரிசழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.''

எந்த எந்தத் தேவர் எவ்வாறு தண்டிக்கப்பட்டார் என்பதையும் விபரம் கொடுத்துப் பாடுகிறார் மணிநாவர் :

"காம னுடலுயிர் காலன்பற் காய்கதிரோன்
நாமகள் நாசிசிரம் பிரமன் கரமெரியைச்
சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையும்
தூய்மைகள் செய்தவா தோணோக்கம் ஆடாமோ.''

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவன் அடி சேரா தார்'—என்றார் திருவள்ளுவர். இறைவன் என்பது சிவபெருமானையே குறிக்கும். சிவபெருமான் ஒருவனே பிறப்பு இறப்பு இல்லாதவன். மற்றவர்கள் பிறப்பார்கள் இறப்பார்கள். பிறந்து இறக்கும் தேவதைகள் பிறவிப் பிணியைப் போக்க மாட்டார்கள். தங்கள் பிறப் பிறப்பையே தவிர்க்க முடியாத தெய்வங்கள் பிறருடைய பிறப் பிறப்புக்களை எவ்வாறு தீர்க்க முடியும்? அதனாலேயே திருமாலும் சிறந்த சிவனடியானாகத் திகழ்ந்து, சிவபூசை செய்து மலர் அர்ச்சனை புரிந்து சிவனை வழிபட்டதாக நாம் அறிகிறோம். நாள்தோறும் ஆயிரம் செந்தாமரைப் பூக்களைக் கொண்டு திருமால் சிவனை வழிபட்டு வந்தான். ஒருநாள் ஆயிரம் பூவில் ஒன்று குறைந்து விட்டது. அதற்காகத் திருமால் மனம் தளரவில்லை. அவன் செந்தாமரைக்கண்ணன் அல்லவா? உடனே தன் கண் ஒன்றை இடந்து சிவபெருமான் திருவடியில் சாத்தினான். திருமாலின் மனவுறுதியையும் அன்பின் திறத்தையும் கண்டு மகிழ்ந்த சிவபெருமான்

பேரருள் சுரந்து சக்கரப் படையை நல்கினுன். இதை மணிவாசகர் குறிப்பிடுகிருர்.

"பங்கயம் ஆயிரம் பூவினில் ஓர் பூக்குறையத்
தங்கண் இடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கரன் எம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ."

திருமாலினுடைய இச்செயற்கருஞ் செயலேயும் சிவ வழிபாட்டின் மேன்மையையும் பான்மையையும் அதன் பயனேயும் இந்நிகழ்ச்சி நன்கு எடுத்துக் காட்டுகின்ற தல்லவா ? இதனே எடுத்துக் கூறுவதில் அப்பர் அடிகளும் ஆர்வம் காட்டுகிருர்:

"ஏறுட னேழடர்த்தான் எண்ணி யாயிரம்பூக் கொண்டு
ஆறுடைச் சடையி ஞனே யர்ச்சித்தான் அடியிணேக் கீழ்
வேறுமோர் பூக்குறைய மெய்ம்மலர்க் கண்ணே மிண்டக்
கூறுமோர் ஆழி யீந்தார் குறுக்கைவீ ரட்டனுரே.'

சிவஞானபோதம், இரண்டாஞ் சூத்திரம், முதல் அதிகரண விளக்கவுரையில், சிவஞான சுவாமிகள் வரைந்துள்ள குறிப்பு ஒன்றை நோக்குவது ஈண்டைக் குப் பொருத்தமாகும்.

"இவ்வொற்றுமை பற்றியன்றே அருச்சுனற்குக் கீதை நூல் செவியறிவுறுத்த கண்ணன் 'யானே உல கெல்லாம் ஆயினேன்' என்றதூஉம், முதல்வனது விச்சுவ ரூபத்தைத் தான் காட்டியதூஉம், ஏனையவற் றைக் கைவிட்டு என்னேயே வழிபடுகவென்றதூஉம், அதனே உறுதியாகக் கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்து நோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூ உம், கண்ணன் மேலிட்ட போதுகள் முதல்வன் திருமுடி மேற் கண்டதூஉம் என்க. கண்ணன் உபமன்னிய முனிபாற் சிவதீக்கை யுற்றுத் தன்னேயுந் தலேவனேயு

முணர்ந்தோனுகலிற் சிவோகம் பாவனையைத் தலைப்பட்டோனுதலறிக."

மலர்கொண்டு சிவ வழிபாடு எவ்வாறு நடத்த வேண்டும் என்பதைச் சிறப்பாக எடுத்துக் காட்டியவன் திருமால். அவன் சிவனடியார்களுக்குள்ளே தலை சிறந்தவன். அதற்குச் சான்ருகச் சிவபெருமானிடம் சக்கரப் பரிசும் பெற்று அதை எப்போதும் கையிலே பெருமையுடன் தரித்திருக்கிருன்.

சிவனுக்கு மலர் என்ருல் மிகவும் பிடிக்கும். மலர்களால் அர்ச்சிப்பதுபோல் வேறு எதுவும் சிவன் உள்ளத்தைக் குளிர்விக்காது. மலர் என்ருல் போதும், எதுவாலுலும் ஏற்றுக் கொள்ளுவான். நல்லவும் தீயவும் அல்ல, குவியிணர்ப் புல்லிலை எருக்கம்பூவாயினும் கொடு என்று வாங்கித் தலையில் தரித்துக் கொள்ளுவான். சிவோகம் பாவனையால் சிவனேயாகி நின்ற திருமாலுக்கு அருச்சுனன் இட்ட பூவும் சிவன் முடிமேல் ஏறின என்பதைக் கண்டோம். இம்மூவுலகத்திலுள்ள அடியார்களும் அர்ச்சிக்கின்ற பூக்கள் யாவும் கயிலைமலையிலுள்ள சிவன்மேல் சொரிந்து கொண்டேயிருக்கின்றனவாம்.

"பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரும் நறும்புகையும் ப்ரந்து தோன்றும்"

என்று பாடுகிருர் அப்பர் அடிகள்.

மருத்துமலையை எடுக்கச் சென்ற அனுமன் மேருவின் வடகீழ்பாகத்தில், ஈசான திசையில், சிவபெருமான் ஆயிரம் சூரியரின் பேரொளி கொண்ட ஐந்து முகங்களுடனும் எட்டுத் தோள்களுடனும் உமாதேவியைப் பாகத்தே கொண்டு வீற்றிருப்பதைக்கண்டு வணங்கினன். அப்பொழுது மூன்றுலகத்தவர்களும் சிவனை அர்ச்சிக்கும் மலர்கள் எல்லாம் அங்கே வந்து சூழ்ந்து குவிந்து கிடப்

பதை அனுமன் கண்டான் என்று கம்பர் அழகாகப் பாடி யுள்ளார்.

"ஆயதன் வடகிழ் பாகத் தாயிரம் அருக்கர் ஆன்ற
காய் கதிர் பரப்பி யஞ்சு கதிர்முகக் கமலங் காட்டித்
தூயபே ருலக மூன்றும் தூவிய மலரிற் சூழ்ந்த
சேயிழை பாகத் தெண்டோள் ஒருவனை வணக்கம்
செய்தான்."

கம்பருடைய காவியத்தில் இப்பாடல் காணப்படுவது சாலவும் சிறப்புடைத்து. மலர்கொண்டு சிவனை வழிபட வேண்டும் என்பதை மணிநாவரும் கூறுகிறார்:

"முத்தனே முதல்வா முக்கணு முனிவா
மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்த மேவிய சீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றருளாயே."

"சித்தமேபுகுந் தெம்மை யாட்கொண்டு
தீவி னைகெடுத் துய்யலாம்
பத்தி தந்துதன் பொற்க ழற்கணே பன்மலர்
கொய்து சேர்த்தலும்
முத்தி தந்திந்த மூவுல குக்கு மப்பு
றத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவடிக் கணஞ்
சென்னி மன்னி மலருமே."

மலர்களைப் பறித்து மாலைகள் கட்டிக் கோயில் வழி பாடு செய்தால் ஒருவன் நிலையான இன்பவாழ்வைப் பெற லாம். நினைத்த நேரத்தில் பட்டாடை கட்டிப் பள பளக்க அலங்கரித்துக் கொண்டு, கோயிலுக்கு விசை வண்டி களில் விளையாடிச் சென்று, ஏவலர் ஏத்திவரக் காவலர்

காத்துவர அதிகாரம் ஆட்சிபெற ஆணவம் மாட்சியுற, மேனி அலுங்காமல் மெய்யும் வளையாமல், ஆடையிலே சற்றும் அழுக்குப் படியாமல் அஞ்சலி செய்து அழகாய் மீள்வது உண்மையான கோயில் வழிபாடு ஆகாது. விடிவதற்கு முன்னே கோயிலுக்குச் சென்று, திருவலகு கொண்டு பெருக்கிச் சாணம் கரைத்து மெழுகிக் கோயில் வழிகளைச் சுத்தம் செய்து, தானும் குளித்துத் தூய்மையுடன் மலர்களைப் பறித்து மாலைகள் கட்டி, இறைவனுக்குச் சூட்டித் துதிசெய்து அவன் திருப்புகழைப் பாடித் தலையால் வணங்கி "அரகர சங்கர செயபோற்றி சிவ சிவ" என்று தொழுதும் அழுதும், உருண்டும், புரண்டும், எழுந்தும் விழுந்தும், நெக்கு நெக்குருகிப் பூசனை நடத்த வேண்டும். இதுவே உண்மையான கோயில் வழிபாடு. பிறப்பு இறப்புத் துன்பங்களைப் போக்குவதற்கு இதுவே வழி என்கிறார் உழவாரப் படைத் தொண்டில் ஊறித் திளைத்த அப்பர் அடிகள்:

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே,"

இது நெஞ்சை நோக்கி அப்பர் பாடிய பாடல். காடும் கரையும் கால் விட்டோடும் தன்மையுடையது நெஞ்சம் ஆதலால் அதனை அவ்வாறு ஓடாமல் நிலைபெற நிற்க வேண்டும் என்பார் "அலறா நில்லே" என்றார். இது நெஞ்சை நோக்கிக் கூறியது போல் இருப்பினும், உலக மக்களை நோக்கிக் கூறியதேயாகும். அவ்வாறு நிற்க முயலாதவர்கள் நில்லாது ஓடத்தானே செய்வார்கள்?

நின்ருல் தான் நிலேபேறு அடையலாம். நில்லாது வரைந்தால் நிலேபேறு கிட்டாது. அப்படி நில்லாது விரைகின்றவர்களே நோக்கி, "ஐயா! கோயிலுக்குக் காலேயிற் சென்று பெருக்கி மெழுகி, இறைவனுக்குப் பூமாலே சூட்டி வணங்கி வாழ்த்தக் கூடாதா?" என்ருல் அவர்கள் என்ன சொல்வார்கள் ? சிலர் சிரிப்பார்கள், சிலருக்குச் கோபமும் வரும். "எங்களுக்கு இதுதானு வேலே ? இதைவிட வேறு எவ்வளவோ கவலேகளும் பொறுப்புக்களும், முக்கியமான அலுவல்களும் உள்ளன. அவற்றைச் செய்யவே நேரம் போதவில்லேயே!" என்று சொல்லிக் கொண்டே தம் வேலேயைக் கவனிக்க ஓடுவார்கள். நல்லதைச் செய்யாமல் நகட்டி விடுவதற்காக "பிசி! பிசி! (*Busy*)" என்று ஆங்கிலத்தில் பிதற்றுவார்கள். ஆனுல் உண்மையில் அவர்கள் கூறுவது பிசியே (பொய்யே) யாகும். ஆனுல், அவர்களுக்கு உரிய வேலேயை நோக்கி ஓடுவதாகச் சொல்கிருர்களே, அஃது என்ன வேலே?சாவதுதான் அவர்கள் வேலே. அதற்குத்தான் இப்படி அலறிப் புடைத்துக் கொண்டு ஓடுகின்ருர்கள். "சுடுகாட்டை நோக்கி விரைகின்ருர்கள்" என்று கூறுகின்ருர் மாணிக்கவாசகர். பிறரைக் குறை கூறுதல் கூடாது என்று, தம்மைக் குறித்துக் கூறுவது போலவே பாடுகின்ருர்.

"ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலே புனேந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன்மெழுகேன்
கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே."

அப்பருடைய "நிலேபெறுமாறு" என்ற திருத்தாண்டகத்தை மனத்தில்வைத்தே இத்திருவாசகப்பாடலே மணிவாசகர் பாடியுள்ளார் என்னலாம். அப்பர் "நிலேபெறுமாறு" என்றதை மணிவாசகர் "ஆம் ஆறு" என்

கிறார். அப்பர் இன்னின்ன செய்ய வேண்டும் என்று கூறியவற்றையே மணிவாசகர் மீண்டும் எடுத்துக் கூறி, அவற்றை அவ்வாறு நான் செய்யவில்லையே என்று வருந்துகிறார். அப்பர் நிலைபெறுமாறு நில் என்றதை, மணிவாசகர் அவ்விதம் நிலைபெற நில்லாது சாமாறு விரைகின்றேனே என்று வருந்துகிறார். ஆமாறு நிற்பதைக் கடினமாக நினைக்கும் உயிர் சாமாறு விரைந்து ஓடுவதில் உள்ள அவல நிலையும் அறியாமைத் தனமும் கூர்ந்து நோக்கத் தகும். "பூமாலை புனைந்தேத்தி" என்றார் அப்பர். "பூமாலை புனைந்தேத்தேன்" என்கிறார் மணிவாசகர். "புகழ்ந்து பாடி" என்றார் அப்பர். "புகழ்ந்துரையேன்" என்கிறார் மணிவாசகர். "நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்கு" என்றார் அப்பர். "புத்தேளிர் கோமான் நின்திருக்கோயில்" என்கிறார் மணிவாசகர். "அலகு இட்டு மெழுக்கும் இட்டு" என்றார் அப்பர். "தூகேன் மெழுகேன்" என்கிறார் மணிவாசகர். "தலையாரக் கும்பிட்டு" என்றார் அப்பர். "அகம் குழையேன்" என்கிறார் மணிவாசகர். "கூத்தும் ஆடி' என்றார் அப்பர். "கூத்து ஆடேன்" என்கிறார் மணிவாசகர். "அலறு நில்லே "என்றார் அப்பர். "அன்பு உருகேன்" என்கிறார் மணிவாசகர். "நில்லே" என்றார் அப்பர் (அவ்வாறு நில்லாது) "விரைகின்றேன்" என்கிறார் மணிவாசகர். அப்பர் கூறும் ஒவ்வொரு செயலையும் கூறித் தாம் அவ்வாறு செய்யவில்லையே என்று தவிக்கிறார். தேவாரம் திருவாசகத்தில் உள்ள இவ்விரு பாடல்களையும் ஒன்ற வைத்து ஒப்பு நோக்கிச் சீர்தூக்கி இன்னும் ஆராய வேண்டியது சைவ உலகின் கடனாகும். அதனால் பெறக் கூடிய பயன் முழுதையும் என்னால் உணர முடிகிறதே யொழிய உரைக்க முடியவில்லை.

உலகத்து அரசர்கள் பூவேந்தர்கள். நமது அப்பரோ நாவேந்தர். பூவேந்தர்கள் படைக்கலம் பயின்றவர்கள்.

நமது நாவேந்தரும் படைக்கலம் பயின்றவர். பூவேந்தர் படைக்கலங்கள் வில், வேல், வாள், ஈட்டி, தண்டம் போன்ற கொல்லாயுதமாய் இருக்கும். ஆனல் நமது நாவேந்தருடைய வெல்லாயுதமோ நமசிவாயம் என்னும் சொல்லாயுதம். பூவேந்தர் படைக்கலங்களைக் கையிற் கொண்டிருப்பர். நாவேந்தர் தமது படைக்கலத்தை நாவிற் கொண்டிருப்பார். "படைக்கலமாக நின்னுமத் தெழுத் தஞ்சு என் நாவிற் கொண்டேன்" என்று அவரே கூறுவதைக் காணுங்கள். இதனலும் அவர் நாவரசர் என்பது நன்கு பொருந்தும். நிலத்தைச் செம்மையாய் ஆள்வதற்கு அரசர்கள் செங்கோலைப் பிடித்திருப்பர். நிலத்தைச் செம்மை செய்து சீர்ப்படுத்த உழவாரப் படையை நாவரசர் பிடித்திருப்பார். உழவாரப்படையே நாவரசரது செங்கோலாகும்.

ஈசனுடைய பொருள் சேர் புகழைப் பேசும் நாளே பிறந்த நாள், பேசாத நாள் எல்லாம் பிறவா நாள் எனக் கணக்கிட்ட பெரியார் திருநாவுக்கரசர்:

"துறந்தார்தந் தூநெறிக்கட் சென்றேன் அல்லேன்
துணைமாலை சூட்டநான் தூயேன் அல்லேன்
பிறந்தேன்நின் திருவருளே பேசி னல்லாற்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே
செறிந்தார் மதிவிலங்கைக் கோமான் தன்னைச்
செறுவரைக்கீழ் அடர்த்தருளிச் செய்கை யெல்லாம்
அறிந்தேன் அடியேனை அஞ்சேல் என்னுய்
ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே."

ஒரு நாள் அப்பர், சிந்தையிடையரு அன்புடனும் களிப்பால் அசைந்த தென்புடனும், முகத்திற் கண்ணீர் ஊற்றுடனும் உடம்பிற் பூசிய நீற்றுடனும், வேண்டாக் கந்தை உடையுடனும் வேண்டும் உழவாரப் படையுடனும் வீதியிலே சென்று கொண்டிருந்தார். அவருடைய

செம்மாந்த நடையைக் கண்டு ஒருவன் அவரிடம் "சுவாமி! தங்களுக்கு என்ன வயது ஆகிறது?" என்று கேட்டான். அவர் "எனக்குப் பதினறு வயது கூட ஆகவில்லை" என்ருர். உடனே அவன், "சுவாமி! அறுபதுக்கும் மேலான வயதுடைய தாங்கள் பதினறு வயது என்று கூறுவது பொருந்துமா?" என்று கேட்டான். அதற்கு அவர், "நான் என் ஆயுளின் பெரும்பகுதிக் காலத்தைச் சிவன் திருவடியை நினையாமலும் சிவன் திரு நாமத்தைக் கூருமலும் வீணுகக் கழித்தேன். அந்த நாளை யெல்லாம் நான் உயிரோடு வாழ்ந்த நாளாகக் கணக்கிட முடியுமா? சமண சமயத்திலிருந்து சிவநெறிக்கு மீண்டும் வந்து ஆட்பட்ட பிறகுதான் நான் ஆளானேன், அஃதாவது, உயிருள்ள மனிதன் ஆனேன். அதற்கு முன் நான் மண் மேல் இருந்தாலும் செத்தவனேயாவேன். ஆகையால் அந்த நாளைச் சொல்லாமல், நான் சைவனய்ச் சீர்பெற வாழ்ந்த நாளைக் கணக்கிட்டு வயதைக் கூறினேன்" என்று சொல்லிப் பாடலுற்ருர்:

"அறந்தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
ஆரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்தும்அரன் திருவடிகள் நினைய மாட்டா
மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேற்
பிறந்தநாள் நாளல்ல வாளா ஈசன்
பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்துள் அன்பு
செறிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே."

சிவனுக்கு ஆட்படாது கழியும் நாளெல்லாம் வாழ்ந்த நாள் ஆகாது. அது வாழாது வாழும் நாள் என்கிருர், மணிவாசகரும்:

"வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றாய் ஆழாமற் காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக் கடலாய வெள்ளத்தே."

ஆம், அவர்களுக்கு என்ன குறை? சிவபெருமானே வலிய வந்து அவர்களைத் தடுத்தாட் கொண்டான். சிவானந்த வெள்ளத்திலே அவர்கள் மூழ்கித் திளைத் தார்கள். துன்பம் யாதும் இன்றி எந்நாளும் இன்பத் திலேயே திகழ்ந்தார்கள். சிவஞானச் செல்வத்தைக் குறை வறப் பெற்றார்கள். இறைவன் அவர்களுக்குக் கூறாதன வெல்லாம் கூறினான். காட்டாதன வெல்லாம் காட்டினான். அறிவை அருளி நெறியெலாம் புலனாக்கினான். அவர்கள் உள்ளத்திலே கலைகளை யெல்லாம் மலைபோற் குவித்தான்; அவர்கள் பெற்ற அறிவு பள்ளிகளில் படித்தறியும் அறி வன்று. அவர்கள் கல்வியும் ஞானமும் நூல்களின் முகத் தால் கற்றறிய முடியாதன. அவர்கள் பெற்ற ஞானம் பாசஞானமும் பசுஞானமு மன்று, அது பதிஞானம். ஊழிக்காலம் உழைத்துத் தேடினாலும் கிடைக்க முடியாத ஞானக் களஞ்சியத்தை ஒரு சொல்லிலே யடக்கி ஒரு நொடியிலே ஓதிவிட்டான் இறைவன். நில்லாத நினக் குரம்பைப் பிணக்கம் நீங்க நிறைதவத்தை அவர்களுக்கு நிறைவித்து என்றும் செல்லாத செந்நெறிக்குச் செலுத்தி விட்டான் சிவபெருமான். அப்பர் இதனை எப்படிக் கூறு கிறார் பாருங்கள் :

"நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை
நினையா வென்னெஞ்சை நினைவித் தானைக்
கல்லா தனவெல்லாங் கற்பித்தானைக்
காணா தனவெல்லாங் காட்டி னானைச்
சொல்லா தனவெல்லாம் சொல்லி யென்னைத்
தொடர்ந்திங் கடியேனை யாளாக் கொண்டு
பொல்லாவென் னோய்தீர்த்த புநிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே."

இப்பாடலின் நயத்தையெல்லாம் எடுத்துக் கூறும் ஆற்றல் எனக்கு இல்லை. ஆயினும் எனக்குத் தெரிந்த ஒன்றிரண்டை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். இறைவன் அப்பருக்கு எவ்வாறு அறிவைப் புகட்டி மனத்தைத் திருப்பினன் என்று கூறுகிறது இப்பாடல். 'சொல்லாதனவெல்லாம் சொல்லி என்னைத் தொடர்ந்து. என்றார். பிள்ளைகளைப் படிக்க வைப்பதிலும் அவர்களைப் பள்ளிக்கு ஒழுங்காக அனுப்பி வைப்பதிலும், படிப்பில் கவனத்தைச் செலுத்துவிப்பதிலும் உள்ள அருமை பெற்றோர்களுக்குத் தெரியும். படிப்பு என்றால் பிள்ளைகள் ஓடுவார்கள். பெற்றோர்கள் பின்தொடர்ந்து சென்று அவர்களைப் பிடித்து வருவார்கள். நல்ல வார்த்தை சொல்லிப் பின்னாலேயே சென்று கொஞ்சு மொழிகளால் கெஞ்சி இரந்து பிள்ளைகள் மனத்தைத் திருத்துவார்கள். ஐயா, அரசே, கண்ணே பொன்னே என்றெல்லாம் அவர்களை தூக்கிவைத்துப் பேசுவார்கள். தங்களைத் தாழ்த்திப் பேசி நொந்து கொள்வார்கள். பிள்ளைகள் நலம் கருதித் தங்கள் நிலையினின்றும் கீழே இறங்கி வந்து பேசுவார்கள் பெற்றோர்கள். சொல்ல வேண்டாத சொற்களையும் சொல்லிப் பிள்ளை மனத்தை மாற்ற முயல்வார்கள். அது போல் இறைவனும் தன் அருளையும் சிவஞானத்தையும் அளிப்பதற்கு அப்பரிடம் வந்தபோது அவர் மறுத்துக் கொண்டே வெகுதூரம் ஓடிவிட்டாராம். இறைவன் அவரை விடாமல் தொடர்ந்து சென்று நல்ல வார்த்தை சொல்லிப் பற்றினனும். இறைவன் தன் நிலைக்குச் சொல்லத் தேவையில்லாத நல்லனவும் நயப்பனவுமான மொழிகளை இரந்து குறைவேண்டுதல் போற கூறிக் கொண்டே அவர் பின் வந்தானும். ஆகவே 'சொல்லாதன சொல்லி யென்னைத் தொடர்ந்து' என்றார். பிறரால் சொல்ல முடியாதவற்றையெல்லாம் சொல்லி என்றும் அதற்குப் பொருள் காணலாம். அவர் மனது குவிந்து

கவிந்து ஒரு நிலைப்படாது தண்ணீர் போல் காடும்கரையும் ஓடிக் கொண்டிருந்ததாம். அதைக் கரைகோலித் திருத்தி ஓடாமல் ஒரு நிலையில் நிறுத்துவதற்கு இறைவன் பல கால் முயன்றுனும். அதற்காக முதலில் நிலை நிற்காத தண்ணீரைத் தன் சடா மகுடத்தில் நிற்கச் செய்து அந்த வித்தையிலே கைதேர்ந்து, அது தனக்கு நன்கு கைவரப் பெற்றபின், அப்பரை அடைந்து தண்ணீர் போல் தளர்கின்ற அவர் மனத்தைத் தடுத்து நிறுத்தினுனும். இவ்வாறு நினையாத அவர் மனத்தை நினையச் செய்து வெற்றி பெற்றுனும். நில்லாத நீரைச் சடைமேல் நிறுத்தியது ஒரு செயற்கரிய செயல். அதனை முன்னரே இறைவன் சடையில் நிறுத்திப் பழகியது கங்கையின் துடுக்கை அடக்குவதற்கு அன்று, மற்று நினையாத தன் நெஞ்சை நினைவிப்பதன் பொருட்டு என்று ஒரு காரணம் கற்பிப்பது போற் பாடினுர் அப்பர். ஏனெனில் நினையாத தன் நெஞ்சை நினைவித்ததும், அஃதாவது இடையருது நினைக்கும்படி செய்ததும் நீரைச் சடையில் நிறுத்தியது போல் ஓர் அரிய செயலேயாகுமாம். நிற்பித்து நினைவித்தானை எனக் கொள்க. பின்னர் இறைவன் அப்பருக்குப் பல கலைகளையும் கற்பித்துக் காணமுடியாதன வற்றையெல்லாம் காட்டி அவரை அறிவாளியாக்கினுனும். அறியாமையால் வருகின்ற பிறவிப் பிணியையும், அறிவை மறைக்கின்ற ஆணவ மல இருளையும் பொல்லா என்நோய் என்றுர். ஆண்டவனை நினைக்க வேண்டியது மனமாய் இருக்கவும் அதனைக்கூட அதுவாகச் செய்யாது அதற்கும் ஆண்டவனுடைய திருவருள் தேவைப்படுகிறது என்ற உண்மை இதனுற் பெறப்படும்.

நெஞ்சை நினையும்படி செய்விப்பது அவ்வளவு அரிய செயலா என்று கேட்கலாம். நாம் எல்லோருமே இறைவனை நெஞ்சால் நினைக்கிறேம். அது போதாது. அப்படி

இறைவனை நினைக்கும்போதே வேறு பலவற்றையும் நினைக்கிறோம். அது கூடாது. "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன், நினையாதொரு போதும் இருந்தறியேன்" என்று அப்பர் முதற் பதிகத்தில் பாடியிருப்பதை நோக்குக. நெஞ்சில் பலவற்றையும் நினைந்து கொண்டு ஆண்டவனை எப்போதும் நினைக்கிறோம் என்று எவ்வாறு சொல்ல முடியும் ?

"நின்னையெப் போதும் நினையலொட் டாய்நீ
நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று
நாடுவித்தி
உன்னையெப் போதும் மறந்திட் டுனக்கினி தாவிருக்கும்
என்னையொப் பாருள ரோசொல்லு வாழியிறையவனே"

என்னும் அப்பர்பாடலை நோக்குக.

நெஞ்சம் ஒரு திண்ணிய கருங்கற் பாறை. அஃது ஆண்டவனை நினைந்து நினைந்து நெக்கு நெக்கு உருக வேண்டும். காரான்ட மழைபோலக் கண்ணீர் சோரக் கல்மனமும் நல்மனமாய்க் கரைய வேண்டும். கனிபோற் குழைய வேண்டும். எந்தக் கனிபோல், தெரியுமா ? காரும் வார்சுவைக் கதலி வாழைப் பழம் போன்று கனியவேண்டுமாம். இதனைத் திருவாசகம் குறிப்பிடுகின்றது :

"குதுகுதுப் பின்றிநின் றென்குறிப் பேசெய்து நின்
குறிப்பால்
விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப் பழத்தின்
மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே."

கல்லாய் இருக்கும் நெஞ்சம் பக்குவமாய்ப் பழுத்த பழம்போல் கனிய வேண்டும். மற்றைப் பழங்கள்போல் வாழைப் பழத்தில் பருக்காழ்களும் விதைகளும் கொட்டைகளும் கிடையாதாகையால் வாழைப் பழத்தைச் சிறப்பாக

எடுத்து இங்கே கூறினர். "கல்லைப் பிசைந்து கனியாக் கித் தன் கருணை, வெள்ளத் தழுத்தி வினை கடிந்த வேதியனை" என்பது போன்று வரும் மணிவாசகங்களில் கனி என்பது வாழைப்பழத்தையே குறிப்பதாகும். இன்னொரு திருவாசகப் பாடலை நோக்குவோம்:

"இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏலம் ஏலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னுக்கினய்
எல்லை யில்லைநின் கருணை எம்பிரான்
ஏது கொண்டுநான் ஏது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னும் உன்கழல்
காட்டி மீட்கவும் மறுவில் வானனே."

இதில் 'கல்லை மென்கனியாக்கும் விச்சை' கூறப் படுகிறது. கல்லானைக்குக் கரும்பருத்தியது போன்று கற்போன்ற தமது நெஞ்சை வாழைப்பழம் போற் கனிவித் ததும் ஒரு வித்தை தான் என்கிருர் மணிவாசகர். இவ்வடி யின் கருத்தைப் பேராசிரியர் திருச்சிற்றம்பலக் கோவை யார் பாடல் ஒன்றில் விளக்கியிருப்பது அற்புதமாய் இருக் கும். அப்பாடல் வருமாறு :

" தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் செழுங்கயிலை
யவ்வரை மேலன்றி யில்லைகண் டாயுள்ள வாறருளா
னிவ்வரை மேற்சிலம் பன்னெளி திற்றந்த வீர்ந்தழையே."

இது தழையேற்பித்தல் என்னும் அகத்துறைப் பாடல். இதன் பொருள்: நம்மாட்டுண்டாகிய அருளான் இம்மலைக்கட் சிலம்பன் (தலைவன்) எளிதாகக் கொணர்ந்து தந்த வாடாத இத்தழை பகைவரை மெய்யெரித்த மேரு மலையாகிய வில்லை வளைத்துப் பணிகொண்டு பின்

என்னை அடிமை கொண்ட சிவந்த மலைபோலும் திரு மேனியையுடைய சிற்றம்பலவனது கைலை மலை யிடத் தல்லது பிறிதோரிடத்தில்லை என்று கூறித் தோழி தலை மகளைத் தலைவன் கொடுத்த தழையை ஏற்கும்படி கூறு கிருள். இதில் 'காய் சிலை யாண்டு என்னை யாண்டு கொண்ட' என்பதற்குப் பேராசிரியர் கூறும் நயவுரை யாவது: "வலியனவற்றை வயமாக்கிப் பயின்று பின் என்னை யாண்டான் என்பது போதர, காய் சிலை யாண்டு என்னை யாண்டு கொண்ட என்ருர். என்னைத் தனக் கடிமை கொள்ளுதல் காரணமாகப் பிறிதொன்றின் மேலிட்டுக் கல்லை வளைத்தான்; என் நெஞ்சை வளைத்தல் காரணமாக அல்லது தனக்கொரு பகையுண்டாய்ச் செய்த தன்று போலும் என்பது கருத்து. 'கல்லை மென்கனி யாக்கும் விச்சை கொண்டென்னை நின்கழற் கன்பனுக் கினுய்' என்பது மது." இவ்வாறு பேராசிரியர் மிக நுட்ப மாகத் திருச்சிற்றம்பலக் கோவையார் உரையில் மணி வாசகரின் குறிப்பறிந்து திருவாசகத்திற்கும் ஆங்காங்கு உரை காண்பது போற்றற் பாலது.

தேவார திருவாசகங்களில் இதுபோல் நுட்பமாய் அமைந்துள்ள நயங்களைப் பிற்காலப் புலவர்கள் விரிவாகத் தமது பாடல்களில் பல திறப்பட அமைத்து அழகு செய்வாராயினர். எடுத்துக் காட்டாகக் கம்பர் பாடல் ஒன்றை இங்கே நோக்குவோம். வேய்ங்குழலையும், யாழையும், குயிலையும், கிளியையும், மழலைச் சொல்லையும், மற்றும் இன்சொற்களுக்கு உவமையாகும் பொருள் களையும் படைத்துப் பழகித் தேர்ந்த கைகளால் பிரமன் சீதைக்கு இனிய குரலை அமைத்தான். எனவே சீதையின் இன் சொற்களுக்கு உவமை பிரமன் படைப்பில் வேறு இல்லை என்று பாடுகின்ருர் கம்பர்:

“குழல்படைத் தியாழைச் செய்து குயிலொடு கிளியுங் கூட்டி
மழலையும் பிறவுந் தந்து வடித்தகைம் மலரின் மேலான்
இழைபொரு முலையி னுள்தன் இன்சொற்கள் இயையச் செய்தான்
பிழையில துவமை காட்டப் பெற்றிலன் பெறுங்கொ லின்னும்.”

மேற் கண்டவாறு சிவபெருமான் திருநாவுக்கரசருக்குக் காணாதன வெல்லாம் காட்டி கல்லாதன வெல்லாம் கற்பித்தது போல் மணிவாசகருக்கும் காட்டதன வெல்லாம் காட்டிக் கேளாதன வெல்லாம் கேட்பித்துப் பல கலையும் பயிற்றுவித்தான் என்று திருவாசகம் காட்டுகிறது. “என்னையோர் வார்த்தையுட்படுத்துப் பற்றினாய்” என்று செத்திலாப் பத்தில் செப்புகிறார். திருப்பெருந்துறையில் சிவபெருமான் குருமூர்த்தியாய் எழுந்தருளி மணிவாசகருக்கு நல்லுபதேசம் செய்து திருவைந்தெழுத்தை ஓதி, சிவஞான போதம் கூறிச் சிவஞானச் செல்வம் நல்கினான் என்று வாதவூரர் வரலாற்றாலும் நாம் அறிகிறோம். மணிவாசகர் வாக்காலும் நாம் இதை நன்கு உணரலாம்:

“கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாமே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னும்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.”

“கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங் காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த
ஆட்டான்கொண் டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்.”

இவ்வாறு சிவன் அவர் சிந்தையுள் நின்றவதனால், அவன் அருளாலே அவன்தாள் வணங்கித் திருவாசகத்தைப் பாடினார் மணிவாசகர். சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக் கீழ்ச் சொல்லிய திருப்பாட்டு திருவாசகம். அதனைப் பொருளறிந்து விளங்கும் விதத்திலே பயில வேண்டும். இதை மணிவாசகரே கூறுகிறார் பாருங்கள்:

"சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக் கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக் கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து."

இவ்வாறன்றித் தேவார திருவாசகங்களைப் பொருள் தெரியாமற் பாடுவது தவறு. அப்பாடல்களைப் பொருள் தெரிந்து நாம் பாடும் பொழுதும், பிறர் பாட நாம் பொருள் தெரிந்து கேட்கும் பொழுதும், அவை நம் ஊன் கலந்து, உயிர் கலந்து, உவட்டாமல் இனிப்பனவாகும். அப்பொழுது ஓர் இன்பப் பெருக்கு நம் உள்ளத்தில் அலை வீசிப் பாய்கிறது. இதயம் இளகிப் பண்படுகின்றது. அப்பண்பட்ட உள்ளத்தில் அவ்வின்பம் அன்பாக மாறி அரனாரை வளைத்துக் குலாவுகின்றது. குதிகொண்ட கடவுளும் பதிகொண்டங் கமர்கின்றான். பொருள் புரியாத ஒரு தோத்திரப் பாடலை நாம் பாடினாலும், பாடக் கேட்டாலும் ஒரு பயனும் உண்டாவதில்லை. இன்னது என்று புரியாது நாம் பாடும் தோத்திரத்தை இறைவன் தான் ஏற்றுக் கொள்வானா? பொருள் புரியாத பாடல் இருள் மூடியே கிடக்கும். அதைப் பாடும் நம் மனத்தும் மருள் மண்டிக்கிடக்கும். களைதற் கரிய காரிருளில் மூடப் படுவோம். இக்கருத்தை அப்பர் அடிகளும் நினைந்தெடுத்துக் கூறுகின்றார்:

"சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை
நற்பான்மை யறியாத நாயி னேனை
நன்னெறிக்கே செலும்வண்ணம் நல்கி ஞானப்
பற்பாவும் வாயாரப் பாடி யாடிப்
பணிந்தெழுந்து குற்றந்தடைந்தார் பாவம் போக்க
கிற்பானைக் கிழவேளூர் ஆளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே."

திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார். அதனைப் பொருள் தெரிந்து காதலாகிக் கசிந்து ஓதுவார் கண்களில் கண்ணீர் மல்கும். நெஞ்சம் நெக் குருகும். இதனைச் சிவப்பிரகாசர் எவ்வாறு கூறுகிறார் பாருங்கள்:

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகம் இங்கு ஒருகால் ஓதிற்
கருங்கல் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே."

மனோன்மணீய வாசிரியரும் திருவாசகத்தை மகிழ்ந்து பாராட்டுகிறார்.

"கடையூழி வருந்தனிமை கழிக்கவேன்றோ அம்பலத்துள்
உடையாருன் வாசகத்தில் ஒருபிரதி கருதினதே."

"மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தில் மாண்டோர்கள்
கனஞ்சடையென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ."

இராமலிங்க சுவாமிகள் தலையை முக்காடிட்டு எப்பொழுதும் காட்சியளித்ததால், அவர் உச்சிக் குடுமி வைத்திருந்தது பலருக்குத் தெரியாது. திருவாசகப் பாடல் ஒன்று தீட்டிய ஓலை நறுக்கு ஒன்றை அவ்வுச்சிக் குடுமியில் அவர் கட்டிச் சுமந்ததை அறிந்தோர் கூறக்கேட்டு அதிசய மடைந்திருக்கிறேன். வள்ளலார் திருவாசகத்திற்கு உள்ளம் உருகி உருகிப் பாடிய பாடல்களைப் பலரும் நன்கறிவர். ஒன்றை மட்டும் இங்கே காணலாம்:

"வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில் நானடைதல் வியப்பன்றே."

அதுபோல் வேதப் பண்ணுளே விளைந்த அருட் பயனாய் விளங்குவது அப்பர் அடிகளின் தேவாரப் பாடல்கள். அப்பர் பாடல்களிலும் தோய்ந்து தோய்ந்து களிப்பெய்தியவர் வள்ளலார். அஃது எவ்வாறு புலனாகிறது பாருங்கள்:

"கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்தவருட் பயனே யுண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாத மன்றி
விண்ணுளே யடைகின்ற போக மென்றும்
விரும்பேனென் றனையாள வேண்டுங் கண்டாய்
ஒண்ணுளே யொன்பதுவாய் வைத்தாய் என்ற
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே."

சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக் கீழ்ச் சொல்லிய பாட்டு திருவாசகம் என்பதன் உட்கருத்து என்ன என்பதை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும். மாணிக்கவாசகர் "நமச்சிவாய வா அழ்க! நாதன் தாள் வாழ்க!" என்று திருவடியை வாழ்த்தியே திருவாசகத்

தைத் தொடங்குகிறார். அது போல் இறுதியில் அச் சோப்பதிகத்திலும் "மாதொரு கூறுடைய பிரான்தன் கழலே சேரும் வண்ணம் ஆதியெனக் கருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே" என்று முடிக்கின்றார். இவை யல்லாது இடையிடையேயும் திருவாசகம் முழுதிலும் அவர் எழுப்பும் மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த் தொலிகள் நம் செவிக்கினியனவாய் நம் சிந்தையைக் குளிர்விப்பனவாகும். ஏனெனில் தேடும் பொருளும் சிவன் கழலே யெனத் தெளிந்து ஓலமிட்டு அலறி உலகெலாந் தேடி உணர்ந்தவர் மாணிக்கவாசகர். அவர் திருவெம் பாவைப் பாடல்களோ சத்தியை வியந்தனவாய், எவ்வு யிர்க்கும் ஆதியாய் அந்தமாய்த் தோற்றமாய்ப் போகமாய் ஈறாய் மறைவாய் உய்ய ஆட்கொண்டருளுவனவாயுள்ள சிவன் திருவடிகளையே வியந்து பாடுகின்றன. திருச்சதகப் பாடல்களில் கூத்துடையான் கழற்கு அன்பராய் மெய் தானரும்பி விதிர் விதிர்த்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம் பொய்தான் தவிர்ந்து, கைதான் நெகிழவிடேன் என்று காலைப் பிடித்துக் கதறுகிறார். "உன் மணிமலர்த் தாள் வேறுபட்டேனை விடுதி கண்டாய்" என்று நீத்தல் விண்ணப்பத்தில் நீராய்க் கரைகிறார். அம்மானைப் பாடல் களும் அங்கருணைவார் கழல்களையே பாடுவனவாயுள்ளன. திருக்கோத்தும்பியிலும் சேவேறு சேவடிக்கே, தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் என்று முரல்கின்றார். பொற் சுண்ணம் இடிக்கும் பொழுதும் "இமவான் மகட்குத் தன் னுடைய கேள்வன் மகன் தகப்பன் தமையனெம்மையன் தாள்கள் பாடி" ஆடுகிறார். வானோர்க்கரிய சிவன் தம்மை வலிந்தாண்டு கொண்டு பூவாரடிச்சுவடு தலைமேற் பொறித்த பொற்பையெல்லாம் உரையாட உள்ளொளி யாடக் கண்களில் நீர்த்திரையாடுமா பாடித் தெள்ளேணம் கொட்டுகிறார். ஆனந்த வெள்ளத் தழுத்துவிக்கும் திருவடி கள் தேவர்க்கோர் வான்பொருள் என்று திருச்சாழல்

பாடுகிறார். பன்னாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர் தன்னாகந் துன்னவைத்த பெருமையைப் பேசித் திருப்பூ வல்லி கொய்கிறார். சிவன் திருவடியிட்டு அச்சுமுறிந்தது என்று திருவுந்தியார் பாடுகிறார். கூத்தன் சேவடி கூடும் வண்ணம் திருத்தோணோக்கம் ஆடுகிறார். நாராயணன் அறியா நாண் மலர்த்தாள் தமக்குக் கூராகத் தந்தருளும் ஆராவமுதின் அருட்டாளிணைபாடிப் பொன்னூசல் ஆடுகிறார். செந்தழல்போற் றிருமேனித் தேவர் பிரான் சிந்தூரச் சேவடி காட்டிப் பாசமறுத்து எந்தமராம் இவன் என்று தம்மை ஆட்கொண்டதைக் குயிற்பத்தில் கூறுகிறார். திருப்பள்ளி யெழுச்சியில் இறைவன் திருமுகத் தெழில் நகை கொண்டு திருவடி தொழுகிறார். கோயில் திருப்பதிகத்தில் இமையோர் சிரந்தனிற் பொலியும் கமலச் சேவடியைப் போற்றுகிறார். “குரை கழல் காட்டிக் குறிக் கொள்கென்று நின் தொண்டரிற் கூட்டாய்” என்று செத்திலாப் பத்தில் தவிக்கிறார். அடைக்கலப்பத்து சிவனது செழுக்கமலத்திரளன சேவடிக்கே நம்மைச் சேர்க்கின்றது. கருளக்கொடியோன் காணமாட்டாக் கழற் சேவடி யென்னும் பொருளைப் பெறவே ஆசைப்பத்தில் ஆசைப்படுகிறார். இரவும் பகலும் எழிலார் பாதப் போதாய்ந்தணைவ தென்று கொல்லோ என்று புணர்ச்சிப் பத்தில் புலம்புகின்றார். “பாடிமால் புகழும் பாதமே யல்லால் பற்று நான் மற்றிலேன்” என்று வாழாப்பத்தில் வழுத்துகின்றார். (“மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாதமே மனம் பாவித்தேன்” என்ற சுந்தரர் வாக்கு இங்கே நினைவிற்கு வருகின்றது.) தூய் மலர்க்கழல் சரணாகத் தந்ததைத் திருக்கழுக்குன்றப் பதிகத்தில் திகழ வைக்கிறார். “கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர” என்று இரவும் பகலும் எண்ணி எண்ணிக் குழைவதுதான் குழைத்த பத்து. உயிருண்ணிப்பத்தில் புறம் போகலொட்டேன் என்று

இறைவன் தாள் பூண்டு நிற்கிறார். அச்சப்பத்தில் மால்காணு மலரடி பரவி வெண்ணீறணிகிலாதவரைக் காண அஞ்சுகிறார். திருப்பாண்டிப் பதிகத்தில் பேரின்ப வெள்ளத்துட் பெய்கழலே சென்று பேணுமினே என்று பேசுகிறார். பிடித்தபத்தில் சீருடைக் கழலே என்று சிவனைச் சிக்கெனப் பிடிக்கின்றார். உயிர் அன்பினால் இறைவனது பேரருளை நினைந்திரங்குதல் திருவேசறவு. அப்பதிகத்தில் கரும்புதரு சுவையூட்டும் கழலிணைகள் காட்டவும், தாம் வார் கழல் வந்துற் றிருமாந்திருந்த திறம் கூறுகின்றார். திருப்புலம்பலில் பூங்கழல்க ளவையல்லா தெவை யாதும் புகழேனே என்று குரைகழற்கே கற்றாவின் மனம் போலக் கசிந்துருகுகின்றார். குலாப் பத்தில் தம்மை இறைவன் தனதாள் முயங்குவித்த இடையீடுபடா அநுபவத்தைக் கூறுகிறார். அற்புதப் பத்தில் இறைவன் பொன்னடியிணை காட்டி நின்ற அற்புதத்தை விளம்பு கின்றார். சென்னிப்பத்தில் இறைவன் சேவடிக்கண் தமது சென்னி மன்னிப்பொலியும் திறனைச் செப்பு கின்றார். திருவார்த்தையிலும் இறைவன் தன் கழலைக் கசிந்துருகக் காட்டும் பெருவார்த்தையே பேசப்படு கின்றது. பெய்கழலடி காட்டிப் பிரியேனென்றென் றருளிய அருளும் பொய்யோ என்று எண்ணப்பதிகத்தில் எண்ணுகின்றார். யாத்திரைப் பத்தில் பொய்விட்டு உடையான் கழல்புகவே போவோம் என்று அழைக் கின்றார். திருவெண்பாவில் வார்கழலே வந்தித்துச் சேவடியே சேர்கின்றார். பண்டாய நான்மறையில் "பிறப் பறுத்தேன் நல்ல மருந்தினடி யென்மனத்தே வைத்து" என்று பூரிக்கிறார். திருப்படை யாட்சியில் கண்களி ரண்டும் அவன் கழல் கண்டு களிப்பன வாகாதே என் கிறார். ஆனந்த மாலையில், "தாயே யென்றுன் தாளடைந் தேன்" என்று மின்னேரனைய பூங்கழல்கள் முன்னே நின்று மொழிகின்றார். இறுதியாக அச்சோப்பதிகத்தில்

தையலிடங் கொண்ட பிரான் தன்கழலே சேரும் வண்ணம் தமக்கு அருளியவாறு ஆர் பெறுவார்? என்று ஆர்ப்பரிக்கின்ருர்.

ஆர்பெறுவார் ? ஆம், வேறு யார் பெறுவார் ? நம் திருநாவுக்கரசர் தாம் பெற்றிருக்கிருர். நான்கு ஐந்து ஆரும் திருமுறைகளை நாவரசர் நவின்றுள்ளார். அவற்றுள் நான்காம் திருமுறையின் முதற்பாட்டிலேயே 'ஏற்ருய் அடிக்கே' என்று சிவபெருமான் தம்மை ஓர் அடியவனுகக் கொண்டு திருவடியில் ஒன்று அருளியதைத் தெரிவிக்கிருர். அதுபோல் தாம்பாடிய ஆரும் திருமுறையின் இறுதிப் பாடலிலும் "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என முடிக்கின்ருர். இவ்வாறு முதலிலும் முடிவிலும் என்பதன்றி இடையிடையே எங்கெங்கு நோக்கினும் அப்பர் தேவாரம் அனைத்தினும் அரன் கழல் ஒலித்து ஆரவாரிக்கும். கருவுற்றிருந்த காலம் தொட்டு சிவன் கழலையே சிந்திக்கப் பெற்றவர் வாகீசர். அவருடைய திருவடித் தொண்டின் பெருமையைச் சேக்கிழார் அப்பூதியடிகளின் மூலம் இனிது தெரிவிக்கிருர் :

"நம்மையுடையவர் கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
இம்மையினும் பிழைப்பதென எம்போல்வாருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக்கரசர்."

அப்பர் புரிந்த தொண்டெல்லாம் சிவன் திருவடிக் கீழிருந்து புரிந்த திருத்தொண்டு, சிவன் திருவடி நோக்கிப் புரிந்த திருத்தொண்டு, சிவன் திருவடிக்கு உரித்தான உகந்த திருத்தொண்டு, சிவன் திருவடியெய்தச் செய்த தவத்தொண்டு, சிவன் திருவடி விரும்பும் பெருந்தொண்டு அப்பர் பாடிய பாடல்களும் இறைவன் திருவடிக் கீழ்ச் சொல்லிய திருப்பாடல்களே.

இறைவனைக் கள்வன் என்று அடியார்கள் எல்லாரும் பாடியுள்ளார்கள். ஆனால் பல நாட்கள்ளன் ஒரு நாள் பிடிபடுவான். அந்தக் கள்வனைவிட மிகப் பொல்லாதவன் எத்தன். எத்தன் எப்பொழுதும் ஏமாற்றிக் கொண்டே யிருப்பான். எத்தன் என்று இறைவனை யாரும் சொன்ன தில்லை. மாணிக்கவாசகர்தாம் துணிந்து சொன்னார். இதோ பாடுகிறார் பாருங்கள் :

"அத்தனே யண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே யாதும் ஈ றில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை யல்லையாய் நிற்கும்
எத்தனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே."

இஃது ஓர் அருமையான தேன்பிலிற்றும் திருவாசகத் தீந்தமிழ்ப் பாடல். எந்தப் பிடிப்புக்கும் இடம் கொடாமல் மெதுவாய் உருவிக்கொண்டு அப்பால் ஓடிவரும் எத்தனும் இறைவன். எந்தப் பொருளினுள்ளும் இருப்பது போற் காட்டி இல்லாமல் மாயமாய் மறைந்துவிடும் ஏமாற்று வித்தைக் காரனும். கள்ளவிழி விழித்துக் காணக் கண்ணுற் கண்ணுள்ளான்போலே கரந்து ஒளிவானும். ஆயினும் அவன் பத்திவலையிற் படுவோன் ஆகையால், பத்தர்கள் இறைவனைச் சிக்கெனப் பிடித்துள்ளார்கள் என்று கூறி மணிவாசகர் சிக்கெனப் பிடித்தார். தமக்கு முன்னரும் பத்தர்கள் அவ்வாறு இறைவனைச் சிக்கெனப் பிடித்த திறனையே நினைந்து மணிவாசகர் அவ்வாறு பாடியுள்ளார். அவ்வாறு இறைவனைச் சிக்கெனப் பிடித்த பத்தர்கள் பலர் இருப்பினும் அவருள்ளே மிகச் சிறந்தவராகத் திகழ் பவர் திருநாவுக்கரசர். நாவரசரும் மணிநாவரும் கடவுளையே வளைத்துப் பிடிக்கும் வல்லமையும் வீரமும் பெற்றி

ருந்தனர். "இதோ இறுகக் கட்டிப்பிடித்தேன். இனி எவ்வாறு தப்பி ஓடமுடியும் ?" என்று அவர்கள் ஆண்டவனையே பற்றிப் பிடித்துப் பேசுவதானால், அவ்வூற்றமும் உணர்ச்சி ததும்பும் உண்மையுரையும் எத்தகைய உரமான உள்ளத்திலிருந்து உதித்தெழ வேண்டும் ? இறைவனை நேருக்கு நேராய் இருத்தி வைத்துக்கொண்டு இவர்கள் இருவரும் அவனிடம் உரையாடுவதும், விளையாட்டுக் காட்டுவதும், வீரம் பேசுவதும், கேலிசெய்வதும், அளவளாவுவதும், அசதியாடுவதும், அன்பிலே கரைந்து கரைந்து உருகுவதும், இன்பம் பருகுவதும், காதலாகிக் கசிந்து கண்ணீர் பெருக்குவதும், தெய்வப் பாமாலைகளைத் தெவிட்டாது ஓதுவதும் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவனவாகும். அற்புதமான திருவிளையாடல்களைத் தன் அடியார்களிடத்திலே வந்து புரிவதில் இறைவனுக்கு மட்டற்ற ஆர்வம் உண்டு. அவ்வடியார்களும் இறைவனைப் பிரியாது அவனோடு உடனுறைவதில் உலப்பிலா இன்பம் கண்டு அவ்வின்பத்திலேயே திளைத்து நிற்பர். இத்தகைய ஞானநுபவங்களையும், ஆன்ம வுணர்ச்சி இன்பங்களையும் அழகிய பக்திப் பாடல்களாக அப்பரும் மணிவாசகரும் நம் நல்வாழ்வுக்கு அளித்துள்ளார்கள்.

ஆண்டவன் அடுத்தடுத்து வந்து இவர்கள் இருவரிடத்திலும் ஆடல் புரிவான். அவர்களுடைய உடலினுள்ளே புகுவான், அவர்கள் உள்ளத்திலே உறைவான், உயிரோடு கலப்பான், உணர்வு மயமாவான். அப்பொழுது அவர்களுக்கு உடம்பெல்லாம் அமுத தாரைகள் ஊற்றெடுத்துப் பாயும். இறைவனோடு அவர்கள் ஒன்றாகத் திளைத்திருப்பார்கள், இவ்வுலகையே மறப்பார்கள். ஆனந்தக் கண்ணீர் அருவிபோலப் பொல பொலக்கும். திடீரென்று இறைவன் மறைந்து விடுவான். அவ்வமயங்களில் அவர்கள் ஆற்றொணாத் துயரில் வீழ்ந்து அல்லற்படுவார்கள். எங்கும் தேடுவார்கள். பொங்கிப் பாடுவார்கள். இறை

வனைப் பிரித்து நொடிப் பொழுதும் தாம் வாழ்தல் ஒல்லாது என்பதை உணர்வார்கள். ஏங்கியேங்கித் தவிப் பார்கள்.

நாவரசர் ஒரு நாள் திருவொற்றியூரின் அருகிலுள்ள வயல் வெளியிலுள்ள ஓடைக்கரையில் அமர்ந்து சிந்தனை யில் ஆழ்ந்திருந்தார். சிவனும் சிரித்து இன்முகம் காட்டி னான். அப்பர் பெருமகிழ்வெய்திப் பேசலுற்றார்:“வானிலே பறக்கும் முப்புரங்களும் தீவாய்ப் பட்டுப் பொடியாய் உதிர வில் வளைத்த வீரனே! ஆரூர் அப்பனே; இனி நீ தப்பித் துக்கொண்டு ஓடும்படி விட்டுவிட மாட்டேன். நீ என் மனத்தைவிட்டு எவ்வாறு பிரிந்து போக முடியும்?” என்று பாடி இறைவனை இறுகப் பிடித்தார் :

“திரியும் மூவெயில் தீயெழச் சிலைவாங்கி
நின்றவனே என் சிந்தையுள்
பிரியுமா றெங்ஙனே பிழைத்தேயும்
போக லொட்டேன்
பெரிய செந்நெற் பிரம்புரி கெந்தசாலி
திப்பியம் என்றிவையகத்து
அரியும் தண்கழனி அணி ஆரூர்
அம்மானே.”

ஆனால் இறைவன் தப்பித்துக் கொண்டு ஓடப்பார்க் கிறான்: அப்பர் கட்டிப் பிடிக்கிறார். இறைவன் வெட்டி இழுக்கிறான். அப்பர் அமுக்குகிறார். இறைவன் திமிறு கிறான். அப்பர் வலுக்கப் பற்றுகிறார். இறைவன் குலுக்கி எற்றுகிறான். அப்பர் தழுவுகிறார். இறைவன் நழுவுகிறான். அப்பர் அள்ளுகிறார். இறைவன் துள்ளுகிறான். அப்பர் பதறுகிறார். இறைவன் உதறுகிறான். அப்பர் அண்டுகிறார். இறைவன் மிண்டுகிறான். அப்பர் வேண்டுகிறார். இறை வன் தண்டுகிறான், உழற்றுகிறான், கழற்றுகிறான். விடாக் கண்டராய் அப்பர் பிடிக்கவும் கொடாக் கண்டனாய் இறை வன் குதிக்கிறான். அப்பர் பிடிக்கிறார். இறைவன் துடிக்

கிறுன். இவர் விடாப்பிடியும் அவன் பிடிவாதமும் விட்ட பாடில்லே. அப்பரின் விரட்டுப் பிடியை இறைவன் முரட்டுத் தனத்தால் முறியடிக்கப் பார்க்கிறுன். அப்பர் பாடுகிறுர் பாருங்கள் :

"முளைத்த வெண்பிறை மொய் சடை யுடையாய்
எப்போதும் என் நெஞ்சிடங்கொள்ள
வளைத்துக் கொண்டிருந்தேன் வலிசெய்து
போக லொட்டேன்
அளைப்பிரிந்த அலவன் போய்ப் புகுதந்த
காலமுங் கண்டு தன்பெடை
திளைக்குந் தண் கழனித் திருவாரூர்
அம்மானே."

இவ்வாறு தத்திப் பாய்ந்து தளரச் செய்து தாண்டி ஓடும் எத்தன் ஆனதால் தான், அப்பர் வலி செய்து போகலொட்டேன் என்று சிக்கெனப் பிடித்தார் போலும். வலுக்கட்டாயமாய் இறைவன் போக முயன்றதை 'வலி செய்து' என்றுர். இதைக் குறித்துதான் மணிவாசகர் "பத்தர் சிக்கெனப் பிடித்த செல்வமே" என்று கூறித் தாமும் சிக்கெனப் பிடித்தார் போலும். அப்பர் "போகல் ஒட்டேன்" என்று கூறி வளைத்துப் பிடித்தது போலவே மணிவாசகரும் "போகல் ஒட்டேன்" என்று இறைவன் திருவடியைக் கட்டிப்பிடிப்பதை நாம் திருவாசகத்திலும் காணலாம்:

" வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்
வேண்டேன் மண்ணும் விண்ணும்
வேண்டேன் பிறப் பிறப்புச் சிவம்
வேண்டார்தமை நாளும்
தீண்டேன் சென்று சேர்ந்தேன் மன்னு
திருப்பெருந்துறை இறைதாள்
பூண்டேன் புறம் போகேன் இனிப்
புறம் போகல்ஒட் டேனே."

'போகலொட்டேன்' என்னும் பொன்மொழி இருவர் வாக்கிலும் ஒன்று போல் வருவதை நன்று நாம் ஒப்பு நோக்குதல் வேண்டும். ஊனை உழைத்து உலகைப் பற்றலாம், வானை வளைத்து விண்ணைச் சுற்றலாம். புகழைச் சேர்க்கலாம், பொருளைக் குவிக்கலாம். ஆனால் இவையெல்லாம் வெறுஞ்செயல்கள், பயனற்ற செயல்கள். ஒருமை மனதாகியே அல்லல் அற இறைவன் திருவருளைக் குறிக்கொண்டு நெறிக்கொண்டு அவனைப் போகலொட்டாது சிக்கெனப் பிடிப்பதுதான் மனிதப் பிறவியின் மாண்பயன். எனவே புகழும், செல்வமும், மண்ணும், விண்ணும், பிறப்பும், இறப்பும் வேண்டேன் என்றார். இவற்றை யொழித்து இவற்றினும் மேலான பேரின்ப வீட்டைத் தரும் சிவபெருமானை விடாது பிடிப்பதையே வேண்டும் என்றார். சிவனை வேண்டும் தவம் விரும்பாது அவமே விரும்பும் ஆதர்களையும் சேரேன் என்றார். இறைவனைக் கைதான் நெகிழவிடாது கட்டிப் பிடித்த மணிவாசகரும் அப்பரைப் போலவே சிக்கெனப் பிடித்த சீர்த்தமொழிச் செம்மைவீரர் ஆதலால் இருவர் குறிக்கோளும் ஒன்றாய் இறைவன் திருவடியிலேயே தோய்ந்து கிடந்தன.

இங்கே பிடிப்பது என்றால் கையினால் கட்டிப் பிடிப்பது அன்று. நமது புத்தியாகிய அறிவைக் கொண்டு அன்பால் இறைவன் திருவடியை அகலாது அணைவதாகும். வன்பினால் பற்றினால் அதனைத் துன்பமாய்க் கொண்டு இராவணனைத் துவைத்தது போல் துவைத்து விடுவான். அன்பினால் பிடிக்கவேண்டும், அறிவைக் கொண்டு பிடிக்கவேண்டும். அப்பர் இதனை அழகுறக் கூறுகிறார். "பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தியொன்றிப், பிடித்து நின்தாள்களென்றும் பிதற்றி நானிருக்க மாட்டேன், எடுப்பனென் றிலங்கைக்

கோன்வந்தெடுத்தலும் இருபது தோள், அடர்த்தனே யாலவாயி லப்பனே அருள்செ யாயே.''

எட்டி யெட்டிப் பார்ப்பவர்க்கு எட்ட எட்ட நிற்பவன் இறைவன். நல்ல பதங்களுக்குள்ளே மிக நல்ல பதமாகிய வீட்டின்பமாய் விளங்குகிறவன். ஞானக்கொழுஞ் சுடராய், வாலறிவனாய், அறிவுக் கறிவாய் ஒளிவிடு கிறவன். நான்கு வேதங்களின் உச்சியின் மேலே ஒளி விட்டு நிற்கிற மந்திரங்களின் மேற்பட்ட மந்திரத்தையும் கடந்து, அப்பாலுக் கப்பாலாய் இன்னதென்று சொல்ல முடியாத தோர் அற்புத நிலையில் உள்ளவன். அத்தன்மை யனாகிய அருமைக் கடவுளையும் "செல்லவிட மாட்டேன்" என்று இவர்கள் இறுக்கிப் பிடிப்பது செயற்கருஞ் செயல் அல்லவா?

"என் கற்பகக் கொழுந்தே! பொன்னார் மேனியனே! மாமணிச் சோதியனே! என் ஆருயிர் நாயகா! கண் மணியான கடவுளே! இனி உன்னையான் விடவே மாட்டேன்!"என்று அப்பர் தழுவுவதைப் பாருங்கள்:

"நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தி
நலஞ்சுடரே நால்வேதத் தப்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள்
நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யானுன்னை விடுவேன் அல்லேன்
கனகமா மணி நிறத்தெங் கடவு ளானே.''

வேதங்களாலும் உணரமுடியாதவன் இறைவன் என் பதைச் சிலப்பதிகாரம் "மறைமேல் மறையாகி ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றியே நிற்பாய்" என்று குறிப்பிடு கின்றது. வேதங்களாலும் இறைவன் இன்னபடியன் என்று சொல்ல முடியாதிருக்கும் வஞ்சக நிலையைத் திருவிளையாடற் புராணமும் கூறுகிறது:

" பூதங்க ளல்ல பொறியல்ல வேறு
புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல இவையன்றி நின்ற
பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச
வெளியென்ப கூடல் மறுகிற்
பாதங்கள் நோவ வளையிந்த ணுதி
பகர்வாரை யாயு மவரே."

நால்வேதத் தப்பால் நின்ற செயற்கரிய சூழல் நிலையை, வேதங்கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப தாகப் பரஞ்சோதியார் கூறுவது சுவை பெருக்குவதாகும். வஞ்சவெளியையும் எட்டிப் பிடித்தார்கள், கட்டிப் போட்டார்கள் நம் சமயகுரவர்கள். எப்படி?

சிவன் இன்ன தன்மையன் என்று அறியப்படா தவன். அவனது உண்மை நிலை தேவர்களுக்கும் தெரியாது. தேவர்கள் முனிவர்கள் போன்ற பெரியோர் களுக்கு இறைவன் நிறம் என்ன நிறம் என்று கூட இன்னும் தெரியாது; பின், அவன் திறம் யாது என எங்ஙனம் அறியப் போகிறார்கள் என்று அப்பர் பாடுகிறார்:

" மின்னிறம் மிக்க இடையுமை நங்கையொர்
பால்மகிழ்ந்தான்
என்னிற மென்றம ரர்பெரி யாரின்னந் தாமறியார்
பொன்னிற மிக்க சடையவன் பூந்துருத் தியுறையும்
என்னிற வெந்தை பிரான்தனை யானடி போற்றுவதே."

இதனை மணிவாசகர் இன்னும் சற்று வேடிக்கையாகக் கூறுகிறார். சிவபெருமான் ஓர் இருட்டறையினுள்ளே போய் அடைத்துக் கொண்டான். தேவர்கள் அவ் வறையை முற்றுகை யிட்டார்கள். அறையினுள்ளே அவர்களாற் செல்ல முடியவில்லை. ஒரே ஒரு சிறு துளை தான் வெளியே தெரிந்தது. அத்துளையின் வழியாகத் தேவர்கள் ஒவ்வொருவராய் உள்ளே உற்றுப் பார்த்து

அறிய முயன்றனர்கள். அங்ஙனம் கூர்ந்து கவனித்த ஒருவர் "கடவுள் நிறம் சிவப்பாக இல்லையே! வெள்ளையாகத்தான் தெரிகிறது!" என்றார். இன்னொருவர் பார்த்துவிட்டு, "இதனுள்ளே வெள்ளை நிறமே காணப்படவில்லை!" என்றார். மற்றும் ஒருவர் உற்று நோக்கினர். "உள்ளே கடவுள் ஒரே ஒருவராகத் தாம் இருக்கிறார் போலிருக்கிறது!" என்றார். வேறும் ஒருவர் பார்த்துவிட்டு "இல்லவே இல்லை! ஒருவரா உள்ளே இருப்பவர்? பலராக அல்லவோ யான் காண்கின்றேன்! பல கடவுளர்கள் உள்ளே உள்ளார்கள்!" என்று கூச்சலிட்டார். "ஐயோ! அணுவளவாகத் தானே ஆண்டவன் காணப்படுகிறான்!" என்று மற்றொருவர் அங்கலாய்த்தார். "அணுவளவு கூட இல்லையே! அதிலும் நுண்ணியர்!" என்றார் கண்ணைக் கசக்கிய கடுவிழியார் ஒருவர். இவ்வாறு தேவர்கள் ஒருவர் கண்டபடி மற்றொருவர் காணமுடியாது, இறைவனின் உண்மை நிலையையும் உணர முடியாது புத்தி சிதறிச் சித்தம் திகைத்து மனம் குழம்பி மயங்கினராம். இதனைத் தித்திக்கும் திருவாசகப்பாடல் ஒன்றால் அறியலாம்:

'வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்று
அநேகன் ஏகன் அணு அணுவில் இறந்தாய் என்று அங்கு
எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்துமாறு அறியாத எந்தாய் உன்றன்
வண்ணந்தான் அதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்கள் அவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமான் என்சொல்லிச் சிந்திக் கேனே"

சிவபெருமான் கோயில் வாயிலில் அரி அயன் போன்ற முதல் தேவர்களும், சூரிய சந்திரரும், மற்றும் முனிவர்களும் வற்றிக் கிடந்தும், பற்றியும், பதறியும்,

இன்னும் அருள்பெற்றுக் கண்டார்கள் இல்லை என்கிறார் திருநாவுக்கரசர் :

"அரிஅயன் இந்திரன் சந்திரா தித்தர் அமரரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யார்உணங்
காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போகமுனிவர் புலம்பு கின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப என்னோ திருக்குறிப்பே."

தவம் கிடக்கும் மாலும் பிரமனும், தீயில் மெழுகு போல் உருகும் உம்பரும் முனிவரும் இன்னும் சிவனருள் பெறாது நிற்க, நான் பெற்றுவிட்டேன் என்று மணிவாசகர் பாடுகிறார் :

"அன்பா ராகிமற் றருந்தவம் முயல்வார்
அயனு மாலுமற் றழலுறு மெழுகாம்
என்ப ராய்நினை வாரே னைப்பலர்
நிற்க விங்கெனை யெற்றினுக் காண்டாய்."

"வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
கான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்
டுன்வந் துரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்."

இறைவனைக் கண்டுபிடிக்கப் பலரும் பலவிதத்தில் முயன்றிருக்கிறார்கள். பேரொளியைப் பரப்பிச் சென்று (*Search-light*) பத்துத் திசையும் தேடியிருக்கிறார்கள். திருமால் மரகதவொளியைப் பரப்பிச் சென்று பாதலம் வரையில் தேடியிருக்கிறான். பிரமன் வெண்ணிற மணி யொளியை மாட்டிக்கொண்டு விண்ணெலாம் தடவி மேலேயுள்ள இடமெல்லாம் பார்த்துவிட்டான். மற்றும் சிலர் குருசீட பரம்பரையில் வரும் முறையாயுள்ள உபதேச மொழிகளைக் கொண்டு இறைவனைக் காண முயன்றார்கள். சில வேதாந்திகள் சிவோகம் பாவனையால்

ஒத்திருப்பதாக நடித்துச் சிவனைப் பிடிக்க முயன்றுர்கள். வேறுசிலர் வேதப்பொருள் கொண்டு இறைவனைப் பிடிக்க முயன்றுர்கள். சிலர் மந்திரதந்திரங்களாலும் இந்திரசாலங்களாலும் பிடிக்க முயன்றுர்கள். சிலர், ஆணுகவும், பெண்ணுகவும், அலியாகவும் இறைவனைப் பால்வேறு படுத்துக் காண முயன்றனர். சிலர் ஐம்புலனை யும் ஒடுக்கி, உண்டியைத் துறந்து மலையுச்சியில் இருந்து, விரதம் காட்டி, உடம்பை வாட்டி, யோகில் அமர்ந்து அரிய தவம் செய்து காணமுயன்றனர். இவர்கள் எவருக்கும் பிடிபடாது இறைவன் மறைந்து ஓடினுன். அப்படி ஓடும் கள்வனை விடாது தொடர்ந்து சுற்றிப் பிடித்துக் காலில் பூமாலைகளால் விலங்கினை இடுங்கள் என்று பற்ற முயன்றவர்களுக்கும் அகப்படாது மறைந்.தான் இறைவன் என்று பாடுகிருர் மாணிக்கவாசகர் :

"மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னெளி கொண்ட பொன்னெளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்
துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திற ஞேக்கி வருந்தினர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
குத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்தும் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்

ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் தானேயான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலம் காட்டி யருளலும்
உளையா அன்பென் புருக வோலமிட்
டலைகடற் றிரையி னார்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்."

ஆகா! தமக்கு ஆண்டவன் அங்கைக்கனி ஆயினன் என்று விம்மிதம் கொள்கிறார் மாணிக்கவாசகர். உருண்டு போகும் நெல்லிக்கனி உள்ளங்கையில் உருளாமல் அமைந்து அடங்கி நிற்கும். அதன் எப்பகுதியும் கண்ணுக்குப் புலனாகி நன்கு காட்சியளிக்கும். நெல்லிக்கனி சாவா மருந்தாகிய கற்பம் என்பர். ஆகவே அது பேரின்பம் ஈயும் இறைவனுக்கு உவமையாயிற்று. உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி உடையவர்களுக்கு உகந்தபொழுது தப்பாது பயன்படுவதுபோல் உண்மை அடியார்களுக்கு இறைவன் எப்பொழுதும் காட்சி

யளித்துப் பேரருள் சுரப்பான் என்று அப்பரும் மையலாய் நின்று மறவா மனம்கொண்டு பாடுகின்றார் :

"செய்ய மேனியன் தேனொடு பால்தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்
மைய லாய்மற வாமனத் தார்க்கெலாம்
கையில் ஆமல கக்கனி யொக்குமே."
(ஆமலகம்=நெல்லி)

சிவனிடத்துப் பித்துக்கொண்டு மறவா மனத்துடன் அவனுக்கு அன்புசெய்யும் அடியார்கள் உள்ளங்கை நெல்லிக்கனி போல் உதவுவான் சிவபெருமான் என்று கூறிய அப்பர் வாக்கு மாணிக்கவாசகர் அநுபவத்தில் உண்மையாகித் "தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்" என்று அவரே பாடக் கண்டோம்.

அஞ்ஞானமாகிய இருளைக் களைந்து மெய்ஞ்ஞான மாகிய ஒளியைக் கொடுப்பவன் சிவபெருமான். கல்வி கேள்விகளுக்கெல்லாம் முதல் தனிவித்தாய் உள்ளவன் சிவபெருமான். அவன் ஞானக்கொழுந்து. அவனே வாலறிவன். அந்த வாலறிவனை அறிவதுவே கற்ற கல்வியின் பயன். அவனை அறிவது என்பது அவன் அருளாலே அவன்தாள் வணங்குதலேயாகும். அந்த ஞானப்பொருளாய் இருப்பவனைப் பிடித்து விலங்கிட்டு விட்டேன் என்கிறார் நாவுக்கரசர். எப்படி விலங்கிட்டார்? "ஞானமாகிய விலங்கினால் கட்டிவைத்தேன்" என்கிறார் :

"முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே"

தமக்கு அறிவைக் கொடுத்து அறியாமை என்னும் இருளாகிய விலங்கை அறுத்து ஆண்டவனை ஞான மாகிய விலங்கிட்டுக் கட்டுவேன் என்று அப்பர் கூறும்

நயம் சிந்தித்து மகிழற்பாலது. ஞானத் தளையிடுதல் என்றால் என்ன என்பதை அடுத்துவரும் பாடலில் அப்பர் விளக்குகிறார். ஞானத்தால் தொழுவதுதான் ஞானத்தால் தளையிடுதல் என்கிறார் அப்பர் :

"ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாயுனை நானுந் தொழுவனே."

இவ்வாறு அப்பர் ஞானம் என்னும் கயிற்றால் இறைவனைக் கட்டி வைத்தேன் என்கிறார். மாணிக்கவாசகர் என்ன சொல்கிறார்?

"பத்தி வலையிற் படுவோன் காண்க" என்று பகர்ந்தவர் அல்லரா அவர்! அதே பத்திக்கு நிலைக்களனாகிய சித்தம் என்னும் வலிய கயிற்றினால் சிவன் திருவடிகளைக் கட்டினேன் என்கிறார். கயிற்றாலே அவர் தம்மால் கட்ட முடிந்ததா? இல்லை. அவராகக் கட்டவில்லை. இறைவனே வலியவந்து தம்முடைய சித்தமாகிய வலிய கயிற்றால் தப்பிப் போகாதபடி தன் திருவடிகளைத்தானே கட்டச் செய்தான் என்கிறார். முதலில், அவர் கட்டும் நிலையிலாவது இருந்தாரா? இல்லை. அவர் கட்டு நிலையில் இருந்தார். அஃதாவது, பசுத்தன்மை என்கிற கயிற்றால் (பாசத்தால்) ஏனை உலகத்தவர்கள்போல் கட்டப்பட்டிருந்தார். அதனால் இறைவன் மாட்டு இயல்பாக உண்டாக வேண்டிய மெய்யன்பு இல்லாதிருந்தது. இறைவன் வந்து முதலில் அவரைக் கட்டியிருந்த கயிற்றை அறுத்து அவரிடத்துள்ள பசுத்தன்மையையும், பாசத்தன்மையையும் சிறிதும் தோன்றாதிருக்கும்படி செய்து, ஊரார் சிவப்பித்துக் கொண்டவன் என்று ஏளனம் செய்யும்படி ஆக்கிவிட்டான். அதன்பின் இறைவன் தன் திருவடியை அவருடைய உள்ளமாகிய

வலிய கயிற்றைக்கொண்டு அவரே கட்டும்படியும் செய்து விட்டான். அடியார்விலங்கை அறுத்த ஆண்டவன் தானே விலங்கில் மாட்டிக்கொண்டான். இவ்வாறு விளையாட்டாக விளையாடி விலங்கில் சிக்கிக்கொண்ட அந்த வித்தகனுடைய விசித்திரமான திருவருள் இருந்தவாறு என்னே! என்று வியந்துருகுகின்றார் மாணிக்கவாசகர் :

"பத்திமையம் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்
பித்தன்இவன் எனஎன்னை ஆக்குவித்துப் பேராமே
சித்தம்எனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே."

திருநாவுக்கரசர், இருள்அறுத்து ஆண்டவனை ஞானக் கயிற்றால் கட்டினேன் என்கிறார். மாணிக்கவாசகர், பசுபாசம் அறுத்தவனைப் பத்திக் கயிற்றால் கட்டினேன் என்கிறார். இறைவனையும் வலிந்து கட்டும் ஆற்றல் பெற்றிருந்தும், ஆணவ முனைப்பு சிறிதும் இன்றி, தான் கட்டினதாகச் சொல்லாமல் இறைவன் கட்டுவித்தான் என்று சிவன் செயலாகக் கூறிய மணிவாசகரின் உயர்ந்த பணிவு உன்னற்பாலதாகும். அதுபோன்றே அப்பரும் "உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே' என்றதும் என்க. மேலே குறித்த திருவாசகப் பாடலின் பொருள் இனிது புலனாகும். கட்டப்பட்டது சிவன் திருப்பாதம். சித்தம் எனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டப்பட்டது. கட்டியவர் மாணிக்கவாசகர். கட்டுவித்தது சிவபெருமான்.

மணிவாசகரின் பாசத்தளையை அறுத்து அவரைப் பித்தராக்கிய இறைவன் தானே மீண்டும் கயிற்றில் கட்டுண்டானே, அவனும் ஒரு பித்தன் தானோ எனின், இல்லை, அவன் 'வித்தகன்' என்கிறார். வித்தகன் என்றால் பேரறிவாளன் என்று பொருள். பின்னை, ஏன் அவன் விலங்கில் அகப்பட்டான் எனின், அஃது அவனுக்கு ஒரு விளையாட்டு என்கிறார். எத்தகைய

விளையாட்டு? தில்லைக் கூத்தனின் திருநடனமே ஐந் தொழில் விளையாட்டல்லவா? படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் விளையாடல் களுள் இஃது அருள்விளையாட்டு என்க.

இறைவன் மணிவாசகரை எப்பொழுது எப்படி எத்தகைய பித்தன் ஆக்கினுன் என்பதைப் பின்வருமாறு பாடுகிருர்:

"உளையா அன்பென் புருக வோலமிட்
டலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாரு வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதிதது
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்ருத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே ணுக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்."

"பிச்செமை ஏற்றிய பெரியோன் போற்றி"

"பித்தென்னை ஏற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே ஆக்கும்வந் தென்மனத்தை—அத்தன்
பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து."

"கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலமன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானுய்"

"விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்சகப் பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலில்
பிச்சன் ஆக்கினுய் பெரிய அன்பருக்
குரியன் ஆக்கினுய் தாம்வ ளர்த்ததோர்

நச்சு மாமரம் ஆயி னுங்கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே.''

"ஒரொரு கால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தம் களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான் பணியாள்
பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.''

நம் அனைவர் மனமும் இவ்வாறே சிவனிடத்துப் பித்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வார நாம் என்றும் அவன் திருவருளின் வழியே பழக வேண்டும் என்ற பொருள் கொண்ட ஓர் அழகான பாடலை நாம் திருப்பொற் சுண்ணத்திற் காணலாம்:

"முத்தணி கொங்கைகள் ஆடவாட
மொய்குழல் வண்டினம் ஆடவாடச்
சித்தம் சிவனொடும் ஆடவாடச்
செங்கயற் கண்பனி யாடவாடப்
பித்தெம் பிரானொடும் ஆடவாடப்
பிறவி பிறரொடும் ஆடவாட
அத்தன் கருணையொ டாடவாட
ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.''

ஒருவன் யாதாமொரு பொருளைச் சார்ந்து அதன் மயமாய் அதனிடத்திலே முழுப்பற்று உடையவனாயின், அதில் அவன் பித்தன் என்று கூறப்படுகிறான். இங்கே மாணிவாசகர் தமக்கு உயிர்ப்பற்றிலாவது பொருட் பற்றி

லாவது சிறிதும் தொடர்பு இன்றி, இறைவனையே நோக்கி நின்று அவனிடத்திலேயே முழுப்பற்றுடையவ ராயிருத்தலைப் "பிச்சேற்றும்" என்றார். உலகில் உள்ள வர்கள் உயிர்ப்பற்றும் பொருட்பற்றும் உடையவர்களா தலின், அப்பற்றுக்கள் சிறிதும் இல்லாத வாதவூரரைத் தங்கள் பார்வையில் பித்தன் எனக் கருதுதல் இயல்பு. அவரைக் கண்ட எல்லாரும் அவரைப் பித்தர் என்றே கூறி நகைத்தனர். அதனால் மணிவாசகருக்குப் பித்தன் என்றே ஒரு பெயர் உண்டாகி விட்டது. தம்மை ஏன் உலகத்தவர் பித்தன் என்று அழைக்கின்றார்கள் என்பதற்கு உரிய காரணத்தையும் மணிநாவர் ஒரு பாடலில் விளக்கியிருப்பது இங்கே அறிதற்பாலது:

" பித்தன் என்றெனை உலகவர் பகர்வதோர்
காரணம் இதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் திருவருட் கூடிடும்
உபாயம தறியாமே
செத்துப் போயரு நரகிடை வீழ்வதற்
கொருப்படு கின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே."

பித்தன் என்று ஏளனம் செய்து சிரித்தார்கள் உலகத் தவர்கள். திருமால் நான்முகன் முதலிய தேவர்களாலும் அறிய முடியாத சிவபெருமான் வலியவந்து வாதவூரரை ஆண்டுகொண்டு பத்தியால் உருகச் செய்தான் என்று சொல்லிக்கொண்டு மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்துக் கை தான் தலைவைத்துக் கண்ணீர் சோரத் தெருவுதோறும் அலறிப் பதறி உருண்டும் புரண்டும் எழுந்தும் விழுந் தால், அவ்வுணர்ச்சியில்லாத உலகத்தார் சிரிப்பார்களே தவிர உண்மை என்று நம்புவார்களா? மணிவாசகரே அதை நம்பக்கூட வில்லை போலும்! உலகம் எல்லாம்

சிரித்தது. மணிவாசகர் அச்சிரிப்பை விரித்துத் தெரிக்கின்ருர் ஒரு பாடலில்:

" அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பதுகேட் டுலகமெல்லாம்
சிரிக்கும் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ."

இவ்வாறு உலகத்தவர்கள் கேலி செய்து சிரித்தாலும் அதற்காக வாதவூரர் வருந்தவில்லை. உலகம் திருந்தவில்லை என்று தான் கொண்டார். அவர்கள் நகையைத் தமக்குச் சிறந்த அணிகலனுகவே ஏற்றுக் கொண்டு, சித்தம் கலங்காமல் சிவபத்தியில் முனைந்திருந்தார். அவரே கூறுகிருர் பாருங்கள்:

" சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றி."

சிரிப்பார் சிரித்துக் கொண்டே யிருக்கட்டும், நாம் வீட்டின்பம் தலைப்படுவோம் என்றும் பாடுகிருர்:

" நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த
ஆட்டான்கொண் டாண்டவா பாடுதுங்காண்
அம்மானுய்."

திருப்பொற் சுண்ணப்பாடல் ஒன்றில், "நாட்டு மக்கள் நம்மைப் பார்த்துச் சிரித்தால் நாமும் அவரைப் பார்த்துச் சிரிப்போம்" என்று அவர் சிரிப்பதைப் பார்க்க நமக்கும் சிரிப்பு வராமல் இருக்காது:

" சூடகந் தோள்வளை யார்ப்ப வார்ப்ப
தொண்டர் குழாமெழுந் தார்ப்பவார்ப்ப
நாடவர் நந்தம்மை யார்ப்ப வார்ப்ப
நாமும் அவர்தம்மை யார்ப்ப வார்ப்பப்
பாடக மெல்லடி யார்க்கு மங்கை
பங்கினன் எங்கள் பரா பரனுக்கு
ஆடக மாமலை யன்ன கோவுக்கு
ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'

இவ்வாறு தலையாயவனும் தந்தையும் உடையானுமாய் விளங்கும் சிவபெருமானுடைய திருவடிகளையே இடையறாது எண்ணி உள்ளம் உருகி, இவர் மயக்கமுற்ற மனக்களிப்பு மிக்க பித்தர் என்று உலகம் கருதும்படி, களிப்பேறிய நெஞ்சத்தோடு ஊர் ஊராகத் திரிந்து தமது உள்ளத்தில் தோன்றியவற்றை இவர் பேசவும், அவர் நிலையைக் கண்ட உலகத்தவர்கள் தங்கள் வாய்க்கு வந்தவற்றை நல்லனவும் பொல்லனவும் பல்லனவாய்ப் பேசவும், இந்நிலையில் மணிவாசகர் பலகாலம் கழித்திருக்கிறார் என்பதை அவர் பாடல் கொண்டே நாம் அறியலாம்:

" உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மால்இவன் என்ன மன நினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்தெவரும்
தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே."

இவ்வாறு மணிவாசகரைப் பார்த்துப் பித்தன் என்று ஏளனம் செய்ததே உலகம், அஃது எத்தகைய உலகம்? அதுதான் உண்மையான பைத்தியக்கார உலகம். பணம், பெண், குழந்தை, சாதி, குலம், கல்வி என்று நில்லாதனவற்றையும் இல்லாதனவற்றையும் பொல்லாதனவற்றையும் நல்லதாக் காணும் உலகே உண்மையில் பித்துப் பிடித்த உலகம். பிறப்பதற்கும் இறப்பதற்கும் ஒருப்படுகின்ற சித்தவிகாரக் கலக்கம் கொண்ட தெளிவில்லாத உலகம். அத்தகைய பித்துலகைக் கண்டு மணிவாசகரும் வித்தகராய் நின்று விலகினர்:

" வைத்த நிதிபெண்டீர் மக்கள் குலங்கல்வி என்னும்
பித்த உலகிற் பிறப்போ டிறப்பென்னும்
சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ."

இவ்வாறு நிலையில்லாத பொன்னையும் பெண்ணையும் குழந்தை குட்டிகளையும் கட்டியழுகின்ற உலகத்தவர்கள்

அறியாமையை விளேவிக்கும் கல்வியைக் கற்று மேதைகள் போல் நடிக்கும் பேதைகளாய், சிற்றின்பத்தையும் வெற்றின்பத்தையும் தவிர மற்றின்பம் அறியா மாக்களாய், சாதிகுலம் என்று பேசும் புன்மையால் வேறுபாடும் மாறுபாடும் கொண்ட வீணர்களாய்ப் பித்தர்கள் போற் பேசிப் பிதற்றுகின்றுர்களே! அவர்கள் கண்டதே காட்சி கொண்டதே கோலம் எனத் திரிகின்ற பித்தர்கள். மறுமையைப் பற்றி மனக் கவலே கொள்ளாத பித்தர்கள். இறைவனேப் பற்றி இறையும் சிந்தியாத பித்தர்கள். அந்தப் பித்தர்கள் சொல்வதைக் கேட்டுத் தாம் ஏமாருதபடி இறைவன் ஆண்டு அடியார் திருக்கூட்டத்தில் சேர்த்துவிட்டது மிகவும் அதிசயமே யாகும் என்று விம்மிதம் அடைகின்றுர்:

"உற்ற ஆக்கையின் உறுபொருள்
நறுமலர் எழுதரு நாற்றம் போல்
பற்ற லாவதோர் நிலேயிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர் சொல்தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே."

இவ்வாறு இறைவன் வந்து தம்மை ஆட்கொள்வதற்கு முன் தாமும் உலகத்தவரைப் போல ஒரு பித்தனுகவே உலகப் பற்றுக் கொண்டிருந்ததாக மணிவாசகர் கூறுகின்றுர். "சுழல் போல் மாறி மாறி வளேந்துவரும் பிறப்பிறப்புக்களே நீக்கும் வழிகளே எண்ணுது, மாதர்களோடும் கலந்து அவர்கள் வாயுதடுகளில் ஊறி வழியும் எச்சில் நீர்ப்பெருக்கில் ஆழ்ந்து அதிலேயே பித்துப் பிடித்து அலேந்த என்னே இயல்புகளும் அடையாளங்களும் இல்லாத அருட் குணக் கடலாகிய சிவபெருமான் இளமைச் செவ்வியை யுடைய அம்மையொடு கூடிச்

சேர்ந்துவந்து என்னை ஆட்கொண்டருளியது ஓர் அற்புதமே யாகும்'' என்று பாடுகின்றார்:

'' வணங்கும் இப்பிறப் பிறப்பிலை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத்
தழுந்திநான் பித்தனாய்த் திரிவேனைக்
குணங்க ளுங்குறி களும்இலாக்
குணக்கடல் கோமளத் தொடுங்கூடி
அணைந்து வந்தெனை ஆண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே.''

இவ் அற்புதப் பாடல் நமக்கு அறிவுறுத்துவது ஒன்று உண்டு. சிவபெருமான் தம்மை வந்து ஆட்கொள்ளும் முன்பும் தாம் ஒரு பித்தனாகத் திரிந்ததாகவே மணிவாசகர் கூறுகின்றார். ஆட்கொண்ட பின்னும் தம்மைப் பித்தனாக்கினான் என்று முன்னர்க் கூறினார். ஆகவே இவர் என்றும் பித்தராகவே இருந்திருக்கிறார் எனலாம். ஆட்கொள்ளும் முன் சிற்றின்பப் பித்தராய் இருந்தார். ஆட் கொண்ட பின் பேரின்பப் பித்தர் ஆனார். யாதானும் ஒன்றினிடத்து அளவு கடந்து தீவிரமாகப் பற்றுக் கொள்வதைப் பித்துக் கொண்டதாகக் கூறுகிறோம். சிற்றின்பத்தில் பித்துக் கொள்ளும் மனிதன் அதைவிடுத்துப் பேரின்பத்தில் பித்துக் கொள்ள வேண்டும் என்கிறார் மணிவாசகர். ஒரு பெண்ணைக் காமுறும் ஆடவன் தன் காதலிக்காக என்ன பாடுபடுகிறான்! அவள் அன்பைப் பெறத் தவிக்கிறான். அவள் ஏவலின் வழி கிடக்கிறான். ஆவலை அறிந்து நடக்கிறான். அன்பே என்று உருகுகிறான். உயிரையும் பருகத்தருகிறான். அவள் அழகைக் கண்டு துடிக்கிறான். ஆர்வம் பொங்கி நடிக்கிறான். அவள் யாரோ அவன் யாரோ! அவள் இடையிலே வந்து நடையிலே போகிறவள். மெய்வரு போக இன்பம் உடன் உண்டு விலையும் கொண்டு அழிவு

கண்டு போகிறவள். விளையாட்டு விளையாடி வினையைப் பெருக்கி விட்டுவிடுவாள். ஆனால் இறைவனே நம் முடைய வினையைக் களைந்து வேதனையைத் தீர்த்து இன்பம் அளித்து அருந்துணையாய் என்றும் நின்று காப்பவன். அவனிடத்துப் பித்துக் கொள்ள வேண்டும் என்று திருக்கோவைப் பாடல் ஒன்றில் மணிவாசகர் குறிப்பிடுகிறார். ஓர் ஆடவன் காதலிக்குக் கையுறையாகத் தழையேந்தி வந்து யானை வந்ததா என்று வினவிக் கொண்டு பித்தனைப் போல் வாய்குழறி மெய்நடுங்கி நிற்கிறான். "இவன் தில்லைக் கூத்தப் பிரானிடத்துப் பெருகா நின்ற உண்மை அடியாரைப் போல் மிக நடுங்கிப் பித்தனாகி நிற்கிறானே!" என்று பாடுகிறார்:

"மைத்தழை யாநின்ற மாமிடற்
றம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாநின்ற அன்பினர்
போல விதிர் விதிர்த்துக்
கைத்தழை யேந்திக் கடமா
வினாய்க்கையில் வில்லின்றியே
பித்தழை யாநிற்ப ராலென்ன
பாவம் பெரியவரே."

சிற்றின்பத்துறையில் தலைவன் தலைவிக்குக் கையுறையாகத் தழையேந்தி வருதல், பேரின்பத் துறையில்—ஏகனாகி இறைபணி நிற்றலாகிய அடிமைத் தொழிலைக் குறிக்கும். இரக்கத்தொடு மறுத்தல் என்னும் துறையில் இது தோழியின் கூற்றாக அமைந்தது. பித்தென்றது ஈண்டுப் பித்தாற் பிறந்த அழைப்பை. அழைப்பு என்பது பொருள் புணரா வோசை. இப்பாடல் பாடிச் சுவைத்தற் குரித்தாகும்.

"சிவம் வேண்டார்தமை நாளும் தீண்டேன்" என்றார் மணிவாசகர். "மங்குவா ரவர் செல்வம் மதிப்போமல்லோம் மாதேவர்க் கேகாந்தரல்லா ராகில்" என்றார்

நாவரசர். உலகியலில் இறுமாப்பு என்பது கூடாது. அது மனிதனை அழித்து விடும். ஆனால் சமயத்துறையில் இறைவனைப் பற்றிப் பிடித்து அவன் திருவடி நீழலை யெய்தியவர்களுக்கு ஒருவகை இறுமாப்பு இருக்கத்தான் செய்யும். உயிரானது உய்யும் நெறியை அடைந்தது என்ற உவகையால் எழுகின்ற உயர்ந்த தூய குற்றமற்ற பெருமிதமே இத்தகைய இறுமாப்பு. இந்த இறுமாப்பு எய்தாவிடில் ஏமாப்பு புகுந்துவிடும். மணிவாசகர் பாடுகிறார் பாருங்கள் :

"பூமே லயனோடு மாலும் புகலரிதென்று
ஏமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேல் தவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ."

சிவனடியார் திருக் கூட்டத்தில் ஒருவராய்க் கலந்து சிவன் திருவடிக்கீழ் வீற்றிருக்கும் பேரின்பத்திலே விளையும் களியே இந்த இறுமாப்பு. அவ்விதம் இறுமாந்திருக்கும் நற்பேறு தமக்கு எப்பொழுது வாய்க்குமோ என்று உருகிப் பாடுகிறார் அப்பர் அடிகள் :

"இறுமாந் திருப்பன் கொலோ—ஈசன்
பல் கணத் தொண்ணப் பட்டுச்
சிறுமான் ஏந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று
இறுமாந் திருப்பன்கொலோ."

அப்பர் திண்ணியராதலின் எண்ணியபடியே எண்ணியதை அடைந்தார். இறைவன் திருவடிக் கீழ்ச்சென்று இறுமாந்திருந்தார். இத்தகைய பெரும் பேறு இறைவன் திருவருளாலே மாணிக்கவாசகருக்கும் கிட்டியது. அப்பரைப் போலவே வாதவூரரும் இறைவன் திருவடிக் கீழ்ச்சென்று இறுமாந்திருந்தார். இத்தகைய பெரும்பேறு கிடைப்பதற்குக் கலைஞானங்களைக் கற்றுவிட்டால் மட்டும் போதாது. கசிந்துருகி விட்டால் மட்டும் போதாது.

எவ்வளவு கசிந்துருகினுலும் போதாது தான். இறைவன் திருவருள் தான் வேண்டும். மணிவாசகர் கூறுகிருர் பாருங்கள் :

"கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேனெம் பெருமானே யடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே."

பொன்னருளே என்று பாராட்டினர். பொன் போன்று விலைமதித்தற்கரிய அழகிய திருவருளாம் "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்ற உண்மையை உணர்ந்தவர் அல்லரா மணிவாசகர்? சிவன் திருவருள் இல்லாது போனுல் அவன் சேவடி சிந்தித்தலும் கூடாது போய்விடும். மருள்நீக்கியார் நிலையாமையை உணர்ந்து இவ்வுலகை அறத்துறந்துங்கூட, சிவன் திருவருள் கூடாமையினுல் சமண் சமயம் புகும்படி நேரிட்டது. இதைச் சேக்கிழார் எவ்வாறு கூறுகிருர் பாருங்கள் :

"நில்லாத உலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேன்என் றறத்துறந்து சமயங்க ளானவற்றின்
நல்லாறு தெரிந்துணர நம்பர் அரு ளாமையினுல்
கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயங்
குறுகுவார்."

இங்கே 'குறுகுவார்' என்ற சொல் அறிவிலும், உடலிலும், பெருமையிலும், உள்ளத்திலும் குறுகிக் குன்றினமையையும் குறிக்கும் நயத்தை நோக்குதல் வேண்டும். பின்னர் அவர் தரும சேனராய்த் தமது தமக்கையார் திலகவதியாரைப் பிரிந்திருந்து, சூலை நோய்க்கு வருந்தி நல்வழிக்குப் புத்தி திரும்பித் தமக்கையாரைத் தஞ்சம் புகுவேன் என்ற எண்ணம் திருவருள் கைகூடுதலால் அவருக்கு ஏற்பட்டது என்பதையும் சேக்கிழார் அழகுற எடுத்துக் கூறுகிருர் :

"அவ்வார்த்தை கேட்டலுமே அயர்வெய்தி இதற்
கினியான்
எவ்வாறு செய்வன் என ஈசர் அருள் கூடுதலால்
ஒவ்வா இப் புன்சமயத் தொழியாஇத் துயரொழியச்
செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வன் என."

ஆகவே ஒருவன் தீயநெறியினின்று மீண்டு நல் வழிப் படுவதற்குத் திருவருள் இன்றியமையாது வேண்டும். சிவனை உணர்வதற்கும் திருவருள் துணைபுரிய வேண்டும். சிவனருளைக் கண்ணுகக் கொண்டுதான் இறைவனைக் காண முடியும் என்பதை அப்பர் அடிக்கடி எடுத்து நினைவூட்டுகிருர் :

"மைப்படிந்த கண்ணுளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஒ'ருரன் அல்லன் ஓர்உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவன் அருளே கண்ணுகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொ ணுதே."

சிவபெருமான் பருவம் வரப்பெற்ற அடியார்களுக்கு அகக் கண்ணைக் கொடுத்து அவர்கள் அந்த அகக் கண்ணுல் தனது அருளையும் தன்னையும் அறியும்படி செய்தலாகிய காட்டும் உதவியையும், அவர்களை விடயத் திற் பற்றும்படி செலுத்திச் சென்று விடயத்திலும் கலந்து நிற்றலாகிய காணும் உதவியையும் செய்தால் அவனை யார் தாம் அறியாதவர்? அவன் அவ்வாறு தனது நெற்றிக் கண் மூலமாய்ப் பருவம் வந்த அடியார்களுடைய அகக் கண்ணைத் திறக்கும்படி செய்து, காட்டும் உதவியும் காணும் உதவியும் செய்யா விட்டால் யார் தாம் அவனை அறிவார்? சிவபெருமான் அவ்வாறு தான் ஆண்டவன், அவர்கள் தனக்கு என்றும் மீளா அடிமைகள் என்னும்

அத்துவித உண்மையை அடியார்களுடைய அருள் அறிவுக்குக் காட்டாகி, வேருக நின்று அறிவித்தலாகிய காட்டும் உதவியைச் செய்தால் யார்தாம் தங்களுடைய அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கும்படி செய்து அடங்காதவர் ? அடியார்கள் அவ்வுதவியை நினைந்து நினைந்து அகங்குழைந்து அவன் மீதூர்ந்த அன்பினுல் உருகும்படி செய்தால் யார் உருகாதவர்? அவன் அருள் செய்தால் அவ்வருளையே தாரமாகக் கருதி அவ்வருளில் ஒடுங்கி வணங்காதவர் தாம் யார்? அவன் ஆடும்படி செய்தால் யார் ஆடாதவர் ? அவன் பாடும்படி செய்தால் யார் தாம் பாடமாட்டார்கள் ? மேலே கூறியவாறு வணங்கின அடியார்களை அந்த அகநிகழ்ச்சி காரணமாகச் சிவபெருமான் புறத்திலும் ஓடும்படி செய்தால் யார்தாம் ஓடாதவர் ? அப்பர் பாடுகிருர் :

"ஆட்டு வித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே
அடக்கு வித்தால் ஆர் ஒருவர் அடங்காதாரே
ஓட்டு வித்தால் ஆர் ஒருவர் ஓடாதாரே
உருகு வித்தால் ஆர் ஒருவர் உருகாதாரே
பாட்டு வித்தால் ஆர் ஒருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆர் ஒருவர் பணியா தாரே
காட்டு வித்தால் ஆர் ஒருவர் காணு தாரே
காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே."

காட்டும் உதவி காணும் உதவிகளின் பயனுக அடியார்களிடம் அறிவு வேட்கை செயல்களின் நிகழ்ச்சிகளாக முறையே அகத்தில் நிகழ்கிற அடங்குதல், உருகுதல், பணிதல்களும், புறத்தில் நிகழ்கிற ஆடுதல் பாடுதல் ஓடுதல்களும் கூறப்பட்டன. "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என்ற சிவஞான போதக் கருத்துப்படி அடியார்கள் தங்களுக்குச் சிவபெருமான் அருள் அறிவில் அறிவித்ததை அறிந்த அறிவால் அடங்கி, திருந்திய

வேட்கையாகிய அன்பினுல் அவனிடத்தில் அகங் குழைந்து உருகி, செயலினுல் அவனிடம் சென்று இரண்டறக் கலந்து ஒடுங்கிப் பேரின்பமுறும் தன்மை யால் "அவன் அருளாலே அவன்தாள் வணங்கி" என்ருர் மணிவாசகரும். அவனருளைக் கண்ணுகக் கொண்டு காணுதவர்கள் உண்மையைக் காணுதவர்களே யாவர். அவன் அருளாலே அவன்தாள் வணங்குவது எப்படி என்பதை அப்பர் கூறுகிருர்:

"உயிரா வணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியின் உரு வெழுதி
உயிரா வணஞ்செய் திட்டுன் கைத்தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறு தானே றேறி
அமரர் நா டாளாதே ஆரூர் ஆண்ட
அயிரா வணமேஎன் அம்மா னேநின்
அருட்கண்ணுல் நோக்காதார் அல்லா தாரே."

இவ்வருமைத் தேவாரப் பாடல் யோக நிலையினை எடுத்துக் கூறுகின்றது. அறிவியல் நூல்களைப் பின் பற்றி வெறும் கொள்கைகளை மட்டும் கூறும் நெறியன்று சைவசித்தாந்த நெறி. அது பல்லோர் நூல்களைக் கற்றும் நல்லோர் வாய்க்கேட்டும், பின் சிந்தித்தும், தெளிந்தும், நிட்டை கூடியிருந்து திருவருளைப் பெற்று இரண்டறக் கலந்து இறையின்பம் உறுதலாகும். மூச்சையடக்கி அசை யாது நெற்றியின் மையத்தை நோக்கித் தியானம் கொண்டு உள்ளமாகிய துணியில் சிவனடியின் திரு வடிவம் எழுதித் தன்முனைப்பற்று இறைவனிடம் ஒப்ப டைத்து அவன் திருவருளையே கூடி அதனேடு அது துணையாய் வாழும் வாழ்க்கையே பேரின்ப வாழ்க்கை. அதுவே அவன் அருளாலே அவன்தாள் வணங்குதல்.

"உழைத்துந் துள்ளியும் உள்ளத் துளேயுரு
இழைத்தும் எந்தை பிரான் என் றிராப் பகல்
அழைக்கும் அன்பின ராய அடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயி லாளரே."

அப்பரும் மணிவாசகரும் இப்பிறவியிலேயே இறைவன் திருவடியைத் தலைமீது சூட்டப்பெற்றவர்கள். நல்லூரில் சிவன் அப்பர் தலைமீது திருவடியைச் சூட்டினன். உடனே அவர் தீவினைகள் எல்லாம் நில்லாமல் நீங்கிவிட்டன. நினைந்து நினைந்து நைந் துருகிப் பெற்ற திருவடியல்லவா? அதை நல்லவாறு இறைவன் சூட்டியதும் அப்பர் நல்லவாறு பாடினர்:

"நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்
நல்லூர்எம் பெருமானர் நல்ல வாறே."

இப்பாடலில் ஒவ்வொரு சொல்லும் பேரானந்தக் கண்ணீரில் நனைந்து நனைந்து வனைந்து வந்ததாகும். இதில் நெக்கு நெக்கு நினையும் அடியார்கள் தீவினைகள் தீரும் என்ருர். சினத்தால் மாறுபட்டுவரும் யானைபோற் கொடிய மதங்கொண்டோரை இறைவன் அழிப்பான் என்பதைக் 'களிற்றுரிவைப் போர்வை வைத்தார்' என்று சுட்டினர். 'செழுமதியின் தளிர் வைத்தார்' என்பதால் அடைக்கலம் புகுந்தோருக்கு அருள்புரிவான் இறைவன் என்று சுட்டினர். இங்கு 'நல்லவாறு' என்பது எவ்வாறு என்பதை நாம் நோக்கவேண்டும்.

மணிவாசகருக்கும் திருப்பெருந்துறையிலும் பின்னர் தில்லையம்பதியிலும் இறைவன் திருவடி சூட்டினன்.

சூட்டியவுடனே அவருக்குக் கிடைத்த நன்மை என்ன? அதை விளக்கி அவரே பாடுகின்ருர் பாருங்கள் :

"இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்
அணையார் புனற்றில்லை அம்பலத்தே யாடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ."

ஆம்; இறைவன் திருவடி சூட்டியவுடனே வேறு பற்றுக்கள், துணைகள், பாசங்கள், பந்ததொந்தங்கள், உறவு வேட்கைகள், எல்லாம் அற்றுவிட்டனவாம். ஆகா! சிவன் திருவடியைத் தலைமேல் சூட்டிக்கொள்வது என்ருல் அஃது எளிதான காரியமா? வரையின்கீழ் இராவணனை வைத்து மிதித்து நசுக்கிய திருவடியல்லவா? இராவணனுக்கு நல்லவாறு வைக்காமல் தீயவாறு வைத் தாராம். அதுதான் நினைந்து நல்லூர்த் திருத் தாண்டகத்தில் அப்பர் "நல்லவாறே" என்று பாடிஞர். இராவணன் நினைவு அப்பருக்கும் வாசகருக்கும் ஒக்கத் தோன்றியது நோக்கத்தக்கதாகும். சிவன் திருவடியைச் சுமந்துகொண்டதுமல்லாமல், அதைத் தாங்கித் திரிவது பெருங்காரியம் அல்லவா? சிவன் திருவடியை எளிதாகச் சுமந்துகொண்டே அப்பர் எக்களித்துத் திரிகிருர் பாருங்கள் :

"பெருவிரல் இறைதானூன்றப்
பிறையெய்யி றிலங்கவங்காந்து
அருவரை யனையதோளான்
அரக்கனன் றலறிவீழ்ந்தான்
இருவரும் ஒருவனுய
உருவமங் குடையவள்ளல்
திருவடி சுமந்துகொண்டு
காண்கநான் திரியுமாறே."

இராவணன் தோள்கள் பெரிய மலைபோல் இருந்தும் சடசடவென நெறியும்படி சற்றேதான் இறைவன் மிதித்

தானும். அதுவும் திருவடி முழுதையும் கொண்டன்று, பெருவிரல் நுதியால் இறையே ஊன்றி எடுத்து விட்டானும். ஆனல் திருவடி முழுதும் என் தலைமேல் எப்போதும் வீற்றிருக்கிறது. என் பசு பாசம் முழுதும் அற்றது. நான் களிக்கின்றேன்'' என்று பாடுகின்ருர் மணிவாசகர் :

''மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெறிய
மிதிக்குந் திருவடி என்தலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாசம் ஒன்றும்இலோம் எனக்களித்திங்கு
அதிர்க்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.''

கயிலாய மலையின் அடியில் விழுந்து இராவணன் நசுக்குண்டான். அக்கயிலாயத்தின் உச்சியிலுள்ள கடவுள் சிவபெருமான். அவன் இத்தன்மையன் என்று சொல்வதற்குச் சொல்லும் இல்லை. வாயால் சொல்லவும் முடியாது. மனதால் நினைக்கவும் முடியாது. பச்சை மாமலைபோல் மேனிகொண்ட பரந்தாமனும் சிவனை அறியமாட்டான். தாமரையில் தங்கியுள்ள நான்முகனும் சிவனை அறியமாட்டான். அதனல் பிறர் எவராலும் அறிவதற்கில்லை என்பதைச் சொல்லத் தேவையில்லை. அத்தகைய அருமையும் பெருமையும் படைத்த சிவபெருமான் அடியார்களின் அன்புக்கு மிகஇரங்கி இம்மண்ணில் வந்து எளியனுகி அருள்சுரந்து நிற்கின்ற தன்மையை என்னென்று சொல்வது? அப்பர் உள்ளம் உருகிப் பாடுகிருர் :

''கருவரை யனைய மேனிக் கடல்வண்ண னவனுங் காணுன்
திருவரை யனைய பூமேற் றிசைமுக னவனுங்காணுன்
ஒருவரை யுச்சி யேறி யோங்கினுர் ஓங்கி வந்து
அருமையில் எளிமை யானுர் அவர்வலம் புரவ னுரே.''

இது திருவலம்புரத்துக் கோயில் கொண்ட சிவபெருமானை நோக்கிப் பாடியது. இவ்வாறு மாற்ற மனங்கழிய

நின்ற அரன் அடியவர்களுக்கு எளியனுகி வந்து அருள் புரிகின்ற தன்மையே அவனுக்கு ஓர் அழகாய் இருக்கின்றதே என்று மணிவாசகரும், அப்பரைப்போல் இறும்பூது கொண்டு இயம்புகின்ருர். பலவாறு போற்றுகின்ருர் :

"அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி."

இவ்வாறு அறிதற்கரிய அருமையையுடைய சிவன் எளியராம் அடியார்களுக்கு எளியனுய் வந்து ஆட்கொள்ளும் காட்சி ஓர் அழகுக் காட்சிதான். அவ்வாறு ஆட்கொள்ளப்பட்ட அடியார்களுக்கு இவ்வுலகில் வேறு சுற்றம் ஏது? துணை ஏது? பற்று ஏது? இவ்வுலகமும் இவ்வுலகத்திலுள்ள எல்லாத் தொடர்புகளும் வெறும் மாயமாய்ப் பொய்யாய்ப் போயொழியும். இறைவன் திருநாமமாகிய திருவைந்தெழுத்து மந்திரத்தை ஓதிக் கொண்டு சிவலோக யாத்திரையை மேற்கொண்டு எழ வேண்டியதுதான். "யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்" என்பது பொய்யா மொழியன்ருே? அதனை நினைவுறுத்திக் கூறுவதுபோல் அப்பர் பாடுகின்ருர் :

"தந்தையார் தாய் யார்உடன் பிறந்தாரார்
தாரம்ஆர் புத்திரர்ஆர் தாந்தாம் ஆரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமாம் இதற்கேதும் மகிழ வேண்டாம்
சிந்தையீர் உமக்கொன்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவும் திளைக்கும் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சிவாய
என்றெழுவார்க் கிருவிசும்பில் இருக்க லாமே."

உலகில் தந்தை என்றும் தாய் என்றும் அண்ணன் தம்பி என்றும் மனைவி மக்கள் என்றும் தான் என்றும் நான் என்றும் சொல்லித் திரியும் அவர்கள் எல்லாம் நம் உறவினர்கள் அல்லர். அவர்களை நம் துணை என்று கருதி வாழ்வது மாயையின் மயக்கு. நமக்கு உண்மைத் தந்தையார் சிவபெருமான். ஆதலால் சிவனை "எந்தையார்" என்று அப்பர் கூறுகிறார். இவ்வாறு நமது உண்மை அப்பரை அப்பர் அடிகள் அழகுறக் காட்டிப் பெயரும் குறிப்பிடுவது அறிந்து போற்றற்பாலது. நாம் இதனை நன்கு எண்ணி ஆராயவேண்டும் என்னும் கருத்தான் "சிந்தையீர்" என்று விளிக்கின்றார்.

சிவலோகத்தை "இருவிசும்பு" என்று அப்பர் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. "எழுவார்க்கு இருவிசும்பில் இருக்க லாமே" என்று அப்பர் சொன்ன வாக்கை நன்கு சிந்தித்து அப்படியே சிவலோக யாத்திரைக்குத் தயாராகிப் புறப்படுவதுபோல் நம்மை மாணிக்கவாசகரும் அழைக்கின்றார் பாருங்கள் :

"தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார் என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்தன்
குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப் புயங்கன் ஆள்வான்
பொன்னடிக்கே."

அப்பர் "மாயமாம் இதற்கேதும் மகிழவேண்டாம்" என்றதையே மணிவாசகர் "என்ன மாயம் இவைபோக" என்று பாடுகின்றார். அப்பர் கூறிய "எந்தையார் திருநாமம் நமச்சிவாய என்று எழுவார்" என்பதையே மணிவாசகர் "அவன் தன் குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின்" என்று குறிக்கின்றார். இவ்வாற்றால் "கோமான் பண்டைத் தொண்டர்" என்ற குறிப்பில்

அப்பர் அடிகளையும் சேர்த்தே மணிவாசகர் பாடுகின்ருரோ என்று 'நினைக்க இடம் தருகின்றது. மற்ருெரு குறிப்பும் உண்டு.

வாய் உள்ள பிள்ளை பிழைக்கும்; வாய் நலலதாளுல் ஊரும் நல்லது; யாராலே வந்தது வாயாலே வந்தது; மதுரைக்கு வழி வாயிலே—என்பது போன்று பல மூதுரைகள் உள்ளன. வாய் என்பது நாவைக் குறிக்கும். நாக்கு மிகப் பொல்லாதது. அதனுல் அது கோட்டைக்குள்ளே அடைபட்டுக் கிடக்கிறது. உதடுகளாகிய திண்ணிய கதவுகளுக்குள்ளே பூட்டப்பட்டிருக்கிறது. உள்ளே வெட்டும் எந்திரம், குத்தும் எந்திரம், அரியும் எந்திரம் அரைக்கும் எந்திரம், கடிக்கும் எந்திரம், புடைக்கும் எந்திரம், நசுக்கும் எந்திரம் நொறுக்கும் எந்திரம், ஒடிக்கும் எந்திரம், பிடிக்கும் எந்திரம் போன்ற பல பொறிகள் நிறைந்த தந்தக் கோட்டை இருக்கிறது. அதனுள்ளே நாக்கை உள்ளழுத்தி வைத்திருக்கிருன் இறைவன். மனித உடலிலுள்ள வேறு எந்த உறுப்பும் இத்துணை பத்திரப்படுத்தப்படவில்லை. இதனைப் பாதுகாக்க வேண்டியது நமது தலையாய கடமை. அதுதான் திருவள்ளுவர் "யாகாவா ராயினும் நாகாக்க" என்று நம்மை எச்சரித்துள்ளார். "உன் நாவிற்கு விலங்கிடு. இன்றேல் அஃது உனக்கு விலங்கிட்டு விடும்" என்று ஓர் இலத்தீன் பழமொழியும் உண்டு. வாய் பேசுவதை ஒருவன் நன்கு கட்டுப்படுத்தினுல் அவனுக்கு வரக்கூடிய எத்தனையோ துன்பங்கள் தவிர்க்கப்பட்டு விடும். ஒருவனுடைய அறிவும், மேன்மையும், குணமும், குலமும், சால்பும், ஒழுக்கமும் அவன் வாயைத் திறந்தவுடனே தெரிந்துவிடும். பயனில சொல்லுதல், கடுஞ்சொற்கூறுதல், இன்னு கூறுதல், புறங்கூறுதல், தீமைகூறுதல், பொய், கோள், குறளை, ஏசல், எள்ளல், இகழ்தல் போன்ற பல குற்றங்கள் நாவால் நிகழக் கூடியன. மற்றும்,

நாவின் அறுசுவை உணர்ச்சியால் மீதூண் விரும்பி, நன்மை பயவா உண்டிகளையும் பானங்களையும் உட்கொண்டு பல்வேறு நோய்களுக்கும் துன்பங்களுக்கும் ஆளாவதும் உண்டு. இவற்றையெல்லாம் உள்ளடக்கியே "நாகாக்க" என்ற குறள் ஒலி எழுந்தது. "ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய வழுக்கியும் வாயாற் சொலல்" என்றும், "நிலத்திற்கிடந்தது கால்காட்டும்,காட்டும் குலத்திற் பிறந்தார் வாய்ச்சொல்" என்றும், "பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு" என்றும் எழுந்த பொன்மொழிகள் என்றும் நின்று ஒளிரும் நன்மொழிகளே யாகும். தீயினுற் சுட்டபுண்கூட ஆறிவிடும், நாவினுற் சுட்டவடு ஆறவே செய்யாது; பகையை விளைவிக்கும்.

சிலர் வாயை இறைவன் கொடுத்தது வெற்றிலை பாக்குப் புகையிலை போடுதவற்குத் தான் என்று வாயைக் குதட்டிக் கொண்டேயிருப்பார்கள். காலையில் எழுந்தது முதல் இரவில் படுக்கும் வரையிலும் பாக்குக் கறிப்பது பாவம். ஆடு குழை அரக்குதல் போல் வெற்றிலையை அரக்கிக் கொண்டே இருப்பார்கள். வெள்ளிக் குருத்துப் போன்று ஒளி வீச வேண்டிய பற்கள் காவி ஏறிக் கறை பட்டுக் கருத்துப் பூச்சி பிடித்து விடும். புகையிலையால் நாக்குத் தடித்து மதர்த்துச் சுவை கெட்டு விடும். ஏதோ ஒரு வேளை வேடிக்கையால் வெற்றிலை போடுவதில் தவறில்லை. ஓயாமல் இதே வேலையாய் இருந்தால் வாய் கெட்டு விடாதா?

"சாப்பிட்ட பின்பொரு தாம்பூலம்
சந்தோஷ வேளையில் தாம்பூலம்
ஆப்பிட்ட போதெல்லாம் ஆட்டுரல் போல் வாயை
ஆட்டிச் சுவைப்பது அழகல்லவே"

என்று முன்னீர்ப் பள்ளப் பெரும்புலவர் சின்னூற்றிரட்டில் செப்பியுள்ளார்.

ஆகவே நாவைக் காத்தல் வேண்டும். ஒரு பேரரசன் தனது நாட்டைக் காவல் காப்பது போல் அப்பர் தமது நாவைக் காத்து வந்தார். அதனுல் அவர் நாவரசர் ஆயினுர். அவர் நுணங்கிய கேள்வியராய் இருந்ததால் வணங்கிய வாயினரும் ஆயினுர். பிறரைப் பரிகசிப் பதற்கும் மீதூண் புசிப்பதற்கும் சுவை கண்டு ருசிப் பதற்கும் அன்றி இறைவனைப் பசிப்பதற்கே அவர் வாயைப் பயன்படுத்தினுர். இறைவனை வாழ்த்து வதற்கே வாய்த்தது வாய் என்று வந்தித்தார். இறைவன் வாயைக் கொடுத்தது அவனை வாழ்த்துவதற்குத் தான் என்று அவர் திட்ட வட்டமாய்க் கூறுவதைப் பாருங்கள்:

“ வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே”

இதேபோல் மணிவாசகரும் இறைவன் தலையை வணங்குவதற்குத் தந்தான், வாயை வாழ்த்துவதற்கு வழங்கினுன் என்ற கொள்கையைத் திடம்பட எடுத்துக் கூறியுள்ளார்:

“வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத்
தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை அம்பலத்தே யாடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.”

பிறரை வசை மாரி பொழிவதற்கும் வைவதற்கும் வஞ்சகமாய்ப் பேசுவதற்கும் வழங்கப்படும் வழக்குடைய வாயை நோக்கி இறைவனை வாழ்த்திக் கொண்டு இரு என்று சொன்னுல், அஃது எளிதில் வழிக்கு வருமா? வராது. ஒரு முரண்டு பிடிக்கும் முரட்டுக் குழந்தையைத் தட்டிக் கொடுத்து இங்கிதமாய்ப் பேசி இசைய வைப்பது

போல் திருநாவுக்கரசரும் வாயைக் கெஞ்சிக் குறையிரந்து வேண்டுகின்ருர் பாருங்கள்:

“வாயே வாழ்த்து கண்டாய்—
மதயானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்
பிரான் தன்னை—வாயே வாழ்த்து கண்டாய்.”

சிவன் திருவடியைத் தலையிலே சூட்டிக் கொண்ட திருநாவுக்கரசர் நற்பேறு வாய்த்தது என்று நலிவு நீங்கினுர். தலையைக் கொண்டு இறைவன் திருவடியை வணங்க வைத்தார். தலை எளிதில் வணங்குமா? “கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை” என்று வள்ளுவரும் வருந்தவில்லையா? “வணங்காத் தலைவந்தி தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே” என்று அருணகிரிநாதர் அலறவில்லையா? அதுதான் அப்பர், “தலையே நீ வணங்காய்!” என்று தாழ்மையாய் வேண்டிக் கொண்டார். தலைமட்டும் இறைவனை வணங்கினுற் போதுமா? கண்கள் சிவனைக் காண வேண்டும். செவிகள் ஈசன் திறம் கேட்க வேண்டும். மூக்கு இறைவனை முரல வேண்டும். வாய் இறைவனை வாழ்த்த வேண்டும். நெஞ்சம் இறைவனை நினைக்க வேண்டும். கைகள் கூப்பித் தொழ வேண்டும். கால்கள் சிவன் கோயிலை வலம் வரவேண்டும். இவ்வாறு ஆக்கையின் ஒவ்வோர் அங்கமும் சிவத்தொண்டு புரியாவிடில் ஆக்கையாற் பயனில்லை. இக்கருத்துக் கொண்டே அப்பர் “தலையே நீ வணங்காய்” என்ற திருவங்கமாலையைப் பாடியுள்ளார். கடவுள் வாழ்த்து 9ஆவது குறள் உரையில் பரிமேலழகர், “காணுத கண் முதலியன போல வணங்காத தலைகள் பலனிலவெனத் தலைமேல் வைத்துக் கூறினுர்; கூறினுரேனும், இனம் பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில வென்பதூஉங் கொள்க” என்றது காண்க.

அத்திருவங்கமாலையின் கருத்துப்படி தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவனே உண்மையான நல்ல வாழ்வு வாழ்ந்தவன் ஆவான் என்பதை மணிவாசகர் கண்டார். அவ்விதம் வாழாதவனை வாழ்கின்றான் என்று சொல்ல முடியாது; துயரக் கடலில் வீழ்கின்றான், துன்பத்தில் ஆழ்கின்றான் என்றுதான் சொல்ல வேண்டும். உள்ளமும் ஐம்புலன்களும் மற்ற உடலுறுப்புக்களும் இறைவனுக்கே உரித்தாக்கப்பட்டு இறைபணியிலேயே ஈடுபட வேண்டும். அவ்விதம் ஈடுபடுவது இவ்வுலக வாழ்க்கையில் தொடக்குண்டு கிடந்தால் செவ்வனே நிகழாது என்பதை மணிவாசகர் கண்டார். "எனக்கு இறைவனைத் தவிர வேறு ஒரு பற்றும் இல்லாதிருந்தும், இம்மண்ணுலக வாழ்வில் என் நெஞ்சையும் ஐம்பொறிகளையும் இடையருது இறைவனுக்கே உரிமைப் படுத்த முடியவில்லையே! அவை வேறு வழிகளில் ஓடுகின்றனவே! என்னை ஓட்டுகின்றனவே. ஆதலால் அம்மாயா பாசக் கருவிகளை வைத்துக் கொண்டு என்னால் இவ்வுலகில் வாழ்வாங்கு வாழ முடிய்வில்லை. சிவனே! நான் வாழ்கிலேன். என்னை வா என்று உன்னிடம் உடனே அழைத்துக் கொள்ள வேண்டும்," என்று நைந்துருகிப் பாடினார்:

"பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே."

அப்பர் திருவங்கமாலையை முன்வைத்துக் கொண்டு பாடியது போன்றுளது இத் திருவாசகப் பாடல்:

இவ்வாறு சிந்தையையும் உடல் உறுப்புகளையும் பொறிப்புலன்களையும் இறை பணியிலே ஈடுபடுத்தினால் யான் எனது என்னும் பற்றற்றவனாகித் தன்னகத்தே சிவனைக் கண்டு சிவனே யாவான். பசுகரணங்களெல்லாம் சிவகரணங்களாக மாறும். சிந்தை சிவமயமாகும். சிவனுடைய உருவமும் சீவனுக்கு வந்தெய்தும். அவ்வாறு பொன்னுருவாய்த் திகழ்கின்ற சிவனுடைய தன்னுருவம் தமக்கும் வந்து கிட்டியதாக அப்பர் பாடியிருக்கும் பாடலின் உட்பொருளை நாம் கருத்தூன்றிப் பொருள் தெரிந்து படிக்கும் பொழுது நம் மேனி சிலிர்க்கும் என்பது திண்ணம்.

"உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்
துறுப்பினது குறிப்பாகு மைவீர் நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
வையகமே போதாதே யானேல் வானோர்
பொன்னுருவைத் தென்னூரூர் மன்னு குன்றைப்
புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப் புகுந்தென் சிந்தை
தன்னுருவைத் தந்தவனை யெந்தை தன்னைத்
தலைப்படுவேன் தலைப்படுப்பான் தடுக்கேன் மின்னே."

சிவம் என்பது மங்களம், நலம் என்று பொருள்படும். உலகிற் காணப்படுகிற அழகு உருவங்களெல்லாம் இறைவன் அருள் விளக்கம் ஆதலின் "புவிக்கு எழிலாம்" என்றார். தமது உள்ளத்திலே அத்துவித இயைபானே சிவபெருமான் விளங்கி வீற்றிருத்தலால், தீ இரும்பைச் செய்வது போல், தமது மலம் முற்றிலும் நீங்கிச் சிவம் ஆம்படி செய்து, தனக்குரிய எண் குணங்களும் தமது குணங்களாகும்படி தம்மிடத்தில் பதிய வைத்தான் சிவன் என்பார், "புகுந்தென் சிந்தை தன்னுருவைத் தந்தவனை" என்றார். இவ்வாறு சிந்தையைச் சிவமயமாக்கி இறைவன்

ஆட்கொள்ளும் பெருங்கருணைத் திறத்தைப் பல பாடல் களில் அப்பர் பாடியுள்ளார்:

" தந்தையுந் தாயுமாகித் தானவன் ஞான மூர்த்தி
முந்திய தேவர் கூடி முறைமுறை யிருக்குச் சொல்லி
எந்தைநீ சரணம் என்றங் கிமையவர் பரவி யேத்தச்
சிந்தையுட் சிவம தானூர் திருச்செம்பொன் பள்ளி
யாரே."

" தந்தையாய்த் தாயும் ஆகித்
தரணியாய்த் தரணி யுள்ளார்க்
கெந்தையும் என்ன நின்ற
ஏழுலகுடனு மாகி
எந்தைஎம் பிரானே யென்றென்
றுள்குவார் உள்ளத் தென்றுஞ்
சிந்தையுஞ் சிவமு மாவார்
திருப்பயற் றூர னூரே."

" சிந்தையுந் தெளிவு மாகித் தெளிவினுட் சிவமும் ஆகி
வந்தநன் பயனுமாகி வாள்நுதல் பாகம் ஆகி
மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த மண்ணித்தென்
கரைமேல் மன்னி
அந்தமோ டளவி லாத அடிகளாப் பாடி யாரே."

" சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ
டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்
புந்தி யாய்ப்புகுந் துள்ளம் நிறைந்தஎம்
எந்தை யேகம்பம் ஏத்தித் தொழுமினே"

" மருவி னைமட நெஞ்சம் மனம்புகும்
குருவி னைக்குணத் தாலே வணங்கிடும்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற
உருவி னைக்கண்டு கொண்டதென் உள்ளமே."

இப்பாடல்களால் சிவபெருமான் அப்பருக்குத் தன் பொன்னுருவைக் கொடுத்துச் சிந்தையைச் சிவமாக்கி அவருடைய உடலைப் பொற்கோயிலாக்கி அதனை இடமாக் கொண்டு வீற்றிருந்தான் என்பது நன்கு விளங்கும்.

இதே அநுபவத்தை மணிவாசகரும் பெற்றுத் தமது திருப் பாடல்களில் தெளிவாக எடுத்துக் கூறியிருப்பது இங்கு அறியத்தகும். மணிவாசகர் சிவன் எவ்வாறு தமது உடலைப் பொன்னெடுங் கோயிலாக்கி அதனுள்ளே சிந்தையைச் சிவமாக்கித் தம்மைச் சிவமாக்கி ஆண்டு கொண்டார் என்பதைப் பின்வரும் பாடல்களில் தெளி வாகக் கூறுகிருர்:

" புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே."

" முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா ருர்பெறுவார் அச்சோவே."

" இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே."

" புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்த மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினுல் தோணுேக்கம் ஆடாமோ."

" அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாமொழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ."

சிவபெருமான் மாணிக்கவாசகர் உடம்பினுள் ஊன் பழித்து உள்ளம் புகுந்து உணர்வு மயமாக ஒன்றி நின்ற நிலையில் அவர் திருவுடம்பு ஓர் அழகான பொன் மயமான கோயிலாகவும் அவர் பசு கரணங்கள் எல்லாம் சிவகரணங்களாக மாறி, அவர் சித்தம் சிவமாகி நின்ற நிலையில் அவர் சிவமாகித் திகழ்ந்தார் என்பதை நாம் அவர் பாடல்களால் அறிகிறோம். இவ்வாறு அப்பரும் மணிவாசகரும் தங்கள் உடம்பைத் தூய சிவன் கோயில் களாக மாற்றிக் கொண்டு, நடமாடுங் கோயில்களாய் வாழ்ந்தார்கள் என்பது நன்கு போதரும்.

உடம்பை எவ்வாறு கோயில் ஆக்கலாம் என்று அப்பர் ஒருமுறையைக் குறிப்பிடுகின்றார். இவ்வுடம்பே கோயில். கட்டுப்படுத்தி அடக்கிவைக்கப்பட்ட மனமே அக் கோயிலில் வழிபாடும் செய்யும் அடிமை. வாய்மையைக் கொண்டு காயமாகிய கோயிலைத் தூய்மை செய்ய வேண்டும். அகந் தூய்மை வாய்மையாற் காணப்படும் ஆதலாலும், சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு ஆதலாலும், வாய்மை கோயிலைத் துப்புரவு செய்து பொய்யிருளைப் போக்கி ஒளி செய்து நிற்கும். அக்கோயிலி னுள் ஆன்மாவாகிய சித்தம் என்னும் உயிரையே அழகிய சிவலிங்கமாக அமைக்கவேண்டும். நேயம் என்றும் பக்தி என்றும் சொல்லப்படுகிற அன்பை நெய்யும் பாலும் நீருமாக அந்த லிங்கத்திற்கு அபிடேகம் செய்ய வேண்டும். தோத்திரப் பாடல்களை உணவாகக் காட்ட வேண்டும். இதுவே அகப்பூசை. அப்பர் பாடுகிறார்:

“ காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே.”

ஐம்புலன் வழியே செல்லவிடாது காவல் செய்யப் பட்ட மனம், கடிமனம். போற்று என்பது போற்றுதல், தோத்தரித்தல். அவி—உணவு "அர்ச்சனை பாட்டேயாகும்" என்றதும் காண்க.

அப்பர் அந்தக்கரணங்களைக் கடிமனம் என்றும் உயிரை மனம் என்றும் குறித்துள்ளார். "சீவன் சிவலிங்கம்" என்று திருமூலர் கூறுவதாலும் "மனம் மணியிலிங்கமாக" என்ற அப்பர் வாக்கு உயிரையே உணர்த்தும் என்பது தெளிவாகும்.

" உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளித் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே."

இவ்வாறு அப்பர் தமது உடம்பைக் கோயிலாக்கிச் சித்தத்தைச் சிவமாக்கி அக்கோயிலில் எழுந்தருளச் செய்து சிவபூசை செய்து அகவழிபாடு நடத்திவந்த படியால் அவர் ஒரு நடமாடுங் கோயிலாகவே திகழ்ந்தார். சிவபெருமானும் உமாதேவியோடு அவர் உள்ளத்தில் குடி கொண்டிருந்தார். சிவன் தமது சிந்தையுள் குடிகொண் டிருந்த அழகை நாவரசர் நயம்படச் சித்திரிக்கும் சிறப் பைக் காணுங்கள்:

"முடிகொண்ட மத்தமும் முக்கண்ணின்
நோக்கும் முறுவலிப்பும்
துடிகொண்ட கையும் துதைந்தவெண்
ணீறும் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித்
தோலும் என் பாவிநெஞ்சில்
குடிகொண்ட வாதில்லை அம்பலக்
கூத்தன் குரை கழலே."

நம் சைவ சமய குரவர்களின் உயர் இயல்புகளை உள்ளவாறு கண்டு போற்றிய சிவஞானச் செல்வராகிய

சிவப்பிரகாசர், ஒரு நடமாடுங் கோயிலாய் அப்பர் எவ்வாறு திகழ்ந்தார் என்பதை ஓர் அழகான பாடலில் தெரிவிக்கின்ருர். திருமறைக் காட்டில் திருக்கோயிற் கதவினைத் திறப்பித்து நேர் வாயிலாக இறைவனை எல்லாருக்கும் காட்டினுற் போல பிறப்பறுத்த பெரியாராகிய அந்நாவேந்தர் தமது உடம்பாகிய கோயிலின் உயிர் அறிவு என்னும் வாயிலை அடைத்துக் கொண்டிருக்கும் ஆணவ மலம் என்கின்ற கதவினை நன்ருகத் திறந்து தாயே இல்லாதவராகிய சிவபெருமானை எல்லாரும் காணக் காட்டுவார் என்று சிவப்பிரகாசர் பாடுகிருர்:

' தாயிலி யாகுஞ் சிவபெரு மான்தனைத் தானெனுமோர்
கோயிலின் ஆரறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலின் ஆணவ மாகுங் கபாட'மு மன்திறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னேக்குதற்கே.'

தமக்கு ஒரு மூலமில்லாத முதற் கடவுள் சிவபெருமான் ஆதலின் 'தாயிலி' என்ருர். எவர்க்கும் நிரதிசய இன்பம் பயக்கும் இறைவன் ஆதலின் 'சிவபெருமான்' என்ருர். உயிர்க்குயிராய் உள் நின்று உணர்த்தலின் உயிர் அனைத்தும் இறைவனுக்கு ஆலயம் எனவும் அவற்றின் உடலனைத்தும் தூல ஆலயம் எனவும் கூறும் இயல்பாலும் "தான் தனும் ஓர் கோயில்" என்ருர். உயிர் தானே அறிய முடியாதெனினும் அறிவித்தால் அறியும் ஆற்றலுண்டாதல் பற்றி "அறிவாகிய நாமம் முன்கொண்டிருந்த" என்ருர். உயிர் வியாபகமாகலின் ஆன்மா எனப் பெயர்பெறுமேனும், அவ்வியாபக உயிரை அணுத் தன்மைப்படுமாறு செய்தலின் மலம் ஆணவம் என்னப் பட்டது. அவ் ஆணவமலம் ஞான திரோதகமாய் உயிர் என்பது ஒன்று இல்லை என்னும்படி அவ்வுயிரைப் பொதிந்து கொண்டு நிற்கும் இயல்பு பற்றிக் கதவாக உருவகிக்கப்பட்டது. பதியையும் பசுவையும் போலப்

பாசமும் அநாதி நித்தமாகலின் அதனை அறவே ஒழித்து விட முடியாது. அதனது மறைத்தற் சத்தி மடங்கக் கீழ்ப் படுத்தலாம், அதனால் கபாடம் களைந்து என்னாது "திறந்து" என்றார். மலம் கெடுத்து முத்தரான மாண் புடையோரே பிறரையும் மலமுத்தராக்குதற்கு உரியராத லின் "நோயிலி" என்றும், அப்பர் சொல்லளவானே பிறரை மல முத்தராக்க வல்லுநரென்பார் "சொல்லிறை" என்றார். சிவ தரிசத்தினன்றிப் பாசநீக்கம் ஆகிய ஆன்ம சுத்தி ஏற்படாதாகலின் சொல்லிறை நோயிலியாகும்படி காட்டுவன் என்றும் பொருள்கொள்ளலாம்.

இவ்வாறு உடம்பைக் கோயிலாகக் கொள்ளும் போது இறைவன் அதை :

ஒரு வீட்டிற்குப் புதிதாய்க் குடிபோவது என்றால் உடனே முடியாது. அதிலும் நெடுநாளாய் அடைத்துக் கிடக்கும் ஒரு பாழ்வீடு என்றால் கேட்கவே வேண்டாம். முதலில் அதனைச் செப்பனிட வேண்டும். கதவுகளை யெல்லாம் திறந்து இருட்டைப் போக்கி வெளிச்சத்தை வரவிடவேண்டும். குப்பை கூளங்களையெல்லாம் பெருக்கி வாரித் தூர எறியவேண்டும். நன்றாகக் கழுவித் தூய்மை செய்யவேண்டும். வெள்ளையடித்து அழகு படுத்த வேண்டும். உட்காருவதற்கு ஆசனங்களும் அமளிகளும் போடவேண்டும். இவற்றையெல்லாம் செய்துதான் இறைவன் தமது சிந்தையை இடமாகக் கொண்டு குடி யேறினான் என்று மாணிக்கவாசகர் ஆணித்தரமாய் அழகான பாடல் ஒன்று பாடுகின்றார் :

"இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து."

முதலில் வீட்டைத் திறந்து இருளைப்போக்க வேண்டும் அல்லவா? இறைவன் இருளை எவ்வாறு போக்கினுன்? "சோதியாய்" என்ருர். வேருேரிடத்தில் "மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப்புலன் ஐந்தின் வழியடைத்து அமுதே யூறிநின்று என்னுள் எழு பரஞ் சோதி" என்ற மணிவாசகத்தை நினைவு கூர்தல் வேண்டும். . வீட்டின் கதவுகளைத் திறந்தால் இருள் போய் வெளிச்சம் வரும். ஆனல் உடம்பின் சாளரக் கதவுகள் வஞ்சிக்கும் புலனைந்தாக இருப்பதால், அவை உயிரை ஏமாற்றி மயக்கி அறியாமையாகிய இருளை உள்ளே கொட்டுகின்ற வாயில்களாக உள்ளன. ஆகவே அவற்றை அடைத்துத் தனது சோதியால் இறைவன் ஒளியைப் பரப்பினுனும். ஒன்றனபின் ஒன்ருய்ச் சங்கிலித் தொடர்போல் வருகின்ற துன்பங்களே இவ்வீட்டுக் குப்பை கூளங்கள். அவற்றை இல்லாதபடி துண்டித்துத் துடைத்துத் துப்புரவு செய்தான் என்பதைத் "துன்பம் தொடர்வு அறுத்து" என்ருர். துன்பத்தைப் பெருக்கி வெளியே தள்ளியபொழுது இன்பம் தானுகவே உள்ளே பெருகி எழுந்தது என்பார் "இன்பம் பெருக்கி" என்ருர். "சோதியாய்" என்றதால், அகத்தே ஞான ஒளியையும் புறத்தே பொன்னிற மேனியையும் வெண்ணீற்ருெளியையும் உண்டாக்கினுன் என்றதும் குறித்தவாருயிற்று. பின்னர், இறைவன் அமர்வதற்கு ஆசனம் வேண்டுமே, அதற்கு அன்பையே ஆசனமாக அமைத்துக் கொண்டானும். இல்லாத உள்ளத்தில் அன்பை ஊறியெழச் செய்தான் ஆதலால் "அன்பு அமைத்து" என்ருர். "ஊர்" என்பது இங்கே இடம் என்ற பொருளில் வந்ததாகக் கொள்ளுதல் வேண்டும். அல்லது சிவனகர் என்றும் கொள்ளலாம்.

அடியார்கள் சிந்தையைக் கோயிலாக் கொண்டு சிவபெருமான் உறையும்பொழுது அவ்வடியார்கள் பெறும்

பேறுகள் என்ன என்பதை அப்பர் ஒரு பாடலில் பாடி யுள்ளார். கூற்றை யுதைத்த குழகன் உள்ளே பழகி யுறையும்போது கூற்றுவன் அருகில் வருவானு? வரமாட் டான். தீவினைகள் யாவும் மெல்ல மெல்ல இல்லையாய்ப் போய்விடும். காமம் வெகுளி மயக்கங்களாகிய மூன்று குற்றங்களும் (பரிவு) நீங்கிவிடும். இன்பதுன்பங்களாகிய இடுக்கண்களும் வெடுக்கென விலகிவிடும். கிழக்கே உதிக்கும் சூரியன் வழக்கத்திற்கு மாருக வேறு எங்கே உதித்தால்தான் நமக்கென்ன? என்று கவலையின்றி அவ் வடியார்கள் வாழ்வார்கள் என்று அப்பர் அடிகள் தமது அநுபவத்தின் வாயிலாகக் கூறுகிருர் பாருங்கள் :

"வெம்பவரு கிற்பதன்று கூற்றம் நம்மேல்
வெய்ய வினைப்பகையும் பைய நையும்
எம்பரிவு தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்
எங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்
அம்பவள செஞ்சடைமேல் ஆறு சூடி
அனலாடி ஆனஞ்சும் ஆட்டு கந்த
செம்பவள வண்ணர்செங் குன்ற வண்ணர்
செவ்வான வண்ணர்என் சிந்தை யாரே."

இதில் சிவபெருமானது செந்நிறவண்ணத்திற்கு மூன்று உவமைகள் கூறியுள்ளார். முதலாவது-செங்குன்ற வண்ணர் என்ருர். சிவப்பு நிறம் குன்றின் முழுவதும் கலவாதிருத்தலால், அஃது இறைவன் பொருட்டன்மை யால் உலகத்தினின்று பேதமாய்த் தோன்றுகிற அத்துவித நிலையைக் குறிக்கிறது; இரண்டாவது—செம் பவளவண்ணர் என்பதில், சிவப்புநிறம் பவளத்தின் உள்ளும் புறமும் கலந்திருத்தலால், அஃது இறைவன் உலகம் அனைத்திலும் கலப்புப்பற்றி அபேதமாய்த் தோன்றும் அத்துவித நிலையினைக் குறிக்கிறது. மூன்ருவது — செவ்வானவண்ணர் என்பதில், செஞ் ஞாயிற்றின் ஒளி அந்தி நேரத்தில் வானத்தில்பட்டு

அதிற் சிவந்த நிறம் உண்டாதலால், அஃது இறைவன் எவற்றிலும் ஒன்றித்து நின்றும் ஒன்றிலும் பற்றிலனய் நிற்கிற பேதாபேத அத்துவித நிலேயைக் குறிக்கிறது. அவ்வாறு பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்று வகை அத்துவித நிலேகளும் தனித்தனியே உடையவன் அல்லனய் அம்மூன்றற்கும் பொதுமையான அத்துவித நிலேயையுடையனய் மெய்ஞ்ஞானிகள் சிந்தையுள் இருப்பன் சிவபெருமான் என்பார் "என் சிந்தையாரே" என்ருர். கூற்றம் நம்மேல் வருகிற்பதன்று என்பதனல் பேரருளுடைமையும், வெய்யவினே நையும் என்பதனல் இயல்பாகவே பாசங்களினீங்குதலும், எம்பரிவு தீர்ந் தோம் என்பதனல் முற்றுமுணர்தலும், இடுக்கணில்லோம் என்பதனல் வரம்பிலின்பமுடைமையும், ஞாயிறு எங்கெழி லென் என்பதனல் தன்வயத்தனதலும், எளியோ மல்லோம் என்பதனல் முடிவிலாற்றலுடைமையும் தமது சிந்தையில் பதியப்பெற்றமையை அப்பர் குறிப்பிட்ட மையும் நோக்கத்தகும். இயற்கை உணர்வினனுதல் இயல்பாகவே பாசங்களினீங்குதலிலும், தூய உடம்பின ஞதல் பேரருளுடைமையிலும் அடங்கும். இவ்வாறு இறைவனுடைய எண்குணங்களும் தமது சிந்தையிற் பதியப்பெற்றவர்கள், வடகோடு உயர்ந்தால் என்ன? தென்கோடு சாய்ந்தால் என்ன? என்றபடி, "சூரியன் எங்கெழுந்தால் என்ன? நமக்கு ஒரு குறையும் இல்லே" என்று அலக்கண் இன்றி அமைதிபெறுவார்கள். இது போல் மணிவாசகரும் "எங்கெழிலென் ஞாயிறு எமக்கு' என்று பாடுவதைப் பாருங்கள் :

"உங்கையிற் பிள்ளே உனக்கே அடைக்கலம் என்று
அங்கப் பழஞ்சொற் புதுக்கும்எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன்று உரைப்போம்கேள்
எம்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க

எங்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க
கங்குல் பகல்எம்கண் மற்ருென்றும் காணற்க
இங்கிப் பரிசே எமக்குஎம்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர்
எம்பாவாய்.''

இப்பாடலும் அப்பரின் திருவங்க மாலையை நினைவுறுத்துவதாகவே அமைந்துள்ளது. ஈண்டுக் கண்ணை மட்டும் குறிப்பிட்டாரேனும், ஏனைப் பொறிப் புலன்களையும் உள்ளடக்கியே கூறினுர் என்று கொள்ள வேண்டும். "எங்கை உனக்கல்லால் எப்பணியும் செய்யற்க" என்றதால், ஏனை அங்க உறுப்புக்களையும் சிவத்தொண்டிலும் சிவவழிபாட்டிலும் ஈடுபடுத்த வேண்டும் என்பதே ஆகும். இவ்வாறு இறைபணி நிற்றல் இடையருது நிகழ வேண்டும் என்பார், "கங்குல் பகல்" என்ருர், அஃதாவது கனவிலும் நனவிலும் என்றவாறு. இங்ஙனம் அடியார்களுக்கு ஆட்பட்டுச் சிவ வழிபாடும் சிவதரிசனமும் செய்தால், கீழ்த்திசையில் தோன்றும் கதிரவன் வேறு எத்திசையில் தோன்றினும் தமக்கு வருவதொரு தீங்கு இல்லை என்பார் "எங்கெழிலென் ஞாயிறு எமக்கு" என்ருர். அப்பர் வாக்கையே இவரும் அமைத்துப் பாடுகின்ருர். நாள்களும் கோள்களும் நம்மை நலிய மாட்டா என்பதே கருத்தாகும்.

நாம் இத்திருவெம்பாவைப் பாடலின் முதலிரண்டு அடிகளை மீண்டும் நோக்குவோம். குழந்தையைக் கையிலே ஏந்திக் கொண்டிருக்கிற ஒரு தாயிடம் சென்று "நீ இந்தக் குழந்தைக்குத் தாய். இக்குழந்தை உன்னுடைய அடைக்கலப் பொருள். நீ இதைக் கைவிடாது காப்பாற்ற வேண்டும்" என்று ஒருவரும் சொல்லுவாரில்லை. குழந்தையைப் பாதுகாக்க வேண்டும் என்று அதன் தாய்க்கு ஒருவர் சொல்லித்தான் தெரியவேண்டுமா? அவ்விதம் யாராவது சொல்லுவார்களாளுல் அது வெறும்

முகமன் வார்த்தையாக, உபசார வழக்காக, அல்லது ஒரு பொருளற்ற போலிப் புகழுரையாகப் போய் விடக்கூடும். ஆயினும் எமது அச்சத்தின் காரணமாக அப்பழைய சொல்லை இன்றும் புதிதாக எடுத்துச் சொல்கிறேன் என் கிருர் மணிவாசகர். அது முகமுன் வார்த்தை போன்றே இருக்கும் அல்லவா ? ஏனெனில், எல்லா உயிர்களுக்கும் தாயும் தந்தையும் ஆவான் இறைவன். அவனுடைய கைப்பிள்ளைகளாகவே நாம் அனைவரும் இருக்கிருேம். நாம் அவனுடைய அடைக்கலப் பொருள் என்பது முற்றி லும் உண்மை. ஆனுல் அதை நாம் அவன் முன்னே வாயாற் கூறும்பொழுது, இல்லாத ஒன்றை ஓர் உபசார மொழியாகச் சொல்வது போல் ஆகிவிடக் கூடுமோ என்ற எண்ணத்தால் "அப்பழஞ்சொல் புதுக்கும்" என்ருர். அவ்விதம் கூறுவதன் காரணத்தை "எம் அச்சத்தால்" என்ருர்.

நம் அனைவருக்கும் தந்தையும் தாயுமாய் இருக்கிற இறைவன் நமக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சொல்லாமலே செய்து வருகிருன் என்பது உண்மை. ஆயினும் அவன் ஒருவேளை மறந்து விடுவானே என்று நமக்கு எழுகின்ற பயத்தால் நாம் அடிக்கடி அவனிடம் நமக்கும் அவனுக்கும் உள்ள உறவை நினைவூட்டி நம்மைப் பாதுகாக்க வேண்டும் என்று வற்புறுத்தி வருகி ருேம். அவ்விதம் கூறுவது ஏதும் தொடர்பு இல்லாத ஒரு வனிடம் சென்று தொடர்பு இருப்பது போற் காட்டிக் காப் பாற்ற வேண்டும் என்று கூறுவது போன்று தோன்று கிறது அல்லவா ? அதைத்தான் முகமுன் என்பது. ஆனுல் இறைவனை அம்மையப்பன் என்பது முகமன் வார்த்தையன்று. இதை அப்பரும் எடுத்துக் கூறுகிருர்:

''முன்னே உரைத்தால் முகமனே ஒக்கும் இம் மூவுலகுக்கு
அன்னையும் அத்தனும் ஆவாய் அழல்வண்ணா நீயலையோ
உன்னை நினைந்தே கழியும்என் ஆவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெறுய்எம் பிரான்உன்னை வேண்டியதே.''

குழந்தைகள் பெற்றோரிடம் சென்று, ஒன்று வேண்டுமானால், ''நீங்கள் எங்கள் பெற்றோர்கள். ஆதலால் இதைக் கொடுக்க வேண்டும்'' என்று கேட்பதில்லை. பெற்றோர் அல்லாத மற்றோர் இடத்தில் சென்று ஒரு வேளை, ''நீங்கள் எங்கள் பெற்றோர்கள் போன்று உள்ளீர்கள், இதைக் கொடுக்க வேண்டும்'' என்று கேட்கலாம். அவ்விதம் கூறினால் அது முகமனே ஆகும். அவ்விதம் ஆகிவிடக்கூடாது என்று அஞ்சியே மணிவாசகரும் ''உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்'' என்ற அந்தப் பழஞ்சொல்லை மீண்டும் ஒருமுறை புதிதாகச் சொல்ல அஞ்சி நான் ஒன்று சொல்லுகிறேன், எம்பெருமானே'' என்று கூறியதாக அப்பாடலுக்குப் பொருள் கொள்ளுதல் சிறக்கும் என்பதைச் சிந்திப்போமாக.

திருக்குற்றாலத்தைப் பற்றி அப்பர் அதிகம் பாடியதாகத் தெரியவில்லை. ஒரு சில குறிப்புக்களே உள்ளன. அவற்றுள், திருவங்கமாலையில் ஒரு குறிப்பு காணப்படுகின்றது. கூற்றுவன் உயிரைக் கொண்டு போகும் பொழுது நமக்கு உதவி புரிய உலகத்து உற்றார் எவரும் வரமாட்டார்கள். குற்றாலத்தில் நின்று நடம்புரியும் கூத்தப் பெருமான் ஒருவனே அவ்வேளையில் உற்றவனும் உறவினனுமாக நின்று உதவுவான். மற்ற உறவினர்கள் சுடுகாட்டோடு நின்று விடுவார்கள், சிறுவிறகால் தீமுட்டி விட்டுச் சென்று விடுவார்கள். அஞ்சேல் என்று அருள் புரியும் உற்றார் குற்றால நாதர் ஒருவரே என்று நமது

நெஞ்சில் பசுமரத் தாணிபோல் பதியவைத்துப் பாடியுள்ளார் :

"உற்றார் ஆருளரோ—உயிர்கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல்லால், நமக்கு—
உற்றார் ஆருளரோ."

இப்பாடல் மாணிக்கவாசகர் நெஞ்சில் நன்றாகப் பதிந்திருக்க வேண்டும். அவர் குற்றாலம் சென்ற பொழுது சித்திரசபையிலே கூத்தப் பெருமானை ஏத்தி வணங்கினார். அப்பொழுது "உற்றார் ஆருளரோ? உற்றார் ஆருளரோ?" என்ற அப்பர் வாக்கு கணீர் என்று ஒலித்தது. ஆம், உயிர் உள்ள பொழுது "நான், நீ" என்று பலர் உற்றார்போல் வந்து நடிப்பார்கள். ஆனால் உயிர்போகும் வேளையில் இந்த உலகத்து உற்றார் எல்லாரும் ஓடிப்போவார்கள். அவ்வுற்றார் உறவு நமக்கு எதற்கு? வேண்டாம். மாணிக்கவாசகர் அப்பர் அருளுரையைப் பொருளுரையாய்ப் புரிந்து கொண்டு பாடுகின்றார் பாருங்கள் :

"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன்
பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரை கழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே."

இறைவனிடத்தில் காதலாகிக் கசிந்துருகுவதற்குக் கன்றையுடைய பசுவின் அன்புமனம் அக்கன்றினிடத்து எவ்வாறு கரைந்துருகுமோ அதுபோல் உருக வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

உலகில் அன்பின் கசிவிற்கு அல்லது அன்பின் தொடர்பிற்குத் தாயும் சேயும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும். உயிரினங்களுள் தாய் சேய் உறவு பசுவினிடத்திலே சிறந்து விளங்கும். அதனால் உவமைகளுக்குச் சிறப்புடைப் பொருள்களையே குறிக்க வேண்டும் என்ற

விதிக்கு இணங்க, மக்களினத்தில் தாய் சேய் உறவிற்கும் கூட கன்றுகாலிகளை எடுத்துக் கூறுகின்றனர். முடி சூட்டு விழாவன்று கைகேயியின் அழைப்பினால் அவள் முன்வந்த இராமனை "அந்திவந் தடைந்த தாயைக் கண்ட ஆன் கன்றின் அன்னான்" என்று கம்பர் குறிப்பிடுகிறார். இராமனைப் பிரிந்த கோசலையை "கன்றுபிரி காராவின் துயருடைய கொடி" என்கிறார். இராமலக்குவர் காட்டிற்குப் புறப்படுவதைக் கண்ணுற்ற சுமித்திரையை "இரண்டு கன்றீன்றீஇ வெருவரும் ஆவினில் தாயும் விம்மினாள்" என்று பாடுகிறார். இராமனைப் பிரிந்த அயோத்தி மக்களின் நிலையைக் "கன்றுந் தாயும் போல்வது" என்று பரதன் தன்தாய்க்கு இடித்துக் கூறுகிறான். இவ்வாறு கன்றையும் பசுவையும் உவமை கூறுவது என்றால் கம்பருக்கு மிகவும் பிடிக்கும். அவர் இதில் நாலடியாரையும் பெரிய புராணத்தையும் பின்பற்றுகிறார் எனலாம்.

முதலில் நாலடியாரைப் பார்ப்போம். ஓர் அழகான உவமை அங்கே காணப்படுகிறது. மிகச் சிறியதாயிருப்பினும் கன்று தான் பசுமந்தையின் நடுவில் விடப்பட்டால் தன்தாயை அடையாளம் தெரிந்து அதனையே சென்று அடைந்து விடும். அதுபோல் பழமையாக வருகிற வினையும் உயிர்த்தொகுதிகளுள் தனக்கு உரியவனையே நாடியடையும் என்று ஒரு நாலடிப் பாடல் நவில்கிறது:

"பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்-தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு."

இந்த உவமையை வைத்துக் கொண்டு கம்பர் வேறொரு கருத்தை அழகாக எடுத்துக் கூறுகிறார். பசுக்கள் ஆயிரம் ஆயிரமாய் மந்தையில் நின்றாலும்

கன்றுக்குத் தன்தாய் எதுவென்று தெரியும். கன்றுக் கூட்டத்திலும் தாய்ப்பசுவுக்குத் தன் கன்றை நன்கு தெரியும். இறைவன் உலகத்து உயிர்களுக்கு எல்லாம் தாயாக விளங்குகிருன். இறைவன் தாய்ப்பசு, உயிர்கள் கன்றுகள். தாய்க்குக் கன்றுகளைத் தெரியும். ஆனல் கன்றுகளாகிய நமக்குத் தாயைத் தெரியவில்லை. இது என்ன மாயை? என்று கம்பர் அழகாகப் பாடியுள்ளார்:

‘‘ தாய் தன்னை யறியாத கன்றில்லை தன்கன்றை
ஆயும் அறியும் உலகின்தாய் ஆகின் ஐய
நீயறிதி எப்பொருளும் அவையுன்னை நிலையறியா
மாயைஇது என்கொலோ வாராதே வரவல்லாய்.’’

இவ்வாறு உயிர்களுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பைப் புலப்படுத்தும் பொழுதும் கன்றும் பசுவுமே சிறந்த உவமையாகின்றன. கன்று முட்டி உண்ணச் சுரப்பது காலி. கன்று முட்டி முட்டிக் குடிக்கப் பாலைத் தட்டுத் தடங்கலின்றிப் பசு சுரந்து கொடுக்கும். அது போல் தமிழ்ப் பாமாலைகளை இறைவன் மேல் தட்டாது பாடும் தவஅருள் பெற்றவர் நம்பியாரூரர். திருவெண்ணெய் நல்லூர்த் திருவருட்டுறையுள் இறைவன் மறைந்து “ நாம் தடுத்தாண்டோம்’’ என்று ஒலியை எழுப்பினர். அதனைக் கேட்ட நம்பியாரூரர் “ஈன்ற ஆன் கனைப்புக் கேட்ட கன்று போற் கதறி’’னர் என்று சேக்கிழார் குறிப்பிடுகிருர். இங்கு இறைவனைப் பசுவாகவும் சுந்தரரைக் கன்ருகவும் உவமித்தார். காளத்தி மலையில் கண்ணப்பர் குடுமித் தேவருக்கு உணவு கொண்டு வரப் பிரியும் பொழுது “கன்றகல் புனிற்ருப் போல்வர்’’ என்ருர் சேக்கிழார். இங்கு இறைவன் கன்றும் கண்ணப்பர் பசுவுமாக உவமிக்கப்பட்டனர். “ஈற்ரு விருப்பிற் போற்றுபு நோக்கி’’ என்று பொருநராற்றுப் படையிற் காணப்படுகிறது. ஈன்றணிமையுடைய பசு புனிற்ரு,

ஊற்ரு எனப்படும். அத்தகைய பசுவிற்குப் பால் நிறைந்து சுரந்து கொண்டிருக்கும். அதனுல் கசிந்துருகுதலுக்கு அது சிறந்த உவமையாகும். அயோமுகியால் தூக்கிச் செல்லப்பட்ட இலக்குவன் அவனிடமிருந்து தப்பித்து வருந்தித் தேடிவந்த இராமனைச் சென்று சேர்ந்த பொழுது, கன்றைப் பிரிந்த பசு மீண்டும் கன்றைக் கண்டதும் பால் மடிசோர நிற்பது போல் கண்ணீர் சொரிந்து நின்ருன் இராமன் என்கிருர் கம்பர்:

"ஊற்றுறு சண்ணினீர் ஒழுக நின்றவன்
எற்றிளங் கன்றினைப் பிரிவுற் றெங்கணும்
ஆற்றலின் ஆற்றுவ தரிதின் எய்திய
பாற்றுறும் பனிமுலை ஆவின் பான்மையான்."

பிரிந்து வந்த கன்றைப் பசுவானது நக்கிக் கொடுப்பது போல் இராமன் இலக்குவனை உச்சிமோந்து உடல் முழுதையும் தடவிக் கொடுத்தான் என்பார் "ஆவின் பான்மையான்" என்ருர்.

காட்டில் மேய்ந்து விட்டு அந்திப் பொழுதில் ஊர் திரும்பும் ஆனிரைகள் நாள் முழுதும் கன்றைப் பிரிந்த கடுந்துயர் நீங்க முந்திக் கொண்டு முன் ஓடிவரும். அவை மந்தை மந்தையாய் வந்தணைவதும், வீடுகளில் கயிற்ருல் கட்டப்பட்ட கன்றுகள் பசுவை எதிர்நோக்கிக் கயிற்றை அங்கும் இங்கும் இழுத்து ஆடிக் குதிப்பதும் காண்போர் உள்ளத்தை உருக்கவல்ல காட்சியாகும். முல்லைத் திணைப்பாடல்கள் பலவற்றில் இக்காட்சிகள் உயிரோவிய மாகத் தீட்டப்பட்டிருப்பதைச் சங்க இலக்கியத்திற் காணலாம். சான்ருக ஒன்றை மட்டும் இங்கே காண்போம்:

"கடவுக காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயம்

கொடு மடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனை மனைப் படரும் நனைநகு மாலை.'' (அகநானூறு-54)

தாய்ப்பசு தன் கன்றை யறிவது உண்மைதான். ஆனால் அது குருட்டுப் பசுவாய் இருந்து விட்டால் எவ்வாறு அறியும் ? ஊர்ப்பசுக்களோடு குருட்டுப் பசுவும் காட்டிற்கு மேயச் செல்கிறது ? மாலையில் அவை ஊர் திரும்பி வந்து தத்தம் வீட்டை அடைகின்றன. தத்தம் கன்றுகளைக் கண்டவுடன் தாய்ப்பசுக்கள் "அம்மா அம்மா!'' என்று அழைத்து ஒலிக்கின்றன. குருட்டுப் பசுவோ தன்கன்றைக் காணக்கூடவில்லை. ஆயினும், மற்றைப் பசுக்கள் கனைத்து ஒலித்தலைக் கேட்டுத் தானும் தன்கன்றைக் கண்டது போல் கனைக்கின்றது. மெய்யடியார்கள் இறைவன் திருவடிக்கு அன்பு செலுத்தி அத்திருவடியை அடையும் பொழுது அத்திருவடியை அடைய முடியாத தாம் அன்பு செலுத்தியதுபோற் கூறிக் கொண்டு அயலே நின்று அழுவதை மாணிக்கவாசகர் குருட்டுப் பசுவின் செயலுக்கு உவமித்துக் கரைந்துருகிப் பாடுகின்றார்:

"தாராய் உடையாய் அடியேற் குன்தாள் இணையன்பு
பேரா வுலகம் புக்கார் அடியார் புறமே போந்தேன்யான்
ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்தாங் குன்தாள்
இணையன்புக்
காரா அடியேன் அயலே மயல்கொண் டழுகேனே.''

இதேபோல் நம்மாழ்வாரும் தாம்பாடிய திருவிருத்தப் பாடல் ஒன்றில் இவ் உவமையைக் கையாள்கிறார் :

"மைப்படி மேனியும் செந்தாமரைக் கண்ணும் வைதிகரே
மெய்ப்படி யாலுன் திருவடி சூடுந் தகைமையினார்
எப்படி யூரா மிளைக்கக் குருட்டா மிலைக்கு மென்னும்
அப்படி யானும் சொன்னேன் அடியேன்மற்றியா
தென்பனே.''

இதற்கு எழுதப்பட்ட விளக்கம் வருமாறு: "கண்டார் கண் குளிரும்படியான உனது திருமேனியையும் சிவந்த தாமரை மலர் போலே யிருக்கிற திருக்கண்களையுமுடையனுன உன்னுடைய திருவடித் தாமரை மலர்களை, கேட்டார் வாய்க் கேட்கை யன்றியே மெய்யாகக் கண்டு தலை மேற்கொண்டு அநுபவிக்குந் தன்மையுடையவர்கள் யாரென்னில், வேத வேதாந்த ஞானத்திற் சிறந்த மகான்களே யாவர்; அறிவிலியான நானும் அவர்களைப் போலே ஏதோ சில சொல்லுகிறேனே இஃது என்னென்னில், நன்ருகக் கண்தெரிந்த பசுக்கள் ஊர் புகுந்து சேர்ந்த வாறே நிலைகண்டு மகிழ்ந்து, அந்த மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாகக் கனைத்தல் செய்ய, கண்ணில்லாத குருட்டுப் பசுவும் அது கேட்டுத் தான் இன்ன தென்றறியாமலே ஒக்கக் கனைக்கு மென்று உலகம் சொல்லுகிற விதமாகவே, வேதவைதிக புருஷர்கள் சொன்ன பாசுரத்தைக் கேட்டு வைத்து நானும் சொன்னே னத்தனை: சொல்லுதற்கு அடியான சம்பந்தமுடையவனும் பக்தி பரவசப் பட்டவனுமான நான் அப்படியல்லாமல் என் ஞானத்தாலே கண்டு என் சக்தியாலே சொன்னே னென்ன வல்லேனே? என்ருராயிற்று."

"தேவுடனே கூடியசொற் செழுந்தமிழோர்
தெரிந்துரைத்த
பாவுடனே கூடியவென் பருப்பொருளும் விழுப்
பொருளாங்
கோவுடனே கூடிவருங் குருட்டாவும் ஊர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால்."

மாணிக்க வாசகர் கற்ருவின் மனம் போலக் கசிந்து உருக வேண்டும் என்று பாடியதன் உட்கருத்தை நாம் ஓர்தல் வேண்டும். கசிந்துருகும் கற்ருவின் மனத்தை உவமை கூறினர். அதன் மனம் எத்தகையது? ஒரு

கன்றையுடைய பசுவுக்கு அதன் கன்றைத் தவிர வேறு நினைப்போ கவலையோ இருக்காது. எப்பொழுதும் தன் கன்றையே பார்த்துக்கொண்டும் நினைத்துக்கொண்டும் இருக்கும். தன் கன்றைத் தவிர வேறு எந்தக் கன்றையும் அருகில் வரவிடாது. பால் கொடுக்காது எட்டி உதைத்து விடும்; முட்டி முடுக்கி விடும். வேறு எந்தக் கன்றிடமும் அன்பு செலுத்தாது. தன் கன்றை அருகில் இழுத்து அணைத்துக் கொண்டு உச்சி மோந்து உடல் முழுதும் நக்கிக் கொடுக்கும். கன்றைப் பார்த்துப் பார்த்து அதன் மனம் பூரித்துப் போகும். கன்று முட்டியும் மோதியும் இடறியும் பல்லால் கடித்தும் வாலால் அடித்தும் தலையால் இடித்தும் பால் குடிக்கும் பொழுது செய்யும் சிறு சேட்டைகள் எல்லாம் பசுவுக்கு இன்பமாய் இருக்கும். அப்பொழுது அதன் கண்களிலே ஆனந்தம் களிநடம் புரியும். கன்று துள்ளிக் குதித்துத் தூர ஓடினால் தாய்ப்பசு இரையையும் தொடாமல் அதனையே பார்த்துக் கொண்டிருக்கும். தன் கன்றுக்கு யாராவது தீங்கு செய்கிறார்கள் என்று தெரிந்தால் அவர் மீது பாய்ந்து சீறி முட்டித் தள்ளிவிடும். கன்றைக் காணப் பெறாத விடத்துக் கன்றிற்கு ஏதும் தீது வந்ததோ என்று எண்ணி மனம் பதறிக் கதறத் தொடங்கி விடும். கன்றின் குரலைக் கேட்டால் குரல் வந்த வழியே காதுகளைச் சாய்த்துக் கேட்டுத் தானும் அத்திசையையே நோக்கித் திரும்பி, தான் ஒரு நிலையில் நில்லாது, கட்டிய கயிற்றையும் அறுத்தெறிய அங்கும் இங்கும் அலைத்திழுத்து "அம்மா! அம்மா!" என்று அலறிக் கொண்டே அல்லலில் ஆழ்ந்து நிற்கும். இரையை எடுக்காது, பாலும் கொடுக்காது. கன்றைப் பிரிந்து காட்டிற்கு மேயச் சென்றாலுங்கூட, கன்றின் நினைவாகவே மேய்ந்து கொண்டிருக்கும். மாலையில் விரைந்து சென்று தன் கன்றுக்கு நிறையப் பால்கொடுக்க வேண்டும் என்று எண்ணியவாறே மேயும். தன் கன்றிற்

குப் பால் வேண்டியே இரை அருந்தும். கன்றைப் பிரிந்த பசுவின் பரிதாபமான கலக்க நிலையைக் கண்டால் கல்மனமும் இளகிவிடும். அதனால் பசுவிடமிருந்து கன்றைப் பிரிப்பது பாவம் என்று நம் பண்டையோர் கருதினர். முன் காலத்தில், வாங்கின கடன் கொடுபடாமலிருந்தால், கடன் வாங்கினவன் வீட்டில் கடன் கொடுத்தவன் கறவைப் பசுவை மட்டும் கொண்டு போய்க் கட்டிவிடுவான். பசு கன்றைத் தேடிக் கத்திக் கொண்டே நிற்கும். பசுவிடமிருந்த கன்றைப் பிரித்ததால் விளையும் துயரம் கடனைத் திருப்பிக் கொடாத காரணத்தால் ஏற்பட்டதாகலின், அதனால் உண்டாகும் பாவம் கடனாளியைச் சாரும் என்பது பண்டையோரின் நம்பிக்கை. அதற்கு அஞ்சிக் கடனாளி உடனே கடனை எப்படியாவது திருப்பிக் கொடுத்துப் பசுவைக் கன்றோடு சேர்த்து விடுவான். கன்றின் குரலைக் கேட்டால், வாயில் எடுத்த வைக்கோலையும் தின்னாது நழுவ விட்டுப் பசுவானது கதறத்தொடங்கிவிடும். மேலே கூறியவற்றால் கன்றைப் பிரிந்த பசுவின் துயர்நிலை எத்தகையது என்பது ஒருவாறு புலனாகும். இத்தகைய பசுவின் தன்மையே ஓர் அடியவனிடத்திலும் காணப்பட வேண்டும் என்கிறார் மாணிக்க வாசகர். இதனை விரிவாக அவர் போற்றித் திருவகவலில் சாற்றியிருப்பதை நாம் கண்டு மகிழலாம்:

"கற்று மனம்எனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமைஎன் றிகழாதே திருவடி இணையைப்
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் ஆகி முனியாது அத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள

நன்புலன் ஒன்றி நாத என் றரற்றி
உரைதடு மாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண் துளி அரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி!"

கன்றைக் காணாத பசு கதறியும் பதறியும் தன் கன்றைத் தவிர மற்றோர் கன்றினைக் கனவிலும் நினையாது, உருவினை முன்பின் ஆகப் பிரியாது நிற்கும் நிழலது போல, முனியாது, கன்றுள்ள திசையே, என்புநைந் துருகி நெக்கு நெக்கேங்கி, அன்பு கரைபுரள, நன்புலன் ஒன்றி "அம்மா" என்று அரற்றி, உரை தடுமாறி உரோமம் சிலிர்ப்பக் கண்களிகூடா நுண்துளி அரும்பச் சாயாத அன்பை நாள் தோறும் வளர்த்துவரும் பசுப் போல் அடியாரும் அரனிடத்து வளர்த்து வந்தால், அரனும் அன்னைபோல அவரை வளர்ப்பான்.

பசுவானது தன் கன்றினிடத்தே அன்பு செலுத்துமே தவிர வேறு எக்கன்றையும் பக்கம் நெருங்கவிடாது, நினையாது, விரும்பாது. அதுபோல உண்மை அடியார்களும் சிவனைத் தவிர வேறு எத்தெய்வத்தையும் பொய்யாகவேனும் கனவிலும் கருதமாட்டார்கள் என்பார், "மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது" என்றார். சிவனே முழுமுதற் கடவுள் என உணர்ந்த ஞானிகள் மற்றோர் தெய்வந்தன்னை மறந்தும் கையெடுத்துக் கும்பிட மாட்டார்கள்; மனத்தால் நினைக்கவும் மாட்டார்கள். திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் போன்ற சமயகுரவர்கள் இதிலே திடமான உறுதிப்பாடுகொண்டு விளங்கினார்கள். "ஏத்தேன், பிற தெய்வம்" என்று திடமாகக்

கூறியவரான நாவரசர் இதனை ஒரு கட்டளையாகவே நமக்கு நவின்றுள்ளார் :

"பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டிற்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டிற்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டிற்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கேன் என்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும்
பொழிலாரூ ராவென்றே போற்று நில்லே."

இப்பாடலில், உன்னையல்லால் ஒரு தெய்வம் உள் கேன் என்று நில் என்பது ஒரு கட்டளை. அதனை அப்படியே கடைப்பிடித்தேன் என்பதுபோல், இப் பாடலை நினைவுகூர்ந்து பாடுகிறார் மணிவாசகரும் :

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறின்இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள்
உத்தமனே."

அப்பரைப்போல் மணிநாவரும் 'உன்னையல்லாது பிற தெய்வம் உள்ளேன்' என்று சிவனிடம் கூறுதல் காண்க. மற்றுமோரிடத்தில் "மற்றறியேன் பிறதெய்வம்" என் கிறார் மணிவாசகர். "ஈசனேநீ யல்ல தில்லை இங்கும் அங்கும் என்பதும், பேசி னேனொர் பேதம் இன்மை பேதை யேனென் எம்பிரான், நீசனேனை யாண்டு கொண்ட நின்மலாவொர் நின்னலால், தேச னேயொர் தேவர் உண்மை சிந்தியாது சிந்தையே," என்றதும் காண்க. அப்படி வேறு ஒரு தெய்வம் உண்டு என நினைப்பவரைக் கண்டாலும் அஞ்சுவேன் என்கிறார் மணிநாவர். "புற்றில்வா ளரவம் அஞ்சேன் பொய்யர்தம்

மெய்யும் அஞ்சேன் கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி, மற்றுமோர் தெய்வந் தன்னை உண்டென நினைந்தெம் பெம்மாற், கற்றிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே.'' சிவன் ஒருவனே பரம்பொருள், மற்றத் தெய்வங்கள் எல்லாம் சிறுதெய் வங்கள். சிறு தெய்வ வழிபாடு சிவனடியார்க் காகாது. இக்காலத்தில் ஒருவிதமான போலிப்பத்தி நம்மவரிடையே தோன்றியுள்ளது. எந்தக் கடவுளைக் கும்பிட்டால் என்ன? எல்லாம் ஒரு கடவுள்தானே! என்று காடன், மாடன், காட்டேரி வரையில் ஒரு சிலையையும் பாக்கி விடாமல் அறிவாளிகள் கும்பிட்டு வருகிறார்கள். அவர்கள் சிவபெருமானையும் கும்பிடத்தான் செய்கிறார்கள். ஆனால் மற்றத் தெய்வங்களையும் செத்தவர் கல்லறைகளையும் கும்பிடாமல் விடுவதில்லை. ஏனெனில், ஏதாவது ஒரு தெய்வம் உண்மையிலேயே கடவுளாக இருந்துவிட்டால் கும்பிட்ட பயன் வீண்போகாதே என்ற முன்னெச்சரிக்கை தான். ஆனால் அவர்கள் மனநிலை எவ்வாறு இருக் கிறது? சிவனே ஓர் இறைவன் என்ற கொள்கை ஆட்டம் கண்டிருக்கிறது. அவ்வளவுதான். ஆனால் நம் சமய குரவர்கள் இந்தச் சபலப்புத்தியைக் கண்டித்தார்கள். சிறு தெய்வ வழிபாட்டை எதிர்த்தார்கள். சிறு தெய்வங்களை வணங்கோம் என்று பெருமிதத்துடன் முழங்கினார்கள். அப்பர் பாடுகிறார் பாருங்கள் :

“என்றும்நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா ஆரும் இல்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோம் அல்லோம் அன்றே
உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே.''

சிவனையும் அவன் திறத்தையும் நினைந்தவளவில் சிறு தெய்வங்களை வணங்கிப் பிழைக்கும் பிழைப்பிலிருந்து "நான் தப்பிப் பிழைத்தேன்" என்று பெருமித மகிழ்ச்சியில் திளைத்துப் பாடுகிறார் மணிவாசகரும் :

"பச்சைத்தாள் அரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே அடியேனை உய்யக்கொண்டு
எச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோஎன்
சித்தத்தார் உய்ந்தவா றன்றேஉன் திறம்நினைந்தே."

இவ்வுலகத்துயிர்களுக்கு உற்றவரும் உறுதுணையும் சிவன் ஒருவனே ஆவான். அவனுடைய கருணைக்கு ஓர் உவமை கூறுவதற்குக்கூட உலகத்தில் யாதும் இல்லை, யாரும் இல்லை. அன்புக்குச் சிறப்பாக எடுத்துக் கூறவேண்டுமானால் தாயைக் கூறலாம். அன்னையிற் சிறந்த அன்புடையார் உலகத்து யாரும் இல்லை. சிவனுக்குத் தாயை உவமை கூறலாமா என்றால், அந்தத் தாயையும் உவமையாக எடுத்துக் கழிக்கத்தக்கதாகுமே தவிர உவமையாகப் பொருத்திக் காட்டிவிட முடியாது. ஏனெனில் தாயானவள் உடலுக்குப் பால் கொடுப்பாள். அவ்வளவுதான். ஆனால் சிவபெருமான் உடலோடு உள்ளத்திற்கும் அமுது அளிப்பான். இதை அப்பர் பாடல் ஒன்றால் நாம் அறியலாம் :

"தாயி னும்நல்ல சங்கர னுக்கன்பர்
ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே."

இவ்வருமைத் திருப்பாடலை அப்பர் அடிக்கடி இசைத்து மகிழ்வதைத் திருஞானசம்பந்தரும் கேட்டு மகிழ்ந்திருத்தல் கூடும். சம்பந்தர் தேவாரப் பாடல் ஒன்றில் இக்குறிப்பு விளங்காநிற்கும் :

"தாயினு நல்ல தலைவரென் றடியார்
தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினு மனத்து மருவிநின் றகலா
மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பா னீக்கி
நுழைதரு நூலினர் ஞாலம்
கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே."

தாயின் அன்பைவிடவும் சாலச் சிறந்தது சிவனருள். இதை மணிவாசகரும் விளக்குகிறார். அன்பும் அருளும் உடைய சிவனுக்கு உவமையாக எடுத்துக் கழிப்பதற்குக் கூட எல்லாத் தாயரையும் ஏற்றவராகக் கூறமுடியாது. சில தாய்மார் குழந்தையைப் பெறுவார்களே தவிர ஊட்ட மாட்டார்கள். அதற்குச் செவிலித் தாயரைச் சேவைக்கு அமர்த்துவார்கள். ஆதலால் தாயருக்குள்ளே ஊட்டும் தாய் சிறந்தவள். அப்படி ஊட்டும் தாய்மார்களிலும்கூடச் சிலர் தாமாக ஊட்டமாட்டார்கள். குழந்தை பசியால் துடித்து அழுத பின்னரே ஊட்டுவார்கள். வேளைக்கு வேளை குழந்தையின் பசி அறிந்து தக்கமுறையில் தாமாகவே அமுது ஊட்டும் தாய்மாரிலும் நினைந்தூட்டும் தாய்மார் சிறந்தவராவர். அங்ஙனம் நினைந்தூட்டும் தாயரிலும் முலைப்பால் இல்லாமல் பெட்டிப்பாலை ஊட்டு கிறவர்களும் வேறு உணவை ஊட்டுகிறவர்களும் உண்டு. சில தாய்மார் முலைப்பாலைக் கொடுத்தால் தங்கள் உடற் கட்டு விட்டுவிடும் என அஞ்சிப் பால் இருந்தும் அதனை ஊட்டாமல் பசுவின் பாலையும் ஏனையவற்றையும் ஊட்டு வார்கள். ஆகவே, அவர்களைவிடப் பால் நினைந்தூட்டும் தாய் சிறந்தவள். அத்தகைய பால் நினைந்தூட்டும் தாயை விடவும் பரிந்து நம்மைப் பேணுபவன் சிவபெரு மான் ஆதலால் அத்தகைய அன்புத்தாயும் சிவனுக்கு உவமையாகமாட்டாள் என்று பாடுகிறார் மணிவாசகர் :

"பாலினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே."

தாயானவள் ஊட்டும் பால் குழந்தையின் உடலைக் கொழுக்க வளர்க்கும். அறியாமையால் வரும் பாச இருளைப் பெருக்கும். ஆனால் அறிவை வளர்க்காது. சிவபெருமானேவெனில், தாயைவிடவும் மேலான பரிவு காட்டி, உடம்பை உருகச் செய்து, உள்ளொளி பெருகச் செய்து, ஆனந்தத் தேனைப் பருகச்செய்து, சிவஞானம் நல்கி, இடைவிடாது புல்கிப் பின்னாலேயே தொடர்ந்து வருவானும். நவரத்தினங்களால் இழைத்த ஓர் அழகான பொற்கிண்ணத்தைக் கண்டதும் அது வேண்டும் என்று குழந்தை அழுதால், தாயானவள் மறுக்க மாட்டாமல் கிண்ணத்தைக் குழந்தையின் கையில் கொடுப்பாள். அதைக் கையில் பிடித்துக் கொண்டு உள்ள மகிழ்ச்சியால் குழந்தை குடுகுடுவென்று ஓடத் தொடங்கும். கிண்ணத்தின் அருமை தெரியாமல் குழந்தை கீழே போட்டு உடைத்துவிடக் கூடாதே என்று அதன் பின்னாலேயே தாயானவள் பாதுகாவலாகக் கூடச் செல்வது இயற்கை. அது போல் சிவஞானச் செல்வத் தைப் பெற்றுக் கொண்ட உயிரின் புறத்தே புறத்தே பாதுகாவலாகச் சிவபெருமான் விடாமல் பின் தொடர் கிறான் என்னும் உண்மையைப் "புறம் புறந்திரிந்த செல்வமே" என்றார். இவ்வாறு இறைவன் பின்னாலேயே திரிவது சிவஞானத்தைப் பெற்ற உயிர் அதன் பெருமையை அறிந்து சீராக வைத்துப் பேணுகின்றதா

என்று சோதிக்கவே என்னும் உண்மையை அப்பரும் ஒரு பாடலில் சுட்டுகிறார்:

“ பொல்லாத என்னழுக்கிற் புகுவான் என்னைப்
புறம் புறமே சோதித்த புனிதன் தன்னை
எல்லாரும் தன்னையே இகழ அந்நாள்
இடுபலியென் றகந் திரியும் எம்பி ரானைச்
சொல்லாதார் அவர்தம்மைச் சொல்லா தானைத்
தொடர்ந்துதன் பொன்னடியே பேணு வாரைச்
செல்லாத நெறிசெலுத்த வல்லான் தன்னைத்
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.”

புலால் நாறும் மலத்தின் குப்பையாகிய உடம்பைப் பொல்லாத அழுக்கு என்றார். இறைவன் புனிதனாயிருந்தும் அந்தப் பொல்லாத அழுக்கையும் பொருட்படுத்தாது அதனுள்ளே புகுந்து உயிரைப் பாதுகாத்தான் என்பார், “புறம் புறமே சோதித்த புனிதன்” என்றார். இதனால் புறம்புறமே திரிந்தான் என்பது உடம்பின் முதுகின் புறத்தேயுமன்று, தொலைவிலும் அன்று என்பதும் பெற்றாம். இவ்வாறு நாவரசர் நன்மொழியும் வாதவூரர் மணிமொழியும் ஒன்றை யொன்று விளக்கி இணைந்தியைவது கண்டு களித்தற்குரித்தாகும்.

அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த பொந்தைப் பரவினவர் திருவாதவூரர். அவருடைய ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்தான் சிவபெருமான். தேனுந்து செந்தீயனைய சிவன் சேவடி அவர் மனத்திலே மறையாது மன்னி நின்றது. அவர் உடலுறுப்புக்கள் எல்லாம் சுவை தரும் கொம்புத்தேனால் செய்யப்பட்டன வாயின. அற்புதமான அமுததாரைகளை எற்புத் துளை தோறும் இறைவன் ஏற்றினான்; இனிய தேனையும் அமுதையும் மயிர்க்கால் தோறும் தேக்கிடப் பாய்ச்சினான்.

அந்த இன்பமாகிய தேனை இனிதருந்தி, மதுவுண்ட வண்டுபோல், தேனினுந் தெவிட்டாத் திருவாசகத்தை இசைத்து மகிழ்ந்தார் மாணிக்கவாசகர். நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும் அனைத் தெலும்பும் உள்நெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப் புடையான் சிவபெருமான் என்று கோத்தும்பியை விளித் துப் பாடுகிறார் மணி நாவர்:

"தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும்
எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ."

கோத்தும்பி என்பது அரசவண்டு. இங்கு மாந்தர் மனம் அரசவண்டாக உருவகிக்கப்பட்டது. ஓ மனமே! வண்டு சிறிய பூவில் உள்ள சிறிய அளவுடைய தேனை நுகர்தல் போல், உலக நுகர்வுப் பொருள்கள் ஒவ்வொன் றிலுஞ் சென்று சிற்றின்பத்தை நுகர்ந்து பின் துன்புற்று வருந்துகின்றாய்; அவ்வுலகப் பொருள்களை விட்டொழித் துப் பேரின்பப் பொருளாய் இருக்கிற கூத்தப் பெருமானை மனத்தினால் நினைந்தும் வாயாற் பேசியும் அவன் திருவுரு வத்தைக் கண்ணாற் கண்டும் வழிபட்டால் அவன் எப் பொழுதும் இடையறாத பேரின்பத் தேனை நுகரும்படி செய்வான் என்று பாடினார் மணிநாவர்.

அப்பர் அடிகளும் சிவனுடைய திருவடிப் பெருமை யைக் கூறும் பொழுது, நினைத்தொறும் அத்திருவடி ஆனந்தத்தேன் சொரியும் இயல்பை,

"சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன"

என்றும்,

"களித்துக் கலந்ததொர் காதற்
கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் நின்றஇப்
பத்தரைக் கோதில் செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி
யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வம் ஆக்கும்
ஐயாறன் அடித்தலமே"

என்பது போன்று பாடித் தாம் பெற்ற பேரின்ப நுகர்ச்சிகளை இன்பத் தேன்மாரியாய்த் தீந் தமிழ்ப் பாடல்களிற் பொழிந்திருக்கிறார்.

சிவஞானச் செல்வர்களாய்த் திகழ்ந்த திருநாவுக்கரசரும் மாணிக்க வாசகரும் சிவனருளை எளிதிற் பெற்று விடவில்லை. எத்தனையோ சோதனைகளும் இடர்ப்பாடுகளும் அவர்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டன. எத்தனையோ மனப்போராட்டங்கள் ஏற்பட்டன. சிவ நெறியே தவநெறி என்னும் உண்மையை உணர்வதற்கே பெரும் பாடாகிவிட்டது. எத்தனையோ கலக்கங்களும் மயக்கங்களும் தோன்றின. அவர்கள் காலத்திலும் பல கொள்கைகளும் சமயங்களும் எதிர்ப்போதனைகளும் நாட்டில் பரவி இருந்தன. எங்கும் ஒரே குழப்ப நிலைதான். கடவுளே இல்லை யென்னும் நாத்திகக் கொள்கை ஒரு பக்கம் வலுப் பெற்றிருந்தது.

"ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்"

என்று மணிவாசகர் குறிப்பிடுகிறார். கண்டதே காட்சி, கொண்டதே கோலம் எனச் சாதித்து, இவ்வுலக வாழ்வில் நாம் அடையும் இன்பமே இன்பம் என நாத்திகர் வாய்ப் பறை யறைந்து வந்தனர். அரனை மறந்து அறநெறி துறந்து ஐம்புல நுகர்ச்சியில் ஈடுபடும் மாக்களை ஐம்பூதங்

களும் சீறி யெழுந்து படைபடையாய் வந்து அழித்து விடும் என்று அப்பரும் அறிவுரை கூறினர்:

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே."

இவ்வாறு புறத்தே சமயப் பூசல்கள் அலக்கழிப்பது மட்டும் அல்ல. அகத்தேயும் ஐம்பொறிகளும் புலன்களும் மக்கள் மனத்தை மயக்கிப் பத்திநெறியிற் செல்ல வொட்டாது தடுக்கின்றன அல்லவா? இப்பொறிப் புலன்கள் நம் சமய குரவர்களையும் அல்லற்படுத்தாமல் விடவில்லை. மத்தினுற் கடையப்பட்ட தயிர் போல் அவர்கள் உள்ளம் உடைந்து வருந்தலாயினர். ஐம்புலன்களும் இவ்விதம் மத்திட்டுக் கடையவும், தமது சித்தமாகிய தயிர் சிதறுண்டு போவதைக் கண்டு வருந்தி அப்பர் சிவனை அடைக்கலம் அடைகின்ருர்:

"பத்தனய் வாழமாட்டேன் பாவியேன் பரவிவந்து
சித்தத்துள் ஐவர்தீய செய்வினை பலவுஞ் செய்ய
மத்துறு தயிரேபோல மறுகும்என் உள்ளந்தானும்
அத்தனே அமரர்கோவே ஆரூர்மூ லட்டனீரே."

"பொத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போல் மறுகும்என் சிந்தை மறுக்கொழிவி
அத்தா அடியேன் அடைக்கலம் கண்டாய் அமரர்கள்தம்
சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே."

இவ்விதமே மணிவாசகரும், ஐம்புலன்கள் உயிரை மயக்கி உலக இன்பங்களிலே இழுத்தலைப்பதற்கு மத்தையும் தயிரையும் உவமையாக்கிப் பாடுகிருர்:

"மத்துறு தண்தயி ரிற்புலன் தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட ஞரச்செஞ் சாந்தணி சச்சையனே."

இவ்வாறு ஐம்புலன்கள் மட்டுமல்ல, ஐந்துமலங் களுமே உயிரைச் சுழற்றிச் சுழலவிட்டுப் பல பிறவிகள் எடுக்கச் செய்கின்றன. கடையும் மத்தை வலிதாக ஊன்றி வேகமாகச் சுழற்றும் பொழுது தயிரும் வேகமாகச் சுழன்று சுற்றிச் சுற்றி வருகிறது. அதுபோல் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்னும் ஐந்து மலங்களாலும் சுழற்றச் சுழன்று, உயிரானது பிறவிச் சுழலில் அகப்பட்டுத் தத்தளித்துப் பல பிறவிகள் எடுக் கின்றது. இதையும் மணிவாசகர் குறிப்பிடுகிருர்:

''குலங்களைந் தாய்களைந் தாய்என்னைக் குற்றங்
கொற்றச்சிலையாம்
விலங்கல்எந் தாய்விட் டிடுதிகண் டாய்பொன்னின்
மின்னுகொன்றை
அலங்கலந் தாமரை மேனியப் பாவொப் பிலாதவனே
மலங்கள்ஐந் தாற்சுழல் வன்தயி ரிற்பொரு
மத்துறவே.''

ஐந்து மலங்களுள், ஆணவம் என்பது உயிரறிவைச் சிறுமைப்படுத்தும் மூலமலம்; கன்மம்—நல்வினை தீவினை யாகிய செயல்வடிவில் நிகழ்ந்து பக்குவமுற்றுப் பின் இன்பத் துன்பங்களை விளைப்பதாகும்; மாயை—கன்மத்திற் கீடாக உயிர்க்கு உடல் கரணம் இடம் நுகர் பொருள் களைப் பயப்பதாகும்; மாயேயம்—மாயா காரியங்களாகும்; திரோதாயி—உயிரோடு மறைந்து நின்று ஏனைமலங்களைத் தொழிற்படுத்துப் பாகம் வருவிக்கும் மறைப்புச் சத்தி.

இறைவனை அடைவதற்கு மனத்தை அலையவிடாமல் திடப்படுத்த வேண்டும். ஐம்புலன்களையும் அடக்கிச் சித்தத்தைச் சிவன்பாலே திருப்பித் தொழ வேண்டும். அவன் திருவடிப்பற்று ஒன்றையே கொண்டு வேறு பற்றுக்களை ஒழிக்க வேண்டும். ஆனல் மனது ஒரு நிலையில் நில்லாமல் சிற்றின்பம் நாடி ஓடுகின்றது; தத்தளிக்கின்றது. மனமானது அவ்வாறு இறைவனை

நினையாது தத்தளித்து ஓடுவதை இருதலைக் கொள்ளியின் எறும்புபோல் தத்தளிக்கிறது என்கிறார் அப்பர். ஒரு கட்டையின் இருமுனைகளிலும் தீப்பற்றி எரியும் பொழுது அதன் நடுவில் அகப்பட்ட எறும்பு அங்கும் இங்கும் ஓடும். ஒரு முனையில் நெருப்பைக் கண்டதும் மறுமுனைக்கு ஓடும். அந்த முனையிலும் நெருப்பைக் கண்டதும் மறு முனைக்கு ஓடும். அந்த முனையிலும் நெருப்பைக் கண் கண்டதும் அஞ்சி மீண்டும் மறுமுனைக்கு ஓடிவரும். இவ்வாறு அங்கும் இங்கும் ஓடி ஒரு நிலையில் நில்லாது தத்தளிக்கும். முனைக்கு முனை மாறி ஓடி நெருப் பினின்றும் தப்ப முடியாது வேதனைப்படும். இதுபோல் சிவனை நினைக்க விடாமல் தமது மனம் தத்தளிக்கிறதே என்று வருந்திப் பாடுகிறார் அப்பர்:

"உள்குவார் உள்ளத்தானை உணர்வெனும்
பெருமையானை
உள்கினேன் நானுங்காண்பான் உருகினேன் ஊறியூறி
எள்கினேன் எந்தைபெம்மான் இருதலை மின்னுகின்ற
கொள்ளிமேல் எறும்பென்உள்ளம் எங்ஙனம்
கூடுமாறே."

மணிவாசகர் இந்த உவமையில் ஒரு சிறு மாற்றம் செய்கின்றார். கொள்ளி மேல் எறும்பு என்பதை மாற்றிக் கொள்ளியுள் எறும்பு என்கின்றார். இரண்டு தலையும் எரிகின்ற கொள்ளியின் நடுவிடத்துள்ள எறும்பு அக்கொள்ளிக்குப் பற்றுக் கோடாகவுள்ள தொன்றைத் தானும் பற்றித் தப்பித்துக் கொள்ளவும் கூடும். அல்லது நெருப்பில்லாத நிலத்திலே குதித்துப் பிழைத்துக் கொள் ளவும் கூடும். ஆனால் இவ்விரண்டும் இயலாதபடி ஒரு மூங்கிற் குழாயினுள் அகப்பட்டு அந்த மூங்கிலின் இருதலையும் நெருப்புப் பற்றிக்கொண்டால் எங்ஙனம் தப்பமுடியாது தத்தளிக்குமோ அதுபோல் தாமும் தத் தளிப்பதாக மணிவாசகர் பாடுகின்றார்:

"இருதலைக் கொள்ளியின் உள்ளெறும் பொத்து
நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வலன் ஏந்திப் பொலிபவனே."

இவ்வுவமை சங்க இலக்கியமாகிய அகநானூற்றுப்பாடல் ஒன்றிலும் வந்துள்ளது :

"இருதலைக் கொள்ளி யிடைநின்று வருந்தி
ஒருதலைப் படாஅ உறவி போன்றனள்
நோங்கொல் அளியள் தானே யாக்கைக்
குயிரிடத் தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரி யோளே." (அகநானூறு-334)

உலகத்தில் மக்கள் தவநெறியை மேற்கொண்டு சிவனுக்கு ஆட்பட்டு உய்வைத் தேடவேண்டுவதே தக்கது. அவ்விதம் செய்யாமல் அவர்கள் சிற்றின்பங்களிலும் காமச் செயல்களிலும் ஈடுபட்டு வாழ்வதே மேலெனக் கருதி அவற்றையே நாடோறும் செய்து வாழ் நாளை வீழ்நாளாக்கி, எரிகின்ற விளக்கின் சோதியைப் பழம் என்று கருதி அதிலேயே மீண்டும் மீண்டும் போய் வீழ்ந்து இறக்கின்ற விட்டிற் பூச்சியைப் போல் அழிகின்றார்கள். சிவனை மறந்தலைந்து வீணே நமன் வாயில் விழுகின்றார்கள்! அவர்களை விலக்குவாரும் இல்லையே என்று இரங்கினார் அப்பர். மற்றையோர் செயலைத் தமது செயல் போலவே கொண்டு, தம்மைக் குறித்துப் பாடுவது போலவே அப்பர் பாடினார் :

"தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவா றொன்றுமின்றி
விலக்குவா ரிலாமையாலே விளக்கதிற்
கோழிபோன்றேன்
மலக்குவார் மனத்தினுள்ளே காலனார் தமர்கள்வந்து
கலக்க நான் கலங்குகின்றேன் கடவூர்வீ ரட்டனீரே."
(கோழி-விட்டில்)

ஒருதரம் விளக்கிலே போய் விழுந்த விட்டில் அது சுடுவது கண்டு அதனைவிட்டுப் போய், பின்னும் விளக்கின் கவர்ச்சி நோக்கி அது சுடுவதை மறந்து வந்து பறந்துபோய் அதிலேயே விழுந்து விழுந்து இறந்து விடும். காமச் செயல்களிலே ஈடுபடும் உலக மக்கள் அவை கேடு செய்வதை மறந்து திரும்பத் திரும்ப அவற்றிலேயே உழன்று வீணாகத் தம்மை மாய்த்துக் கொள்வதற்கு விளக்கிலே விழுகின்ற விட்டில் ஏற்றதோர் உவமை யல்லவா ? துன்பத்தை இன்பமாகக் கருதிப் பெண்களின் பொருந்தா மையல்களிலே சிக்கி மனமானது அவற்றிலேயே தோய்ந்து தோய்ந்து மாய்ந்துபோகின்றனரே மக்கள் என்று வருந்தி, மாணிக்க வாசகரும் அவ்வுவமையைக் கையாண்டு, தம்மைக் குறித்துப் பாடுவது போலவே இறைவனை வேண்டிப் பாடினார் :

"செழிகின்ற தீப்புகு வீட்டிலிற் சின்மொழி
யாரிற்பன்னாள்
விழுகின்ற என்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி உத்தர கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு தூட்ட மறுத்தனனே."

கோவணம்

"துன்னத்தின் கோவணமொன்றுடையார் போலும்" என்று சிவமெருமானுக்கு ஓர் அடையாளம் கூறினார் திருநாவுக்கரசர். துன்னம்-என்றால் தையல். கிழிசல் துணியைக் கோவணமாகத் தைத்துக் கட்டியிருக்கிறாராம். ஒரு நல்ல கோவணத்திற்குக் கூட வழியற்ற வறிஞனாம். இவ்வாறு பரம ஏழையாய் இருக்கிற சிவபெருமான் பார்வதியம்மையைத் திருமணம் செய்து கொண்டாரே இவர் எவ்வாறு குடித்தன வாழ்க்கை நடத்துவார் என்று ஐயம் தோன்றி விட்டது அப்பர் அடிகளுக்கு. இதை இறைவனிடத்தில் நேரே கேட்கிறார் பாருங்கள்:

"அரைப்பா லுடுப்பன கோவணச் சின்னங்கள்
ஐயமுணல்
வரைப்பா வையைக் கொண்ட தெக்குடி வாழ்க்கைக்கு
வானிரைக்கும்
இரைப்பா படுதலை யேந்துகையா மறைதேடும் எந்தாய்
உரைப்பார் உரைப்பனவே செய்தியால் எங்கள்
உத்தமனே."

மாப்பிள்ளையோ கோவண ஆண்டி. பெண்ணே பெரிய இமயமலையரசன் மகள். அவளைக் கைப்பிடித்த திருமண நாளன்றும் மணமகனை சிவபெருமான் கோவண ஆடையில் தான் கோலங் கொண்டிருந்தாரோ என்ற எண்ணம் அப்பருக்குத் தோன்றி விட்டது. சிவ பெருமானிடத்தில் கேட்கிறார்:

"கடும்பகல் நட்ட மாடிக் கையிலோர் கபால மேந்தி
இடும்பலிக் கில்லந் தோறும் உழிதரும். இறைவ னீரே
நெடும் பொறை மலையர் பாவை நேரிழை நெறிமென்
கூந்தற்
கொடுங்குழை புகுந்த அன்றுங் கோவணம் அரைய
தேயோ."

இங்ஙனம் நகைச்சுவை தோன்றப் பாடியுள்ளார் அப்பர் அடிகள். சிவபெருமான் கோவண ஆடையுடையான் என்று கூறுவதன் கருத்து என்ன என்பதைத் தடை விடைகளால் விளக்குகிறார் மாணிக்கவாசகர்: வேதாகம சாத்திரங்களையே சரடாகத் திரித்து அவற்றின் பொருளையே கோவணமாகச் சாத்தியிருக்கிறான் என்பதாம்:

"என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தான் ஈசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன் காண் சாழலோ."

அப்பர் அடிகள் "துன்னத்தின் கோவணம்" என்றதையே "துன்னம்பெய் கோவணம்" என்று மணிவாசகர் மாறிமொழிவதை இங்கே மகிழ்ந்து நோக்கலாம்.

அம்மையப்பர்

அப்பரும் மாணிக்கவாசகரும் அம்மையப்பரின் திருவுருவக் காட்சியிலே ஊறித் திளைத்தவர்கள். காணும் இடமெல்லாம் சத்தியும் சிவமுமாய் இணைகின்ற கோலக் காட்சியே அவர்களுக்குக் கிடைத்தது. திருவையாற்றில் அப்பர் கண்ட கயிலாயக் காட்சியில் சத்தியும் சிவமும் சராசரம் அனைத்திலும் இலங்கக் கண்டார். அதுபோலவே மாணிக்கவாசகரும் இயற்கைக் காட்சிகளில் எல்லாம் சத்தியும் சிவமும் இணைவதையே கண்டார். வானம் கறுத்து வில்லை வளைத்து மின்னி இடித்து மழைபொழியும் காட்சி சத்தியும் சிவமும்கூடி அருளைப் பொழிவது போலவே வாதவூரருக்குத் தோன்றியது:

"முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்துஎம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்துஎம் பிராட்டி திருவடிமேல்
பொன்னம் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்."

ஆளுடையாள் தன்னிற் பிரிவிலா எங்கோமான் என்று சத்தியோடு சிவம் ஒன்றித்து நிற்பதை மணிநாவர் மனம் குளிரப் போற்றுவதைக் காணலாம். இதுபோலவே நீர் நிறைந்த பூமலர்ந்த பொய்கையைக் காண்கின்றார். அங்கும் அம்மையப்பரின் உருவெளிப்பாடு புலனாகின்றது. நீலநிறக்குவளை மலரும், பறவையினமாகிய ஒலிக்கின்ற குருகுகளும் (வளையல்) பின்னிவிட்ட பாம்புகளும் இறைவியினுடைய நீலநிறத்தையும் காவிவிழிகளையும், ஒலிக்கின்ற வளையல்களையும் பின்னற்சடையையும் நினைப்பூட்டுகின்றன. செந்தாமரை மலரும், குருகும், அரவமும் இறைவனுடைய செந்நிற மேனியையும் கொக்கிறகையும்,

அவன் அணிந்திருக்கும் பாம்புகளையும் நினைவூட்டு கின்றன. இவை அடுத்தடுத்து இணைந்திருப்பது இறை வனும் இறைவியும் சேர்ந்திருத்தலைக் காட்டுகின்றன. பொய்கையில் உடலின் அழுக்கைப் போக்கிக் கொள்ள வருவோர் அம்மையப்பரிடம் உயிரின் அழுக்காகிய ஆணவ மலத்தைக் கழுவ அடைவோர்களை நினைப்பூட்டுகின்றனர். மாணிக்கவாசகர் பாடுகிறார் பாருங்கள்:

"பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ
ரெம்பாவாய்."

மெல்லிசைவண்ணம் பயின்று வரும் இத்தெய்வத் திருமுறைப் பாடலில் சலசலவென்று புனலலை பொங்கவும் கலகலவென்று கைவளை ஆர்ப்பவும், சிலம்பு சிலம்பவும் நலம்பல நவிற்றவும், சிவனொடு சக்தி சேர்ந்துடன் ஆடவும் பொங்கியெழும் இன்பவெள்ளத்திலே நாம் பாய்ந்து பாய்ந்து இறையருளில் தோய்ந்து தோய்ந்து மனமாசு நீங்கி மகிழ்ச்சியடையலாம்.

காதலர் இருவர் உடன்போக்கின்கண் காட்டிடை நடந்து சென்றனர். காதற் கனிவொடு அவ்விருவரும் கசிந்து குழைந்து ஓர் உடம்பே என இணைந்து இயன்ற அழகினைக் கண்டோரெல்லாம் சிவமும் சக்தியும் இணைந்த காட்சியே இஃது எனக் கை தொழுதார்களாம். அவர்கள் இருவரும் கூடிநடந்த கோலத்தால், காலிலே ஒரு பக்கம் வீரக்கழலும் ஒரு பக்கம் சிலம்பும் ஒளிவீசிக் காட்சி அளித்தன. இடையிலே ஒரு பக்கம் ஆண் உடுத்திய

வெண்பட்டும் ஒரு பக்கம் பெண் உடுத்திய செந்நிறப் பட்டும் விளங்கின. இவ்வாறு அணியும் ஆடையும் வேறுபட்டனவேயன்றி அவர்கள் இருவரும் ஒருவர் போவது போலவே நடந்தனர். அவர்களைக் கண்டவர்கள் "ஆகா! என்ன புண்ணியம் செய்தோம் இவ்வழகுக் காட்சியைக் காண!" என்று உமாபதியாகிய அம்மையப் பரின் கோலத்தை நினைந்து கைதொழுதனராம். இதனைத் திருக்கோவையாரில் மணிவாசகர் பாடுகிறார்:

"மின்தொத் திடுகழல் நூபுரம் வெள்ளைசெம் பட்டுமின்ன
ஒன்றொத் திடவுடை யாளொடொன் றும்புலி
யூரனென்றே
நன்றொத் தெழிலைத் தொழவுற் றனமென்னதொர்
நன்மைதான்
குன்றத் திடைக்கண் டனமன்னை நீசொன்ன
கொள்கையரே."

இதன் உரையில் பேராசிரியர் "எல்லாவற்றையும் உடையளாகிய தன் காதலியோடு ஒரு வடிவாய் விளையாடும் புலியூரன் என்றே கருதி, யாங்கள் எல்லாம் ஒத்துப் பெரிதும் அவ்வழகைத் தொழநினைந்தேம்" என்று எழுதியுள்ளார்.

மிகப்பழமையானது அம்மையப்பருடைய திருவுருவம். வலது பக்கத்திலே புலித்தோல், இடதுபாகத்திலே மெல்லிய ஆடை; வலது காதிலே குண்டலம், இடது காதிலே சுருண்ட தோடு; வலது பாகத்திலே பால் போன்று வெண்ணிறத் திருநீற்றுப் பூச்சு, இடது பாகத்திலே ஈரம்புலராத சந்தனம்; வலதுகையிலே மூவிலைச் சூலப் படை, வளையல் அணிந்த இடதுகையிலே பசுங்கிளி— இவ்விதமான தொன்மைக் கோலமாகிய மாதொரு பாகனின் திருவுருவத்தை உள்ளங் குளிர்ந்து போற்று கின்றார் மணிவாசகர்:

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ."

அம்மையப்பரின் அழகுக் காட்சியிலே வாதவூரரைப் போல் வாகீசரும் மிகவும் ஈடுபட்டவர். ஒரு பக்கம் ஆண் உருவிலும் மற்றொரு பக்கம் பெண் உருவிலும் இறைவன் திகழ்கின்ற வண்ணக் காட்சியை எண்ணியெண்ணி இறும்பூது கொண்டவர். பாதி ஆணும் பாதி பெண்ணும் என்றால், ஓர் இழையும் பிசகாது எவ்வளவு சரியாக அவ்வேறுபாடு காணப்படுகிறது. பெண்ணுக்கு உரிய பொன் ஓலை இடது காதில் இலங்குகிறது என்றால், ஆணுக்கு உரிய சங்கக் குழை வலது காதில் வயங்குகிறது. தலைமயிரிலுமா ஆண் பெண் வேற்றுமை? வலது பக்கத்திலே குஞ்சி செஞ்சடையாக அலம்பி விழுகிறது. இடது பக்கத்திலே சீவிமுடித்த சீரான கூந்தல். இப்படி ஒவ்வோர் உறுப்பிலும் வேறுபாடு என்றால், வாய் இதழ்களின் செயலிலுமா வேறுபாடு? வலது பக்கத்து வாயிதழ் வேதம் ஓதுகிறது. இடது பக்கத்து வாயிதழ் புன்முறுவல் பூத்துப் பொலிகின்றது. என்ன சித்திரம்! இறைவனும் இறைவியும் ஒன்றாய் இணைந்து இயல்கின்ற எழிலான சித்திரம்! உயிர்தான் ஒன்று, உடல் இரண்டு என்னாது, உயிரும் உடலும் ஒன்றேயாகி உவந்து மகிழ்கின்ற ஒரு தனிக்காட்சி! "வலது பக்கத்து அப்பனின் அழகை நான் சொல்வதா? இடது பக்கத்து அம்மையின் அழகைச் சொல்வதா?" என்று அன்பின் பெருக்கிலே திகைத்து மகிழ்ந்து அப்பர் பரவசக் கூத்துடன் பாடுகின்றார் பாருங்கள்:

"புதுவிரி பொன்செயோலை யொருகா தொர்காது
சுரிசங்கம் நின்று புரள
விதிவிதி வேதகீதம் ஒருபாடும் ஓத
ஒருபாடு மெல்ல நகுமால்

மதுவிரி கொன்றை துன்று சடைபாகம்
மாதர் குழல்பாகமாக வருவார்
இது இவர் வண்ணவண்ணம் இவள் வண்ண வண்ணம்
எழில் வண்ண வண்ணம் இயல்பே.''

ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாய் அமைந்து காணும் அழகுக் காட்சி இது. அம்மை இடத்தை அத்தன் பற்றினனு, அல்லது அத்தன் இடத்தை அம்மை பற்றினளா என்று சொல்லொணு விதமாய் அம்மையும் அத்தனும் நிரம்பிய நிலே. இதைத் தான் மணிவாசகரும் "உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீ யிருத்தி'' என்று இசைத்தார். ஆம்! கருமிடற்றண்ணலும் கார்வரை மங்கையும் ஒருவரை யொருவர் தம்உள்ளம் ஈர்த்தலால் இருவரும் மாறிப் புக்கிதயம் எய்தினர் என்னலாம் சித்திரக்காட்சி!

இப்பாடல்களேப் படித்ததும் இறைவன் இப்படி பெண்ணுசை பிடித்திருப்பாரா என்ற கேள்வி எழுப்பிக் கொண்டு அதற்கு விடையும் பகர்கிருர் வாதவூரர். இறைவன் தனது இச்சா சக்தியிடத்து இச்சை காட்டாது போனல், உலக நுகர்வில் மாந்தர்களுக்கும் இச்சை இல்லாது போய் விடும். உயிர்களுக்கும் இச்சா சக்தி இச்சையை ஊட்டா விட்டால், உயிர்கள் தங்கள் உலக வாழ்வில் ஐம்புலநுகர்வை அறிதலும் விரும்புதலும் நுகர்தலும் செய்யா. ஐம்புலநுகர்வு நிலேயாதது, இன்ப வமைதியைத் தரமாட்டாது என்னும் உலகானுபவத்தையும் அறியமாட்டா. அதனல் இறைவனது திருவடியை அடைய முடியாமலும் போய்விடும். உலகத்தார் தம் கர்மவினேப் பயன்களே அனுபவித்துக் கழிக்காது, யோகம் செய்யலுற்று அழிவார்கள். இதனே:

"தென்பா லுகந்தாடுந் தில்லேச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ''

என்னும் திருவாசகப் பாடலால் அறியலாம். உலகறியப் பார்வதியை இறைவன் திருமணம் செய்த காரணத்தையும்:

“மலையரையன் பொற்பாவை வாணுதலாள்
பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண்
சாழலோ”

என்று தெளிவாக மாணிக்கவாசகர் விளக்கியுள்ளார்.

# சிரிப்பு

சிரிப்பு—எங்கே? திருவாசகத்தில்! திருவாசகத்திலா? மாணிக்கவாசகர் 'அழுதடி அடைந்த அன்ப'ராயிற்றே! அதனால் என்ன? அழுத வாய்தானே சிரிக்கும்! 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்றல்லவோ பாடியிருக்கிறார்? ஆம், அதனால் என்ன? அழுத வாய்தானே சிரிக்கும்! அப்படிப் பாடியவர் சிரித்தும் இருக்கிறார்; சிரிக்க வைத்தும் இருக்கிறார். இந்தச் சிரிப்பும் அழுகையும் உலகியல் நிலையிலும் உண்டு; அருளியல் நிலையிலும் உண்டு. உலகியல் நிலையில் சிரிப்பும் அழுகையும் அளவுக்கு மீறினால் துன்பந் தரும். அருளியல் நிலையிலோ எல்லை கடந்தாலும் சிரிப்பும் அழுகையும் ஆன்ம ஈடேற்றமே உண்டாக்கும். உலகியல் சிரிப்பும் அழுகையும் உடற்கூற்று நிலையில் பூரிப்பையும் இளைப்பையும் உண்டாக்கும். ஆனால் அருளியலில் பசி பிணியற்ற ஒளியைக்கொடுக்கும். திருவாசகம் ஒன்பான் சுவையும் ஒருங்கே ஒளிரும் ஓர் உயர் பொற்பேழை. அதில் நகைச்சுவையும் நலம்பெறத் திகழ்கிறது. சிலவற்றைக் காண்போம் :

சர்க்கஸ் என்று சொல்லப்படும் உடல்வலிப் பயிற்சிக் களியாட்டங்களில் பல காட்சிகள் காட்டப்படும். வலியவன் ஒருவன் வந்து ஒரு பெரிய பாறுங்கல்லை மார்பில் சுமந்து கொள்வான். சம்மட்டி கொண்டு அதனை அடிப்பார்கள். அவன் அதைத் தாங்கிக்கொள்வான். அதன்பின் ஒரு கோமாளி வருவான். அவன் மிகவும் குள்ளமாய் மூன்றடி தான் இருப்பான். அவன் கீழே படுத்துக் கொண்டதும் ஒரு பெரிய பளுவை நாலைந்துபேர்கூடித் தூக்கமாட்டாமல் தூக்கி அவன் மார்பில் வைப்பார்கள். அதை அவன்

உடனே ஒரு கையால் தட்டிவிட்டு எழுந்து அதிகம் வருந்தியவன்போல் நடித்து வியர்வையைத் துடைத்துவிட்டு விசிறியால் வீசிக்கொள்வான். அந்தப் பெரிய பளுவான பொருள் வெறும் அட்டைப் பெட்டியாக இருக்கும். இந்தக் கோமாளிக் கூத்தைக் கண்டு எல்லோரும் கைகொட்டிச் சிரிப்பார்கள். இது போன்றதுதான் தாம் ஆண்டவனுக்குச் செய்யும் பத்தித்திறமையும் என்கிருர் மாணிக்கவாசகர்.

உலகப் பற்றுக்களை அறவே விடுத்த மெய்யன்புடைய அடியார்களே ஆண்டவனின் அருளின்பத்தைப் பெறுதற்கு உரியார்கள். வெறும் ஐம்புல நுகர்ச்சியிலே ஈடுபட்டுச் சிற்றின்பத்திலே கிடந்து உழன்று உடலை வளர்த்தற்கு நடலை வாழ்வைக் கொண்டு திரியும் ஒருவன் தன்னைச் சிவனடியான் என்றும், தன்னைச் சிவன் ஆண்டருளினன் என்றும் சொன்னுல் அட்டைப் பெட்டியை வருந்தித் தூக்கும் கோமாளியைக் கண்டு எல்லோரும் சிரிப்பதுபோல் இதற்குச் சிரித்துத் தொலைக்க வேண்டியதைத்தவிர வேறு என்ன இருக்கிறது? என்று பாடுகிருர் மாணிக்கவாசகர்.

“தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை
    யொளியைத் தெளிந்தார்தம்
ஊனை யுருக்கும் உடையானை
    உம்ப ரானை வம்பனேன்
நானின் அடியேன் நீயென்னை
    ஆண்டா யென்ருல் அடியேற்குத்
தானுஞ் சிரித்தே யருளலாந்
    தன்மை யாமென் தன்மையே!”

இறைவனை அடைதற்குரிய தவச் செயலில் ஈடுபடாமல் உடலை ஓம்பி இவ்வுலக வாழ்க்கையில் பயனற்ற செயல்களை மேற்கொண்டு ஒழுகும் இயல்பினன் யான்

என்பார் தம்மை 'வம்பனேன்' என்றார். ஒரு வம்பன் தன்னைச் சிவனடியான் என்று சொன்னால் அது தவச் செயல் இல்லாமையாகிய குற்றத்தோடு பொய்ம்மை கூறிய குற்றமும் ஆம். அதன்மேலும் 'நீ என்னை ஆண்டாய்' என்றால் ஆளுதற்குரிய தகுதியைப் பகுத் துணரும் ஆற்றல் இறைவனுக்கு இன்று என்னப் பொருள்பட்டுப் பெருங்குற்றமுமாகும். இதனையும் உண ராது ஒரு போலி அடியான் தன் பேதைமையால் தன்னை அடியவன் என்றும், இறைவன் தன்னை ஆண்டு கொண்டானென்றும் கூறினால் இறைவன் 'சிரித்தே யருளலாம்' என்று நகைச்சுவை தோன்றக் கூறினார் திருவாதவூரர். எலும்பும் தோலுமாய் ஒட்டி உணங்கிப் போன கிழவன் ஒருவன் நெஞ்சை முன்னே துருத்திக் கொண்டு கையும் காலும் வீசி நடந்து மன்மதன் என்று கூறினால் எவ்வளவு சிரிப்பு உண்டாகுமோ அவ்வளவு சிரிப்பு தகுதியில்லாத தானும் இறைவனுக்கு அடியான் என்று சொல்வதால் உண்டாகுமே என்று வருந்தி அஞ்சி இவ்வாறு பாடினார் மாணிக்கவாசகர் என்பதை அறிதல் வேண்டும். இவ்வாறு இறைவனுக்குச் சிரிப்பை ஊட்டுவ தோடு அமையாது இறைவனைப் பிறரெல்லாம் சிரிக்கும் படியும் செய்துவிடுவதாக மணிவாசகர் பாடுகிறார் :

"தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண் டாய்விடி லென்னை மிக்கார்
ஆரடி யானென்னின் உத்தரகோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே."

இப்பாடலில் உள்ள நகைச்சுவையை உய்த்துணர்ந்து கொள்ளுதல் வேண்டும். ஒரு பழம்பெருங் குடும்பத்தைச் சேர்ந்த சிறுவன் ஒருவன், கவனிப்பாரற்றுக் கைவிடப் பட்டுக் கெட்டுத்திரிவானாகில், அஃது அந்தக் குடும்பத்தின் பெருமையும் மதிப்பும் கொண்ட தலைவனுக்கு மானக்

கேட்டை விளைவிக்கும். அதிலும் அந்த உதவாக்கறை பெரியவர்களிடமெல்லாம் சென்று தன் குடும்ப மரபைத் தூற்றத் தொடங்கினுல் அக்குடும்பத் தலைவனுக்குப் பெருத்த அவமானத்தை உண்டுபண்ணிவிடும். ஊரார் எல்லாரும் அக்குடும்பத் தலைவனை ஏளனமாகப் பேசிச் சிரிப்பார்கள். மற்றும் ஒரு வீட்டில் வேலை செய்யும் அடியவனுக்குத் தக்க உண்டி, உடை, உறையுள் முதலியன வழங்கப் பெருவிடின் அவன் அண்டை வீடு களிலெல்லாம் சென்று கோள் சொல்லுவான். வீட்டு முதலாளியை எல்லோரும் கேலி செய்வார்கள். சிரிப்புக்கு இடமாகும். இவ்வாறு வேலையாள் தூற்றுவதற்கு அஞ்சி யாவது வீட்டு முதலாளி அவ்வேலையாளை நன்ருகப் பராமரித்து வருவான். இதுபோன்றதொரு நிலையைத் தாம் இறைவனுக்கு உண்டாக்கிவிடப் போவதாக நகைச் சுவை தோன்றப் பேசுகிருர் மாணிக்கவாசகர். இறைவன் தம்மைக் கைவிடக் கூடாது. கைவிட்டால் சிரிக்கவைத்து விடுவேன் என்கிருர். இதில் இன்னெரு நயம் என்ன வென்ருல், தம்மை உத்தரகோச மங்கைக்கரசின் அடியான் என்று சொல்லாமல், அரசின் சீரடியார்களுடைய அடியான் என்று சொல்லுகிருர். இதனுல் உத்தரகோச மங்கையிலுள்ள இறைவனைச் சிரிக்க வைப்பதோடன்றி அவனுடைய சிறந்த அடியார் கூட்டம் முழுதையுமே சிரிக்கவைத்து விடுவேன் என்கிருர், தன் அடியார் பெருமையைக் காக்கவேண்டியாவது இறைவன் விரைந்து தமக்குத் திருவருள் பாலிக்கவேண்டும் என்னும் கருத்தால். தன்னைவிடத் தன் அடியார்களுக்கு ஓர் இழுக்கு வந்துவிடக்கூடாது என்று இறைவன் முந்துவான் என்பது உட்கிடை. அதன்மேலும் மிக்காரிடத்தில் போய்ச் சொல்லிவிடுவேன் என்று அவர் கூறுவது சிரிப்பைப் பல்கவைப்பதாகும். இறைவன் கைவிட்டால் தம் நிலை பிறரெல்லாம் இரங்கி நீ யார் என்று கேட்கும்

படியாக இருக்கும் என்பதை 'என்னின்' என்பதால் தெரிவிக்கிறுர்.

இவ்வளவு சொல்லியும் இறைவன் தம்மை ஆட் கொள்ளாது கைவிடுவதானல் ஏசத் தொடங்கிவிடுவேன் என்று எச்சரிக்கிறுர் மாணிக்கவாசகர். என்ன சொல்லி ஏசுவாராம் தெரியுமா? பித்தன் என்று சொல்லித் திட்டு வாராம். பித்தன் என்பதைப் பைத்தியக்காரன் அல்லது கோட்டிக்காரன் என்று நாம் சொல்லுவோம். பித்தன் செயல் என்ன? அவன் உடுத்தக்கூடாததை உடுத்து வான்; செய்யத்தகாதனவற்றைச் செய்வான். அது போல் சிவனும் புலித்தோலே ஆடையாகவும் யானைத் தோலைப் போர்வையாகவும் கொண்டவர்; நஞ்சை உண்பவர்; சுடுகாட்டில் உறைபவர்; ஆட்கொள்ளத்தகாத சிறியரையும் குற்றங்களை நந்து ஆட்கொள்ளுதல் அவர்க்கு இயல்பு. எனவே இறைவனைப் பிச்சன் பிச்சன் என்று பிச்சு வாங்குகிறுர் மாணிக்கவாசகர்.

"சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையும்
ஈசற்கென்று
விரிப்பிப்பன் என்னை விடுதிகண் டாய்விடின்
வெங்கரியின்
உரிப்பிச்சன் தோலுடைப் பிச்சனஞ்
சூண்பிச்ச ஞூர்ச்சுடுகாட்
டெரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப்பிச்சனென்
றேசுவனே!

மற்ருேரிடத்தில் 'நாயேன் தனையாண்ட பேதாய்' என்று அவர் இறைவனை விளித்தமையும் ஈண்டுக் கருதத் தகும். ஏசுவது போல் இறைவனை ஏத்தியிருப்பதை நாம் எளிதில் அறியலாம். யானை, புலியின் தோல்களை அணிவ தால் முடிவிலாற்றலும், நஞ்சுண்பதால் பேரருளுடைமை யும், எல்லாம் அழிந்த சுடுகாட்டில் தீயாடி நிற்பதால்

முழு முதற் றன்மையும் இறைவனுக்கு உள்ளன என்று புலப்படுத்தப் பட்டமை அறியற்பாலதாம். இதுபோன்று சுவையுடைய இன்னொரு பாடலையும் நாம் இங்குத் தெரிந்து கொள்ளலாம்:

"உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத்து
ஈயினைப்பாய்
விழைதரு வேனை விடுதிகண் டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபரன் என்றென் றறைவன் பழிப்பினையே!"

சில முரண்டு செய்யும் சிறு குழந்தைகள் தங்கள் விருப்பம் நிறைவேருத நிலையில் பெற்றோர்களுடைய குறைகளைக் கூறித் திட்டுவதற்கு முற்படும். ஆனால் திட்டத்தெரியாமல் அவர்களுடைய பெருமைக் குணங்களையே முற்ற எடுத்து மொழிந்து கொண்டிருக்கும். அவ்வசைமாரியைக் கேட்டுப் பெற்றோர் இன்புறுவர். அதுபோல் மணிவாசகரும் இறைவனைப் பழிப்பது போலப் புகழ்ந்து போற்றியே முடிக்கிருர். "இறைவனே! இவ்வுலகச் சின்றின்பத்திலே கிடந்து தடுமாறும் என்னை நீ காப்பாற்ற வேண்டும். காவாது விட்டால் நான் உன் பழிகளை எடுத்துக் கூறுவேன். நீ நஞ்சையுண்டு கருகிப் போன கழுத்தையுடையவனென்றும், குணங்கெட்டவன் என்றும், தெய்வம் இல்லை; வெறும் மனிதனே என்றும், அறிவுகெட்டவனென்றும், பழைய பெரிய பரதேசி என்றும் பழிச்சொற்களால் தூற்றுவேன்" என்று பாடிப் போற்றுகிருர். இதனுல் சுவை தோன்றத் தமிழ்மொழியை இனிது கையாண்டு நகையுண்டாகும்படி பலபொருள் தோன்றப் பாடுவதில் மணிவாசகர் மிகவும் வல்லவர் என்பது நன்கு தெளிவாகும். நஞ்சையுண்ட செய்தியால் சிவனுடைய பேரருளுடைமையும் முடிவிலாற்றலுடைமையும் புலனுகின்றன. குணமிலி என்பது முக்குண்ங்களையும் கடந்தவன் என்ருகும். சாத்துவிகம், இராசதம், தாமதம் என்

னும் முக்குணங்களும் பிரகிருதி மாயையினின்றும் தோன்றி உயிர்களின் இன்பத் துன்பங்கட்கும் விழைவு களுக்கும் ஏதுவாவனவாம். இவற்ருல் இறைவன் பற்றப் படாதவன் என்பதைக் குணமிலி என்பதாற் கூறினர். மானை இடக்கையிலேந்தியவன் மானிடன். தாருகவனத்து முனிவர்கள் வேள்வியினின்றும் ஏவிய மானைப் பிடித்து இடதுகையில் ஏந்திநின்ருர் சிவபெருமான். இஃது இறை வனுடைய ஒறுத்தல் தன்மையைக் குறிக்கிறது. தேய் மதியன் என்பது, கலை குறைந்த சந்திரனைப் பாதுகாத்தற் பொருட்டுச் சிவனர் சடைமேல் தரித்துக் கொண்டார். இஃது இறைவனின் அருட்செயலை வலியுறுத்துகிறது. 'பழை தரு மாபரன்' என்பது பழைய பெரிய பரம் பொரு ளாவான் இறைவன் என்ருகும். அவன் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாவதை யாரும் அறிவர். சிலேடை நயந்தோன்றப் பழிப்பதுபோல் புகழ்ந்து நகைச்சுவையுடன் மணிவாசகர் இப்பாடலைப் பாடியிருப்பது போற்றி உணர்ந்து இன்புறற் பாலதாம். உண்மையில் சிரிப்பை விளைத்துச் சுவை பெறப் பாடு வதே அவர் நோக்கமாக இருந்தது என்பது எளிதிற் புல னாகும்.

# மாணிக்கச் சிரிப்பு

இலக்கிய நுகர்ச்சி இணையற்றது; தலையான நிலையான இன்பம் சுரக்கவல்லது; மலைவான உலைவான துன்பம் துறக்க வல்லது. அது கவலையைக் களைவிக்கும், விழுமிய விளைவிக்கும்; அறிவை விளக்கும், ஆயுளை வளர்க்கும்; உவகையை ஊட்டும், கடவுளைக் காட்டும். அதனால் மகிழ்ச்சி மல்கும்; பல்சுவை பல்கும். இந்த இலக்கிய இன்பம் யாவரும் எளிதில் அடையக் கூடியது, எவருக்கும் தீங்கு செய்யாதது. அத்தகைய இலக்கியங்களுள் தலை சிறந்தது திருச்சிற்றம்பலக் கோவையார்; அதன் தேனூறு பாடல்கள் நானூறும் சுவைக்க வாயூறி நின்றார் தில்லைக் கூத்தனார். அதனை மாணிக்க வாசகர் பாடினார், ஏட்டில் எழுதி இறைவன் அம்பலத்தில் ஆடினார். என்னே அதன் பெருமை! அதில் சிரிப்பை விளைவிக்கும் சில நகைச்சுவைப் பாடல்களைப் பார்ப்போம்:

காதல் வாழ்க்கையில், களவொழுக்கம் ஒழுகி வரும் தலைவனை, தலைவி சென்று குறியிடத்திற் காணவேண்டும். அவள் காதலைப் பற்றித் தோழிக்கு இன்னும் தெரியாது. அதனால், தன் தோழிக்குத் தெரியாமல் தலைவி மறைந்து சென்றாள். தோழி தலைவியைத் தேடிக் கொண்டிருந்தாள். தலைவியோ குறியிடம் சென்று தலைவனைக் கண்டுவிட்டுச் சிறிதுநேரம் கழித்து, நல்ல பிள்ளை மாதிரி வந்தாள். வந்த தலைவியைத் தோழி வினவினாள். தான் சுனையாடி வந்ததாகத் தலைவி கூறினாள். ஓர் இளைஞன் தினைப் புனத்தை விடாது தினம் வந்து சுற்றிக் கொண்டிருப்பது பற்றித் தோழிக்கு முன்னரே ஐயம் உண்டு. தலைவியின் இவ்விதத் திடீர் மறைவுகள் தோழியின் ஐயத்தை மேலும்

வளர்த்தன. பின்னும் தலைவியின் வழியே ஒழுகி அதன் உண்மையை அறியவேண்டும் என்று நினைத்து மறு நாளும் தோழி தலைவியை 'நீ போய்ச் சுனையாடி வா' என்ருள்.

தலைவியும் உடனே அதற்கு இசைந்து சுனையாடப் போவது போலச் சென்ருள். ஆனால் நீராடாது தலைவனோடு கூடி விளையாடி விட்டு, ஒன்றும் அறியாதவள் போல் திரும்பி வந்தாள். தோழிக்கு உண்மை விளங்கி விட்டது. தலைவி நீராடி வரவில்லை. அவள் மேனியிற் சில புது மாறுதல்கள் தோன்றியிருந்தன. ஆடை குலைந்திருந்தது, ஒப்பனை கலைந்திருந்தது. பூ மிலைந்திருந்தது. ஆளே மாறிவிட்டதுபோல் ஒரு புது அழகு படைத்துத் தலைவி மகிழ்ச்சி பொங்கிக் கொண்டிருந்தாள். மாசுபோக நீராடித் தூய்மையுடன் ஆசாரமாய் வருவதுபோல் பாசாங்கு பண்ணும் தலைவி, உண்மையில் கன்னிமை கழியக் காதலனைக் கலந்ததால் உண்டான கவினோடும் களிப்போடும் ஒருவிதப் பூரிப்பும் பொலிவும் கொண்டு தோன்றினாள்.

தலைவி இவ்வாறு வேறுபட்டு வந்து நின்ற நிலையில், அவளை அடையாளம் கண்டு கொள்ளாததுபோல், வனப்புமிக்க வரையணங்கு ஒன்றுவந்து நின்றதாக வைத்துத் தோழி பேசுகின்ருள். இவ்வாறு தலைவியை மலையில் உறைகின்ற ஒரு தெய்வ மகளாகப் புனைந்து தோழி வேறுபடுத்திக் கூறுவது அறிவுக்கு ஒரு விருந்தாகும். தோழி பொய்யாக நடித்துத் தலைவியைப் புரிந்து கொள்ளாததுபோல் பேசுகின்ருள். "ஆகா! என்ன அழகு! என்ன அழகு! நீ இந்த மலையில் வாழும் ஒரு தெய்வப்பெண் என்று தெரிகிறது. ஆனால் அச்சு அடையாளம் என் உயிர்த் தோழியான தலைவியைப் போலவே காட்சி அளிக்கிருய். அவள் என்மீது பேரன்பு கொண்ட

வள். இந்தக் குன்றவாணர் மகள். இந்தத் தினைப்புனம் அவளுடையது. இப்பொழுது சற்றுமுன்தான் அந்த ஆற்றுக்குக் குளிக்கச் சென்ருள். சீக்கிரம் வந்துவிடுவாள். நீ அவளைப் பார்த்துப்போக வேண்டும். உன்னுடைய உடல் உறுப்பு ஒவ்வொன்றும் அவளுடைய உடலுறுப்புப் போலவே இருக்கின்றது. ஆனுல் அவள் நீராடி வருவாள். நீ நீராடாதிருப்பதால் உன்னை வரையணங்கு என்று எளிதில் கண்டு கொண்டேன். நீ நீராடி வந்திருந்தால் என் தலைவி என்றே உன்னைக் கொண்டிருப்பேன். ஆனுல் அவள் இப்பொழுது குளித்துவிட்டு வருவாள். நீயே சற்றுப் பொறுத்திருந்து அவளைப் பார்த்துவிட்டுப் போக வேண்டும். அம்மா அம்மா பெண்தெய்வமே! வணக்கம்'' என்று தலைவியைச் சுற்றிவந்து கும்பிட்டு நின்ருள். இதைத் திருக்கோவையாரில் மாணிக்க வாசகர் பாடுகிருர்:

“அக்கின் தவாமணி சேர்கண்டன்
அம்பல வன்மலயத்து
இக்குன்ற வாணர் கொழுந்து இச்
செழுந்தண் புனமுடையாள்
அக்குன்ற ஆறு அமர்ந்து ஆடச் சென்ருள்
அங்கம் அவ்வவையே
ஒக்கின்றவாறு அணங்கே
இணங்காகும் உனக்கு அவளே''

(அக்கின் தவா மணி-உருத்திராக்கமாகிய நல்ல மணி).

இதனைக் கேட்டுப் பெருநாணினளான தலைவி சுனையாடி வந்ததாகக் கூறுகிருள். தோழி தலைவியைத் தொடர்ந்து கேலி செய்கிருள். அதற்குச் சுனையாடல் கூறி நகைத்தல் என்று பெயர். தோழிக்குக் கொண்டாட்டமாய் இருந்தது. பேசலுற்ருள்: “ஆகா! நீ சுனையாடியா வந்தாய்? நீ நீராடிய சுனை மிகவும் பொல்லாத சுனையாய் இருக்கிறதே! உன் உடம்பு ஒரு புது அழகோடு நல்ல நிறம் பெற்று விளங்குகிறது! உன் மார்பிற் பூசிய குங்குமக்

குழம்பை யெல்லாம் அழிக்காமல், வேண்டிய இடத்தில் மட்டும் அந்தச் சுனை குழம்பை அழித்திருக்கிறது! தலையில் பூமாலை புதிதாய் இருக்கிறது! மையைப் போலும் நிறத்தையுடைய கூந்தலில் தாது அப்பி இருக்கிறது! மாலையின் முறிந்த மலரும் அளகத்து அப்பிய தாதும் சிதறிக் குங்குமக் குழம்பில் அழுந்தி விரவிக்கிடக்கின்றன! உனது உடம்பெல்லாம் காமக் களிப்பால் உண்டாகிய கதிர்ப்பு பொம்மென்று பொலிகின்றது! இவ்வளவும் அந்தச் சுனையே தந்தனவா? அன்றி நீராடலால் வந்தனவா? இவ்வளவும் பெறக்கூடுமானால், எனக்கும் அந்தச் சுனையில் போய்க் குளிக்கலாம் போலத் தோன்றுகின்றது. எங்கே உள்ளது அந்தச் சுனை? அதைக் கொஞ்சம் எனக்குக் காட்ட மாட்டாயா?" என்று கேட்கின்றாள்:

"செந்நிற மேனிவெண் ணீறணிவோன்
தில்லை யம்பலம் போல்
அந்நிற மேனிநின் கொங்கையில்
அங்கழி குங்குமமும்
மைந்நிற வார்குழல் மாலையும்
தாதும் வளாய் மதஞ்சேர்
இந்நிற மும்பெறின் யானும்
குடைவன் இருஞ்சுனையே."

இதற்குத் தலைவி மறுமொழி கொடாது வெட்கத்தால் தலை குனிகின்றாள். வாழ்க்கையை இன்பமாய்க் கழிப்பதற்கு என்றே பிறந்தவர்கள் பெண்கள். இனிது உரையாடிச் சிரித்துப் பழகிப் பேசுவதில் ஆண்களைவிடப் பெண்கள் வல்லவர்கள். பெண்கள் கூடியிருக்கும் இடத்திலே கேலியும் சிரிப்பொலியும் கேட்டுக்கொண்டே இருக்கும். தலைவி சுனையாடி வந்திலளேனும் தலைவனைக் கூடி வந்தது உண்மை என்று குறிப்பாகக் கூறி, மேலும் தோழி நகை செய்கின்றாள். தோழி அவ்வாறு உண்மையை உணர்ந்துகொள்ளும் விதத்திலே பூவின்

ஒரு சிறிய இதழைத் தலைவன் தலைவிக்குச் சூட்டியிருந்தான். அது தலைவிக்குத் தெரியாது. தெரிந்தால் அதை முன்னரே அகற்றியிருப்பாள். அவ்விதழைக் கண்டதும் தோழிக்கு உண்மை புலனாகிவிட்டது. தோழி கேலி செய்கிறாள்: "நீ சுனையில் நீராடி வந்தேன் என்று பிடிவாதமாகச் சொல்கிறாயே, எனக்கு உண்மை தெரியாது என்று நினைத்தாயா? வழக்கமாய்க் கருமை பூண்டு விளங்கும் உன் கண்கள் இப்பொழுது சிவந்திருக்கின்றனவே! கொவ்வைக்கனி போன்று சிவந்திருக்கக் கூடிய உன் வாய் வெளுத்துப் போய் இருப்பதை நான் பாராமலா இருக்கிறேன்? உன்னுடைய களவும் இதனால் வெளுத்துவிட்டது என்றே சொல்லவேண்டும். உன் தலையில் செருகிவிட்ட மலர் கண்ணுக்கு விருந்தாய்க் காட்சி அளிக்கிறது. அதன் தேனுக்கு வண்டுகள் சுற்றிச் சுற்றி வருகின்றன. இவ்வாறு, தன்னிடத்தில் வந்து குளிக்கின்றவர்கள் கருங்கண் சிவக்கவும், சிவந்த வாய் விளர்க்கவும், வண்டுகள் வீழும்படி மலை மலரைச் சூட்ட வல்ல நீ குளித்த அந்தப் பெரிய சுனை மன்மதனை எரித்த சிவனுக்குரிய இந்த மலையில் எனக்குத் தெரியாமல் எங்கே உள்ளது? அந்தச் சுனை இவ்வாறும் மலரை அணிவித்து அனுப்புமோ? சொல்" என்று சிரித்துக்கொண்டே கேட்கிறாள்:

" பருங்கண் கவர்கொலை வேழப்
படையோன் படப்படர்தீத்
தருங்கண் ணுதற்றில்லை யம்பலத்
தோன்தட மால்வரைவாய்க்
கருங்கண் சிவப்பக் கனிவாய்
விளர்ப்பக்கண் ணாரளிபின்
வருங்கண் மலைமலர் சூட்டவற்றோ
மற்றவ் வான் சுனையே."
(வேழம்—கரும்பு).

இதற்குத் தலைவி என்ன பதில் சொல்ல முடியும்? அவளும் தோழியுடன் சேர்ந்தே சிரித்திருப்பாள்.

இதுபோல் தலைவனுக்கும் தோழிக்கும் நடக்கும் உரையாடல்களுள்ளும் சிரிப்பு உண்டு. தினைப்புனத்தில் தோழியும் தலைவியும் காவல் காத்துக் கொண்டிருந்தனர். தலைவன் அவ்வழியே ஒரு தழையுடையைக் கையுறையாகக் கொண்டு வருகிறான். மான் வேட்டை யாட வந்தது போல் நடித்துத் தோழியிடம் பேச்சுக் கொடுக்கிறான். "நீங்கள் யார்? எந்த ஊர்? என்ன பேர்? என் கணைக்குத் தப்பி ஒரு மான் இங்கே ஓடி வந்ததா?" என்று கேட்கிறான். தோழி பதில் ஒன்றும் பேசாமல் இருக்கிறாள். அவளுக்குச் சிரிப்பு மூட்டினாலாவது பேசுவாள் என்று, தலைவன் வேடிக்கையாகப் பேசுகிறான். "இனிமையாக ஆடுகின்ற கூத்தப் பெருமானின் தில்லையைப் போல நல்லவர்கள் இந்தப் புனத்தைக் காக்கும் பெண்மணிகள்! அவர்கள் பேசாமடந்தைகளோ! அன்பாக வரவேற்றுப் பேச வேண்டிய விருந்தினர்களைக் கண்டால் பேசக் கூடாது என்று ஒரு விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் போல் தோன்றுகிறது! அல்லது நிச்சயமாக வாயைத் திறந்தால் சலக்கென்று உதிரக் கூடிய முத்துமணிகளை வாயில் அடக்கிக் கொண்டிருக்கிறார்கள் போலும்! பேசினால் வாய் முத்தும் சிந்திவிடுமோ?" என்று அவன் கூறுவதைக் கேட்டால் யாருக்குத்தான் சிரிப்பு வராது?—

" இரத முடைய நடமாட்
டுடையவர் எம்முடையர்
வரத முடைய அணிதில்லை
அன்னவர் இப்புனத்தார்
விரத முடையர் விருந்தொடு
பேச்சின்மை மீட்டதன்றேற்
சரத முடையர் மணிவாய்
திறக்கிற் சலக்கென்பவே."

இதனைக் கேட்ட தோழி வந்த சிரிப்பை அடக்கிக் கொள்கிருள். தலைவனுக்கு ஒரு நல்ல சூடு கொடுத்துச் சிரிக்கவேண்டும் என்று நினைக்கிருள். அந்தத் துறைக்கு 'நகையாடி மறுத்தல்' என்று பெயர். "என் அம்பால் அடி பட்ட ஒரு கலைமான் இங்கு ஓடி வந்ததா?" என்று தலைவன் வினவியதும், தோழி அவனை நன்ருகக் கவனிக் கிருள். அவன் கையில் வில்லும் இல்லை, அம்பும் இல்லை. கையுறையாகக் கொடுக்கும் பூந்தழைதான் இருந்தது. ஆளைப் பார்த்தால் வேட்டையாட வந்தவன்போல் தெரிய வில்லை. தோழியிடம் அவன் வாய் பேசியதே தவிர, அவன் பார்வை முழுதும் தலைவியிடமே சென்றுகொண்டிருந்தது. தோழிக்குச் சிரிப்பு வந்துவிட்டது: பேசலுற்ருள்: "ஐயா! நீர் வேட்டையாடுவது மிகவும் நன்ருய் இருக்கின்றதே! நானும் வேட்டை யாடுகிறவர்களைப் பார்த்திருக்கிறேன். இந்தக் கயிலை மலையில் எங்கள் தந்தைமாரும் அண்ணன் மாரும் வில் வேட்டையாடுவதுண்டு. அவர்கள் ஓர் அம்பை எய்தால் அது மலைபோன்ற யானையின் உடலையும் துளைத்து அது விழுந்த மண்ணையும் துளைத்துவிடும். ஆனல் நீர் எய்ததாகச் சொல்லும் அம்போ ஒரு கலைமான் மேல் பட்டது. உடனே அந்த மான் சாகவில்லை. பின் என் செய்தது? உமது அம்பையும் கொடாமல் சுமந்து கொண்டு வேகமாகவும் ஓடிவிட்டது, தப்பிப் பிழைத்தும் விட்டது. உமது வில்லை என்னவென்று சொல்வது! அது கொலை செய்வதற்கு அஞ்சாத கொடிய வில்லேதான்! ஆகா! உமது வேட்டைத் திறமையே திறமை! மெச்சி னேன்! நீரே உண்மையான வில் வீரர்! உம்முடைய சூரத்தனம் மிகவும் அற்புதமானது!" என்று சொல்லிக் கொண்டே விழுந்துவிழுந்து சிரித்தாள். அதைப் படிக்கும் நாமும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கிருேம்:

"சிலையொன்று வாணுதல் பங்கன்சிற்
றம்பல வன்கயிலை
மலையொன்று மாமுகத் தெம்மையர்
எய்கணை மண்குளிக்கும்
கலையொன்று வெங்கணை யோடு
கடுகிட்ட தென்னிற் கெட்டேன்
கொலையொன்று திண்ணிய வாறையர்
கையிற் கொடுஞ்சிலையே."

யானையைத் துளைத்து மண்ணினுள்ளும் பாய வேண்டிய கணை, ஒரு மானின் உடலைக் கூடத் துளைக்க மாட்டாமல் அதனை வேகமாய் ஓடச் செய்திருந்தும் அதனை 'வெங்கணை' என்றும், மானைத் தப்பிப் பிழைக்கவிட்ட வில்லைக் 'கொலை புரியும் சிலை' என்றும், அவ்வில் திண்ணியது என்றும், 'கெட்டேன்' என்றும் ஏளனமாகக் கூறி, வில்லம்பு இல்லாத தலைவனைத் தோழி தன் சொல்லம்புகளால் குத்தி வாங்கிவிட்டாள் என்றே சொல்ல வேண்டும்.

இவ்வாறு மாணிக்கவாசகர் பாடல்களில் நகைச்சுவை அங்கங்கே நலம்பெறத் திகழா நிற்கும். அவை சுவைக்கும் தோறும் இன்பம் பயக்க வல்லன. மாணிக்கவாசகர் ஒரு ஞானி. ஞானியின் சிரிப்பு அருமையானது, பெருமை யுடையது, புனிதம் வாய்ந்தது, மாணிக்கவாசகரின் சிரிப்பு மாணிக்கச் சிரிப்பு.

# ஞானச் சிரிப்பு

இறைவனின் இனிய சின்னம் சிரிப்பு. அது மனிதனின் தனிச்சொத்து; பிறவியின் பேரொளி; வாழ்க்கையின் வெற்றிக் கொடி; கவலேயின் பகைவன்; துன்பத்தின் துணேவன்; இன்பத்தின் இளங்குருத்து, இடுக்கணேக் களேயும் எஃகு; செம்மையின் கூட்டாளி; தீமையின் எதிரி; நோயினே நொடிக்கும் நோன்படை; மகிழ்ச்சியின் கான்முளே; உயிரை வளர்க்கும் செவிலி; உடலே வளர்க்கும் உணவு; திருமகள் இருப்பிடம்; செயமகள் பிறப்பிடம்; முதுமகள் முடிவிடம்; உறவின் ஊற்றம்; நட்பின் ஏற்றம்; பொறப்பின் பொலிவு; இந்த நன்னயம் வாய்ந்த நலமிகு சிரிப்பு, இன்னுர் இனியார் என்றில்லாமல் மனிதக்குலம் அனேத்திற்கும் வரி கொடுக்க வேண்டாத பறிகொடுக்க முடியாத தவிரா உடைமை. இதனே ஒவ்வொருவரும் நலந்தீங்கிலும், இடரினும் தளரினும் மறவாது போற்றிக் காத்தல் வேண்டும். கோடி பொன்னேக் கொட்டினுலும், ஒருவன் அதற்காகத் தன் சிரிப்பை இழந்துவிடக் கூடாது.

சிரிக்கும் ஆற்றல் ஏனே உயிரினங்களுக்குக் கிடையாது. மனிதன் ஒருவனுல்தான் சிரிக்க முடியும். ஆகவே, சிரிப்பு மனிதனுடைய ஏற்றத்தை எடுத்துக்காட்டுகிறது. அதனுல் அவன் ஏனே உயிரினங்களிலும் மேம்பட்டு விளங்குகிருன். கவலேக்குக் கைகண்ட மருந்து சிரிப்புத்தான். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்பது பொய்யா மொழி. நமது சிரிப்பைப் பிடுங்கிச் செல்வதற்காகவே கவலேகள் எழுகின்றன. நாம் ஏமாந்துவிடக் கூடாது. எந்த நிலேயிலும் நாம் சிரிப்பைக் கைவிடலாகாது.

குலுங்கச் சிரித்தால் அழுங்கல் இல்லை. நன்ருகச் சிரிக்கும் பொழுது வயிற்றுக்கும் மார்புக்கும் இடையிலுள்ள தசைப் பற்றுக்கள் நன்கு அசைந்துகொடுக்கின்றன. மார்பின் இடம் விரிகின்றது. கூடுதலாக நல்ல காற்று உள்ளே செல்கின்றது. அதனல் வேண்டும் பிராணவாயு நுரையீரலுள் நுழைந்து இரத்தத்தைத் தூய்மை செய்கின்றது. உடல்நலம் செழிக்கின்றது. உள்ளத்து உவகை பெருகுகின்றது. அதற்காக, எப்பொழுதும் சிரித்துக்கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை. அப்படிச் செய்வது பைத்தியக்காரத்தனம். காரணத்தோடு சிரிக்கவேண்டும். காரணம் உள்வழிச் சிரிக்காமல் இருப்பது, உடம்பில் ஏதோ கோளாறு உளது என்பதையே எடுத்துக்காட்டும். சிலர் ஒலிபடச் சிரிப்பது பண்பாடு அன்று என்று தவருக நினைத்துக்கொண்டு வந்த சிரிப்பையும் அடக்கி விடுவார்கள்.

சிரிப்பை அடக்கவேண்டிய இடங்கள் உண்டு. “செவிச்சொல்லும் சேர்ந்தநகையும் அவித்தொழுகல் ஆன்ற பெரியா ரகத்து” என்று வள்ளுவர் கூறியுள்ளார். பெரியவர்கள் கூட்டத்தில் இருக்கும்பொழுது ஒருவருக்கொருவர் இரகசியம் பேசுவதும் கூடிச் சிரிப்பதும் கூடாது. மற்றும் பிறரை ஏளனம் செய்து மனதைப் புண்படுத்தும் விதத்தில் சிரிக்கக் கூடாது. “நகையுள்ளும் இன்னுது இகழ்ச்சி பகையுள்ளும் பண்புள பாடறிவார் மாட்டு” என்பது திருக்குறள். பரிகாசச் சிரிப்பு பொல்லாதது. பாண்டவர்கள் புதிதாகக் கட்டிய அரண்மனையில் துரியோதனன் வழிதெரியாமல் திகைத்துப் பளிங்குக் கதவில் முட்டி விழுந்தபொழுதும், வெறுந்தரையைத் தாமரைப் பொய்கை என்று ஆடையை ஒதுக்கிக்கொண்டு நடந்தபொழுதும், கேலிசெய்து சிரித்தாள் பாஞ்சாலி. அவள் சிரிப்பே அவளுக்குப் பல அல்லலையும் தந்து, பாரதப் போருக்கும் காரணமாயிற்று :

"பொன்னைச் சிரிக்கும் பூங்கோயில்
புனல்வாவியில் என்றெங்கள்குல
மன்னைச் சிரித்த செங்கனிவாய்
மாருதிரங்கி யழுதரற்ற
மின்னைச் சிரிக்கு நுண்ணிடையாய்
வேந்தர்க் கெதிருன் மெய்க்கணவன்
தன்னைச் சிரிக்க விருக்கின்ற
சழநீ காணிற் றரியாயே"

என்று துச்சாதனன் திரௌபதியைக் குத்திப் பேசுவதைக் காணலாம். பொதுவாகப் பெண்கள் அதிகம் சிரித்தல் கூடாது. ஆனால் எப்பொழுதும் புன்னகை தவழும் முகத்துடன் இருக்கப் பழகுதல் வேண்டும்.

பழக்கத்தால் வருவது சிரிப்பு. சிரிப்புடன் திகழப் பழகுதல் வேண்டும். அஃது இயல்பாய் அமைவது மிகவும் நல்லது. பிறக்கும்பொழுது குழந்தை முதலில் அழத் தான் செய்கிறது. ஆனால் அதை நாம் சிரிக்கவைக்கிறோம். அதன் விலாவில் விரலால் நெருடிக் கீச்சம் காட்டிச் சிரிக்கவைக்கிறோம். கீச்சுக் கீச்சுக் கீச்சு என்றதும் அஃது களுக் களுக் களுக்கென்று சிரிப்பை உதிர்க்கிறது. ஆ! ஆ!! குழந்தை பொக்கை வாயைத் திறந்து உதடு நெளியக் கன்னங்குழியக் குலுங்கிச் சிரிக்கிறது. அஃது ஓர் அழகுக் காட்சி! சுவர்க்கத்தையே திறந்துவிட்டது போல் இன்பம் மேலிடுகிறது. நாமும் சிரித்து மகிழ் கிறோம். இவ்வாறு பிறரைச் சிரிக்கவைத்து நாமும் சிரிக்கப் பழகுதல் வேண்டும்.

சிரிப்பு என்பது மனித ஆயுளின் விரிப்பு. அதுவே நம் குறிப்பு. இவ்வுலக வாழ்க்கையை ஏதோ ஒரு தாங்கற்கரிய துயரமாகக் கருதி, முக்கி முனங்கி முணு முணுத்து, அக்காள் பிடித்து அழுது அழுங்கிச் சாகக் கூடாது. வாழ்க்கையைக் களிப்பும் சிரிப்பும் விளையாட்டு

மாக எளிதில் இனிதாகக் கழித்துச் செல்லுதல் வேண்டும். நமது கடவுளே ஒரு விளையாட்டுப் பிள்ளைதான். அவர் அருட்செயல்களைத் திருவிளையாடல் என்றே நாம் குறிக்கின்றோம். அவர் செய்வனவற்றை எளிதிற் செய்யினும் விளையாட்டாகவும் செய்கிறார் என்று கூறுவதில் தவறில்லை. "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என்பது மணிவாசகம். இவ்வாறு திருவிளையாடல் புரியும் சிவபெருமான் ஒரு சிரிப்புக் கடவுள். அவன் ஆடற் கடவுள் அல்லனோ? ஒரே துக்கமும் துயருமும் குடிகொண்டிருந்தால் அம்பலத்தில் ஏறி ஆடமுடியுமா? சாமகீதங்கள் பாடமுடியுமா? ஆடுவதற்கும் பாடுவதற்கும் சிரிப்பும் கொந்தளிப்பும் சீராக அமையவேண்டும் அல்லவா? அவன் ஆடும்பொழுது குமிண் சிரிப்பும் கூடவே குலாவி நிற்கிறது. அவன் அம்பலத்தில் ஆடும்பொழுது அவன் அருள்முகத்தில் புன்சிரிப்புத் தாண்டவம் புரிகின்றது. அப்பர் பாடுகிறார் பாருங்கள் :

"குனித்த புருவமுங் கொவ்வைச்
செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமுங் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
யிந்த மாநிலத்தே."

சிவபெருமான் ஆடும்பொழுதுதான் சிரிப்பு என்பதன்று. அவன் பகைவர்களைச் சாடும்பொழுதும் சிரிப்புத்தான். முப்புரங்களையும் அவன் சிரித்தே எரித்தான். அவனுடைய சிரிக்கும் முகத்தைக் கண்கொண்டு பார்த்துவிட்டால் வேறு பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? அத்தகைய கோலக்காட்சி கண்கொள்ளாக் காட்சி! தில்லைக்கூத்தனின் சிரித்த முகத்தைப் பொருத்தமாய்

விரித்துக் கருத்திற் பரவிக் களித்துப் பாடுகிறுர் அப்பரடிகள் :

"தெரித்த கணையால் திரிபுர மூன்றுஞ் செந்தீயின் மூழ்க
எரித்த இறைவன் இமையவர் கோமான் இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே."

சிவனுடைய விளையாட்டுகள் அளவற்றன. நாமும் விளையாடுகிறோம். யாராவது எதற்காவது பயப்படுவார்களானல் அதனை அவர்களுக்குக் காட்டி அவர்கள் பயப்படக்கண்டு நாம் சிரிப்போம். சிலருக்குத் தேள் என்றுல் அதிக பயமாக இருக்கும். செத்த தேளைக் கண்டால் கூட ஓவென்று கத்துவார்கள். அது நமக்கு விளையாட்டாக இருக்கும். எங்காவது தேளை அடித்தால் அதை அவர்கள் முன்னல் தூக்கிச் சென்று பயம் காட்டி நாம் சிரிப்போம். அல்லது தலையில் முக்காடு போட்டுக் கொண்டு பூச்சாண்டி என்று குழந்தைகளைப் பயம் காட்டிச் சிரிப்போம். அஃது ஒரு பெரிய கேலிக் கூத்தாக இருக்கும். அது போல் சிவபெருமானும் உமையம்மையிடம் கேலிகள் செய்வார். ஓர் அமயம் தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானை ஒன்று சிவன் மேல் பாய்ந்து வந்தது. அதைச் சிவ பெருமான் கொன்று அதன் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்துக் கொண்டார். அது கண்டு உமையம்மை நடுநடுங்கிப் போனுர். தேவியின் பயம் சிவனுக்குச் சிரிப்பை மூட்டியது. மேலும் விளையாடக் கருதி, ஒரு பயிரவ வேடத்தைப் போட்டுக் கொண்டு, கையிலே ஒளி விடும்படியான திரிசூலப் படையைத் தாங்கி, உடுக்கையை டமடம வென்று அடித்துக் கொண்டு, யானைத் தோலால் தம்மை மூடிக்கொண்டு பூச்சாண்டி காட்டினுராம். உமாதேவியார் கோ வென்று கதறிவிட்டார். அதைக்கண்டு

சிவபெருமான் சிரித்தாராம். எவ்வளவு விளையாட்டு நிரம்பிய கடவுள் நம்முடைய இறைவன் பாருங்கள்:

"விரித்தபல் கதிர்கொள்சூலம்
வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால
பயிரவ னாகி வேழம்
உரித்துமை யஞ்சக் கண்டு
ஒண்டிரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே."

இறைவர் தமது ஒள்ளிய அழகிய இரத்தினம் போற் சிவந்த வாயைத் திறந்து கடகட வென்று சிரித்தருளினராம்.

ஆனால் அவர் வெறும் விளையாட்டுப் பிள்ளை என்று நினைத்துவிடக் கூடாது. வேதங்களை யெல்லாம் அவருடைய ஒண் திருமணிவாய் ஓதிக்கொண்டே யிருக்கும். அவர் அதிகம் படித்தவர். சிவபெருமானின் அம்மையப்பர் திருவடிவத்திலே இடப்பாதி அம்மையின் திருவுருவம். வலப்பாதி அப்பனின் வடிவம். வலப்பக்கத்து அப்பனின் வாய் வேதகீதம் பாடுவதைக் கண்டு, தம் கணவர் இவ்வளவு கல்வி கற்றிருக்கிறரே என்று பெருமை கொண்டு உமாதேவியார் புன்முறுவல் பூத்து மகிழ்வாராம். அதை, 'மெல்ல நகுமால்' என்று அப்பரடிகள் குறித்துப் பாடுகிறர்:

"புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர் காது
சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேதகீத மொருபாடு மோத
வொருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாக
மாதர் குழல்பாகமாக வருவர்
இது இவர் வண்ண வண்ணம் இவள் வண்ண வண்ணம்
எழில் வண்ண வண்ணம் இயல்பே."

பிறரை ஏமாற்றிப் பிழைக்கின்ற வஞ்சர்கள் கரவாடும் வன்னெஞ்சர்கள் போலிப் பத்தர்களாகவும் மாறுவார்கள். உலகின் கண்ணிலே மண்ணைத் தூவுவதற்காச் சிவபூசை செய்வது போல் மலரைத் தூவுவார்கள், நீரைக் கொட்டுவார்கள். இறைவன் அவர்களைக் கண்டு நாணுகிறான். உலகையெல்லாம் ஏமாற்றினது போதாதென்று தன்னையும் ஏமாற்ற வரும் இத்தறு கண்ணர்களைக் கண்டு சிவன் சிரிக்கிறான்:

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவன் பூவுநீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே."

இவ்வுலகில் இன்பத்துள்ளும் துன்பம் இருக்கிறது. துன்பத்துள்ளும் இன்பம் இல்லாமலில்லை. இவ்வுலகம் இன்னாதது தான். அதை இனியதாக்கிக் கொள்வதே அறிவின் பயன். துன்பம் துன்பம் என்று வீண் மனக் கவலை கொள்வதெல்லாம் அறியாமையின் விளைவே யாகும். எப்பொழுதும் கவலையிலே இணங்கி நிற்பவன் பாவியே யாவான். இறைவனையும் அவன் திருவருளையும் நினைத்த மாத்திரத்தே நம் மனக்கவலை யெல்லாம் மாய்ந்து போகும், மாய்ந்து போக வேண்டும். கடவுளிடம் அன்புடையன் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் கவலைப் படுவானானால், அவன் அன்பிலே ஏதோ கோளாறு இருக்கிறது என்று தான் கொள்ள வேண்டும். 'சட்டோ நினைக்க மனத் தமுதாம் சங்கரனை' என்பது மணிவாசகம். இறைவனை நினைத்த மாத்திரத்தே நம் இன்னல்கள் எல்லாம் தீரும். மனத்திலே மகிழ்ச்சி பிறக்கும். அது நம் கவலைப் பாரத்தையும் இறக்கும். அவ்வாறும் ஒருவன் மகிழ்ச்சி யடையாது துக்கப்படுவானே யானால் அவன் அறிவில்லாதவன் என்பது தெளிவாம். அவனை ஆண்டவனும்

காப்பாற்றமாட்டான். துக்கப்படுகிறவன் இறைவன் அருளுக்குப் பாத்திரனாக முடியாது. அவன் மேன் மேலும் கவலைக்கே ஆளாவான். இதனை அப்பர் தேவாரம் தெளிவு படுத்துகிறது:

" வசார னுயிரை வவ்வக் சண்மலர் கொண்டு போற்றச்
சக்கரங் கொடுப்பர் போலுந் தானவர் தலைவர் போலும்
துக்கபா மூடர் தம்மைத் துயரிலே வீழ்ப்பர் போலும்
அக்கரை யார்ப்பர் போலும் ஆவடு துறைய னாரே."

கடவுள் இல்லையென்று கருதுபவர்களும், கடவுளின் உண்மையில் ஐயப்பாடு கொண்டவர்களும், புறத்தே எங்கோ ஒரு மூலையில் கடவுள் ஒதுங்கியிருப்பதாக நினைக்கின்றவர்களும் கடவுள் காண மாட்டார் என்று நினைத்துத் தீவினைகளைச் செய்து வருகிறார்கள். இவர்கள் எண்ணிக்கை கணக்கில் அடங்காது. அதிலும் பலர் உண்மையடியார்கள் போல் நடித்து உலகை ஏமாற்றி வருகின்றார்கள். கருத்திலே கரவடமும் கழுத்திலே தாழ்வடமும் பூண்டு கயவர்களாய்த் திரிகின்றார்கள். இவர்களின் கள்ளத்தனத்தையெல்லாம் எள்ளத்தனையும் ஒழியாமல் . கடவுள் உள்ளிருந்தே உடனுக்குடன் உற்றறிந்து வருகிறான் அல்லவா? ஒரு தந்தை வெளியே செல்லும்பொழுது, மகனை விளித்து, "மகனே! நான் வரும்வரை இந்தக் குதிலைத் திறந்து நீ பார்க்கக்கூடாது. நீ திறந்தால் அஃது எனக்கு எப்படியும் தெரிந்துவிடும். இஃது என் ஆணை" என்று சொல்லிவிட்டுப் போனான். தந்தை போனபின், எப்படியாவது குதிலைத் திறந்து பார்த்துவிட வேண்டும் என்று மகனுக்கு உள்ளம் கிடந்து துடித்தது. தந்தை அவ்விடம் இல்லாததால், அவன் திரும்பி வருவதற்குள் திறந்து பார்த்துவிடலாம் என்று பையன் நினைத்தான். தந்தை வருகிறானா என்று நெடுந் தொலை வரையில் கண்களைச் செலுத்தித் துருவிப் பார்த்தான். தந்தை வரவில்லை. உடனே சட்டென்று குதிலைத்

திறந்து பார்த்தான். குதிலுக்குள்ளிருந்து தந்தை வெளியே வந்தான். மகனுக்கு எப்படி இருக்கும்? தந்தையிடமிருந்து ஒளிக்க முடிந்ததா? பையனும் சிரித்தான், தந்தையும் சிரித்தான். களவுங்கையுமாய்ப் பையன் பிடிபட்டான் அல்லவா? இதுபோல் அகத்தே கள்ளம் பொதிந்து புறத்தே வஞ்சித்தொழுகும் மதியிலிகளையும் வஞ்சித்துக் கொண்டல்லவா கடவுள் மனத்தகத்தே உறைகின்றான்! தாய்க்கும் ஒளித்த சூலுண்டோ? கடவுளையும் ஒளித்து ஓர் எண்ணம் உண்டோ? ஒவ்வோர் எண்ணமும் உள்ளத்தில் தோன்றும் பொழுதே இறைவன் அதனை ஆய்ந்து சோதனை நடத்திக்கொண்டிருக்கிறான். அவனை ஏமாற்றிவிட்டதாகப் போலித் தொண்டர்கள் பொய்ந் நடை போடுவதைக் கண்டு அப்பர் சிரியடா சிரியென்று சிரித்தார். கடவுளை உடம்பில் மனத்தினுள்ளேயே வைத்துக் கொண்டு உலகமெல்லாம் சுற்றித் தேடுவது ஒக்கலில் பிள்ளையை வைத்துக்கொண்டு ஊரெல்லாந் தேடுவது போன்ற பேதைமையல்லவா? அப்பர் விலா ஒடிந்து போகும் அளவிற்குச் சிரித்தார் (*Side-Splitting laughter*). அவர் அன்று சிரித்த சிரிப்பு நாத்திகர்களையும் போலி ஆத்திகர்களையும் என்றும் நின்று சிரிக்கும் நீண்ட சிரிப்பாகும். ஒன்றை நினைக்கும்பொழுது ஒன்றை மறந்துவிடும் சிற்றறிவுடைய மனிதன், ஒருபொழுதும் வாழ்வது நிலையில்லாத மனிதன், ஒரு நெல் வாலூன்ற வருந்தும் உடம்பையுடைய மனிதன், தன் இறப்பையும் பிறப்பையும் கட்டுப்படுத்த இயலாத மனிதன், ஐம்புல நுகர்ச்சிக்கு இரையாகிச் சாகின்ற மனிதன்—கடவுளே இல்லையென்று கூறுவதும், தன் உள்ளேயே உள்ள கடவுளைக் காணமாட்டாத குருடனாய்த் திரிவதும் பெருஞ்சிரிப்புக்கு இடமாகும் அல்லவா? இதைவிடக் கேலி வேறு இல்லை.

இதுவே நகைச்சுவையின் (ஆசியத்தின்) உயர்வெல்லை என்று சிரிக்கிறார் திருநாவுக்கரசர்.

"கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்
காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளிய னாகி நின்று
தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற் றெல்லா
முடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும்
விலாவிறச் சிரித்திட் டேனே."

திருநாவுக்கரசர் நல்ல நகைச்சுவையுள்ளம் படைத்தவர். அவர் ஒருநாள் திருவொற்றியூருக்குச் சென்றார். எங்குப் பார்த்தாலும் வண்டுகள் ரீங்காரம் செய்து வளமைகொழிக்கச் செழித்துத் தோன்றியது அவ்வூர். சுற்றிலும் இளமரக்காவும் சோலைகளும் பூத்துக் குலுங்கிக் காய்த்துக் கனிந்தன. "ஆகா! இத்தனை அழகான ஊரை இறைவன் பிறரிடம் ஒற்றி வைத்துவிட்டாரே! அதனால் இஃது ஒற்றியூர் எனப் பெயர்பெற்றது போலும்!" என்று வருந்தினார் அப்பர். ஒரு நல்ல சொத்தாய் இருந்தால், முதலில் ஒற்றிக்குப் பணம் கொடுப்பதுபோல் அந்தச் சொத்தின்மேல் கடன் கொடுத்துப் பின் சிலகாலம் கழித்து, வட்டிக்கும் முதலுக்குமாகச் சேர்த்து அந்தச் சொத்தையே விலைக்கு வாங்கிவிடுவது உலக வழக்கம். இதை மனத்தில் வைத்துக்கொண்டு அப்பர் ஒற்றியூர் இறைவனிடம் நகைச்சுவை தோன்ற ஒரு வேண்டுகோள் விடுக்கிறார். "இறைவா! இவ்வூரின் செழிப்பைக் கண்டால் எவனும் ஒட்டிக்கு இரட்டிப்பான பணம் கொடுத்து ஊரையே விலைக்கு வாங்கிவிடுவான். பிறகு நீர் ஓட்டாண்டியாய் ஓடவேண்டியதுதான். இப்போதே இதனை ஒற்றிக்குப் பிறரிடம் விட்டுவைத்திருக்கிறீர். மேலும் ஊதியம் கிடைக்கும் என்று நினைத்து விற்றுத்

தொலைத்துவிடக் கூடாது. இது போனால் வராது. இந்த ஊருக்கு இணையாக வேறு எந்த ஊரையும் சொல்ல முடியாது. இதுபோல் வேறு கிடைக்காது. இதையும் ஏமாந்து கொடுத்துவிட்டுப் பிறகு நீர் விழிக்காதீர். இப்பொழுதே முன்னெச்சரிக்கையாய்ச் சொல்லிவைத்தேன்" என்று பொருள்படப் பாடியருளிய பாடல் வருமாறு :

"சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந்
துதைந்திலங்கு
பெற்றிகண் டால்மற் றியாவருங் கொள்வர் பிறரிடைநீ
ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட்
டுறுமென்றெண்ணி
விற்றிகண் டாய்மற் றிதுவொப்ப தில்லிடம்
வேதியனே."

ஓர் ஊதாரிப் பையனை நோக்கி ஒரு பெரியவர் அறவுரை பகர்வதுபோல், இங்கு அப்பர் இறைவனிடம் பேசுவது வேடிக்கையாகும். திருவொற்றியூரின் வளப்பத்தையும் திருவையும் சிறப்பித்துப் பாடுவதே கருத்து. உண்மையில் இறைவன் அவ்வூரை எவருக்கும் விற்கப்போவதில்லை, எவரும் விலைக்கு வாங்கப்போவதுமில்லை. ஒற்றியூர் என்ற பெயரை வைத்துக்கொண்டு அப்பர் நகைதோன்ற இப்பாடலைப் பாடினாரே தவிர வேறில்லை என்பதை நாம் எளிதில் அறியலாம். இதுபோன்ற பல பாடல்கள் அப்பர் தேவாரத்தில் உள்ளன.

என்றும் சிரியாதவன் ஒன்றும் புரியாதவன். சிரிப்பு நமக்கு இறைவன் தந்த செல்வம். அது நமது ஆற்றல். சிரிப்புத் தானாக வராது. அதை நாம் உண்டாக்க வேண்டும், வரவழைக்க வேண்டும். எத்தனையோ இன்பங்களை இறைவன் நமக்கு இவ்வுலகில் அமைத்திருக்கின்றான். அவை காசு பணத்தால் வருபவை அல்ல. அவை நம் அறிவினால் பெறக்கூடியவை. அவற்றைக் கண்டு, பெற்று, நுகர்ந்து நாம் மகிழவேண்டும், சிரிக்க

வேண்டும். மகிழ்ச்சிகரமான மனப்பான்மையை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும். வறண்ட பாலைவனமாக நம் மனத்தைப் பாழடித்துவிடக் கூடாது. செல்வத்தைப் பெருக்கப் பல வாயில்கள் இருப்பதுபோல் சிரிப்பைப் பயில்வதற்கும் பல வாயில்கள் இருக்கின்றன. அவற்றை நாம் திறந்துவைத்து நன்கு வாழப் பயிலுதல் வேண்டும். ஒவ்வொருவனும் சிரித்துமகிழ எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. தனக்குள்ள நற்பேறுகளையும் நலங்களையும் நினைத்துப் பாராமல் தன் குறைகளையே எண்ணி வருந்திக் கொண்டிருந்தால் வாழ்க்கை ஒருநாளும் வளம் பெறாது. அறியாமையால் வீணாக அவலக் குழியில் விழுவார்கள். தன் நிலைமைக்குச் சிரித்து மகிழ்ந்து இறைவனுக்கு நன்றி செலுத்தாமல் ஆண்டவனுக்கு ஓர் இழுக்கையும் தேடித்தந்து விடலாகாது. எத்தகைய எளிய பொருட்கண்ணும் அழகைக் கண்டு இன்பம் கொண்டு துன்பம் விண்டு சிரித்து மகிழ்வதுதான் அறிவு பெற்றதன் பயன்.

திருநாவுக்கரசர் நல்ல நகைச்சுவையுள்ளவர். ஒருநாள் அவர் திருவாரூருக்குச் சென்றார். கோயிலுட் சென்று இறைவனை வணங்கிவிட்டு வெளியே வந்து, தெருவழியே சென்று கொண்டிருந்தார். அவர் காதில் ‘ஆரூரா! ஆரூரா!’ என்று கூக்குரல் கேட்டது. அஃது ‘ஆரூராய்? ஆர் ஊரில் உள்ளாய்?’ என்று கேட்டுப் புலம்புவதுபோல் அப்பருக்குத் தோன்றியது. யார் அப்படிக் கூப்பிடுவது என்று அப்பர் நோக்கினார். வேறு யாரும் இல்லை, திருமாலும் பிரமனுமே அவ்வாறு இறைவனைக் கூவித் தேடிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் ஏன் கோயிலுட் சென்று இறைவனைக் காணாது தெருவிற் கிடந்து திண்டாடுகிறார்கள் என்று எண்ணினார். அவர்கள் ‘ஆரூரா’ என்பது “இறைவன் யாருடைய ஊரில்

இருக்கிருன்? எந்த ஊரில் இருக்கிருன்? எங்கே இருக்கிருன்'' என்று கேட்பது போன்றிருந்தது. அப்பருக்கு உடனே சிரிப்பு வந்து விட்டது. அவரும் உடனே இறைவனை நோக்கி "நீ ஆரூராயே'' என்று இருபொருள் படப் பாடினுர். அஃதாவது "இறைவனே! திருமாலும் நான்முகனும் 'ஆரூராய்? ஆரூராய்?' என்று உன்னை வினவுகின்ருர்கள். நீ ஆரூராயே? நீ யார் ஊரில் இருக்கிருய்?-நீ ஆரூராயே?-நீ திருவாரூரிலேயே இருக்கிருய்'' என்று வினவையும் விடையையும் ஒரு சொல்லிலேயே அடக்கி வேடிக்கை தோன்றப் பாடியுள்ளார்:

"நீரூருஞ் செஞ்சடையாய் நெற்றிக் கண்ணுய்
நிலாத் திங்கள் துண்டத்தாய் நின்னைத் தேடி
ஓரூரும் ஒழியாமே ஒற்றித் தெங்கும்
உலகமெலாந் திரிந்து நின்னைக் காண்பான்
தேரூரு நெடுவீதி பற்றி நின்று
திருமாலும் நான்முகனுந் தேர்ந்தும் காணுது
ஆரூரா ஆரூரா என்கின் ருர்கள்
அமரர்கள்தம் பெருமானே யாரூ ராயே."

திருமாலும் நான்முகனும் ஓர் ஊரும் விடாமல் உலகமெல்லாம் நன்ருகத் துருவித் தேடி விட்டுத்தான், திருவாரூர்த் திருவீதியில் நின்று "ஆரூரா!'' என்று ஓலமிட்டார்களாம். அண்டசராசரங்களெல்லாம் நீக்கமற நிறைந்து, ஓரூர் என்றில்லாமல் எவ்வூரையும் தன் சொந்த ஊராகக் கொண்டு இலங்கும் இறைவனை "ஆரூரா? ஆரூரா?'' என்று இவர்கள் தேடுகின்ருர்கள் என்ருல் சிரிப்பு வராதா? இது போன்று எளிதில் நகைச்சுவை தோன்றப் பாடவல்லவர் அப்பர் சுவாமிகள்.

இவ்வாறு மாலும் பிரமனும் சிவனுடைய அடிமுடியை இன்னும் காணுது திண்டாடுவது அப்பருக்கு வேடிக்கையாகவே இருந்தது. முதல் தேவர்கள் என்று சொல்லிக்

கொள்ளும் இவர்களால் சிவன் திருவடியைக் காண முடிய வில்லை என்ருல் என் சொல்வது ? கூற்றுவன் கூட மார்க் கண்டன்மேல் பாசக் கயிற்றை வீசிய அக்கணமே சிவன் திருவடியைக் கண்டு கொண்டானே, அப்படியாவது இவர் கள் ஏதேனும் செய்யக் கூடாதா என்பது போன்று நகை தோன்றவும் பாடியுள்ளார் :

'மேலு மறிந்தில னுன்முகன் மேற்சென்று கீழிடந்து
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடு செய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்த சிந்தைக்
காலன் அறிந்தான் அறிதற் கரியான் கழலடியே.''

கூற்றுவனைப் போற் செய்யும் ஆற்றல் இவர்களுக்கு இல்லாவிடினும், இராவணனையாவது பின்பற்றியிருக்கக் கூடாதா ? அவனுவது கயிலை மலையை அசைத்தவுடன் சிவன் திருவடி எப்படியிருக்கும் என்று கண்டு கொண் டான். அழுங்கி அலறி அலமந்த அவ்வரக்கனுக்கும் இரக்கம் காட்டி ஆனந்த அருளைப் புரிந்தான் புரம் எரித்த விரிசடையோன். அந்தச் சிறப்புக் கூடத் தங்களுக்குக் கிடைக்கும்படியான ஞானம் கிட்டாமல் பறவையும், பன்றி யுமாய் இழிவெய்தி இடர்ப்பட்டார்களே என்று பகடி பண் ணியும் அப்பர் பாடினுர் :

"ஏனமா யிடந்த மாலும் எழில்தரு முளரியானும்
ஞானந்தா னுடைய ராகி நன்மையை யறிய மாட்டார்
சேனந்தா விலா வரக்கன் செழுவரை யெடுக்க வூன்றி
ஆனந்த வருள்கள் செய்தார் அவளிவ ணல்லூ ராரே.''

இங்கு அறிஞர்கள் ஊன்றிச் சிந்திக்க வேண்டியது ஒன்று உண்டு. கீழ்மையான இராவணனுக்குக்கூடச் சிவனது ஆனந்த அருள் கிடைத்தது. அது திருமா லுக்குக் கிடைத்திலது என்று வருந்தியே அப்பர் இவ்வாறு பாடியுள்ளார். திருமால் இராமனுக அவதரித்து இராவணனைக் கொன்ருெழித்த கதையும் அப்பருக்குத்

தெரியும். அறத்தின் நாயகனுய் அவதரித்த இராமனை யாவரும் போற்றுகிருேம். அப்பரும் போற்றியுள்ளார். ஆயினும், சிவன் செயலை நோக்க இராமனின் செயல் எத்தகையது என்பதை ஒரு பாடலில் அப்பரடிகள் சிறிது நகைச் சுவை தோன்றப் பாடியுள்ளார். அது வேடிக்கை யாகப் படித்து, இலக்கியச் சுவையை நுகர்ந்து அந்த மட்டில் மகிழ்ந்து அமையவேண்டிய முறையில் அமைந் துள்ளது. முதலில் அப்பாடலைக் காண்போம் :

“ செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ்
சேதுபந் தனஞ் செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலால் இறையே ஊன்றி
அடர்த்தவற்கே அருள்புரிந்த அடிகள் இந்நாள்
வங்கமலி கடல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி ஞரே!”

தனது அடியவனுய் இருந்து செய்த தவற்றுக்காகச் சபிக்கப் பெற்று, அரக்கனுய்ப் பிறந்தவன் இராவணன். அவன் நன்றி கொன்று அறந்தின்று மறம்பெருக்கித் தலை தருக்கித் திரிந்தான். அவனை அடக்கி மீட்க எண்ணிஞர் திருமால்; பாற்கடலிற் படுத்தபடியே பங்கயக் கண்களைப் பரப்பி விழித்தார். அவருக்குக் கோபம் வந்தது. அதனுல் கண்கள் சிவந்தனவாம். அதனை அப்பர் ‘செங்கண்மால்’ என்று குறிப்பிடுகிருர். முன்ஞெருகால் சிவபெருமான் கண்ணை விழித்துக் காமனைச் சினந்தார். அவன் சாம்ப லாகி விட்டான். ஆனுல் திருமால் சினந்ததால் அவர் கண்கள் சிவந்தனவே யொழிய இராவணன் பொடியாக வில்லை. உடனே, திருமால் திருப்பாற் கடலைவிட்டு மண்ணிலே வந்து இராமனுக அவதரித்தார். அவ்வாறு தெய்வத் தன்மையை விட்டு மனிதனுக வந்து இறங்கியும் கூட இராவணன் அடங்கவில்லை. அவர் கையிலுள்ள

சக்கரமும் உதவவில்லை. சிவன் படைத்துக் கொடுத்த சக்கரம் சிவனடியான் மேற் செல்லாது என்று வில்லைக் கையிற் கொண்டு விசுவாமித்திரன் பின்சென்று வில் வித்தை பயின்றார். இதனை, 'சிலை பிடித்து' என்று அப்பர் கூறியதால் அறியலாம். திருமால் இராமனாக வந்து கையில் வில்லேந்திய பின்னாவது இராவணன் பணிந் திருக்கலாம். இவன் அதற்கும் அஞ்சியடங்கவில்லை. சீதை யைச் சிறையெடுத்துச் சென்று விட்டான். அதனால் திருமால் கால் கடுக்கக் காடு நடந்து மனையாளைப் பிரிந்து குரங்குப் படைகளைத் திரட்டினாராம். இதனை அப்பர் 'சேனையோடும்' என்று குறித்தார். இவ்வாறு சேனை திரண்ட பிறகும் இராவணன் ஒடுங்கவில்லை. கடலும் ஒதுங்கவில்லை. ஆகவே திருமால் அணைகட்டினா ராம். இதனை அப்பர் அடிகள் 'சேது பந்தனம் செய்து' என்று சுட்டுகிறார். அதனைக் கட்டியபின்பாவது அடங் கினானா அரக்கன்? இல்லை. அதனால் திருமால் இலங் கைக்குச் சென்று கோட்டை வாயிலுக்குட் புகுந்தாராம். இதனை அப்பர் 'சென்று புக்கு' என்ற இரண்டு சொற் களாற் குறிப்பிடுகிறார். இவ்வாறு எதிரே வந்துங் கூட இராவணனை அடக்க முடியவில்லை. அவன் கோட்டைக் குள் பதுங்கிக் கொண்டான். திருமால் பலநாள் போர் புரிய நேர்ந்ததாம். இதனை அப்பர் 'பொங்கு போர்பல செய்து' என்றார்.

இராமனுக்கும் இராவணனுக்கும் நடந்த போர் பதினெட்டு மாதம் நடந்ததாம். தேவாசுரப் போர் பதினெட்டு ஆண்டிலும், இலங்கைப்போர் பதினெட்டு மாதத்திலும், பாரதப்போர் பதினெட்டு நாளிலும் செங்குட் டுவன் கனக விசயருடன் செய்த குயிலாலுவப் போர் பதி னெட்டு நாழிகையிலும் முடிந்ததாக இளங்கோ அடிகள் கூறியுள்ளார். இதனை,

"உயிர்த்தொகை யுண்ட வொன்பதிற் றிரட்டியென்
றியாண்டும் மதியும் நாளுங் கடிகையும்
ஈண்டுநீர் ஞாலங் கூட்டி யெண் கொள"

என்ற சிலப்பதிகாரம் நீர்ப்படைக் காதை அடிகளாலும் அவற்றுக் கெழுந்த அரும்பதவுரையாலும் அறியலாம்.

இவ்வாறு, பதினெட்டு மாதங்கள் போர் நடந்தும், போரின் வலிமையால் மட்டும் திருமால் இராவணனை வெல்ல முடியவில்லை. இதற்காக எத்தனையோ சூழ்ச்சிகள் மந்திராலோசனைகள் எல்லாம் செய்ய வேண்டியிருந்தன. பலருடைய உதவிகளைப் பெறவேண்டியதாயிற்று. சுக்கிரீவன் உதவியுடன் குரங்குப் படை திரட்ட வாலியை மறைந்து கொல்ல வேண்டியிருந்தது. கண்ணீர் பல வடிக்க நேர்ந்தது. கடலையும் தஞ்சம் புகுந்து பாடு கிடக்க வேண்டியிருந்தது. எதிரிகளிடமிருந்து பலரைப் பிரித்துத் தமது பக்கம் இழுக்க வேண்டியிருந்தது. வீடணன் உதவி பெரிதும் தேவைப்பட்டது. உளவறிந்து ஒற்றுட வேண்டியிருந்தது. அனுமன் மருத்து மலையைச் சுமக்க வேண்டியிருந்தது. கருடன் வந்து நாகபாசத்தை களைய வேண்டியிருந்தது. இத்தனையையும் குறிக்க அப்பர் ஒரே ஒரு சொல்லைக் கையாளுகிறார். 'புகலால் வென்ற' என்கிறார். 'புகல்' என்ற சொல், தஞ்சம், சூழ்ச்சி இவற்றைக் குறிக்கும். சூழ்ச்சி செய்தும் வென்ற வெற்றி உண்மையான வெற்றியாகுமா? அஃது உள்ளீடு இல்லாத புகலான வெற்றிதானே? அப்படி வென்றும் இராவணனைத் திருமாலால் அடக்க முடிந்ததா? இல்லை. ஆகவே திருமால் இராவணனைக் கொன்றுவிட்டார்.

இவ்வாறு நிகழ்ந்த திருமால் சேவகம் ஒரு புறமிருக்க, சிவன் சேவகம் எப்படிப்பட்டது? போர் புரிய மனமில்லாது ஒதுங்கிப் பதுங்கி இருந்த இராவணனைப் போர்க் கோலம் கட்டி வலிதில் தேடிக்

கொண்டு சென்று பெரிது முயன்று அரிதில் கொன்ருர் திருமால். ஆனல் அதே இராவணன் சிவனேடு நேரில் போருக்கு வந்தான். அவன் அப்படி வந்த இடந்தான் கயிலேமலே. அரக்கன், வந்து இடந்தான் கயிலேயை. இதனே அப்பர் 'போரரக்கன்' என்று குறிப் பிடுகிருர். அங்ஙனம் வந்து மலேயைத் தூக்க முயன்ற இராவணனேச் சிவபெருமான் இருந்த இடம் பெயராமல், மனேவியை விட்டுப் பெயராமல், கவலே கொண்டு வாடாமல், உதவி எதுவும் எடாமல், ஆயுதம் கையில் தொடாமல் அவதாரம் எதுவும் எடுக்காமல் அம்பை வில்லில் மடுக்காமல், தமது காலின் ஒரு விரல் நுனி யால் இருந்தபடியே ஊன்றினுராம். அங்ஙனம் ஊன்றிய மாத்திரத்தில் அவன் பத்துத் தலேகளும் பொடியாய் உதிரும்படி மலேயின் அடியில் அகப்பட்டு நசுங்கினுனும். இதனே அப்பர், 'நெடுமுடிகள் பொடியாய் வீழ அங்கொரு தன் திருவிரலால் ஊன்றி' என்ருர். அவன் முற்றிலும் சிதைந்து உயிரிழந்து விடக்கூடாது என்ற பெருங்கருணேயால், கால்விரலே மெதுவாக ஊன்றினுராம். இதனே 'இறையே ஊன்றி' என்று அப்பர் குறிப்பிடு கிருர். கொஞ்சம் வலிதாக அழுத்தி மிதித்திருந்தால், இராவணன் உயிரையே இழந்திருப்பான். இதனே இன்னெரு பாடலில் அப்பர் எவ்வாறு கூறுகிருர், பாருங்கள்:

"கருத்தனுய்க் கண்சிவந்து கயிலேநன் மலேயைக் கையால்
எருத்தன யெடுத்த வாறே யேந்திழை யஞ்ச ஈசன்
திருத்தனுய் நின்றதேவன் திருவிரல் ஊன்ற
வீழ்ந்தான்
வருத்துவான் ஊன்றி ஞனேல் மறித்துநோக் கில்லே
யன்றே."

சிவபெருமான் அரக்கனேத் திருத்த வேண்டுமென்று நினேத்தாரே தவிர, அழிக்க வேண்டுமென்று நினேக்க

வில்லை. கொன்று விடுவது மிக எளிது. அவனை அடக்கித் திருத்தி அறிவு கொளுத்தி நல்வழிப்படுத்தி, அருளை நல்குவது மிகச் சிறந்த அரிய செயல். தனக்கு இன்னா செய்தவனுக்கும் இனியவை செய்வது இறைமைக் குணம். ஆகவே சிவபெருமான் இராவணனுக்கு அருள் புரிந்தாராம். இதனை 'அடர்த்து அவற்கே அருள் புரிந்த அடிகள்' என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு சுவைபல மல்க, சொற்சுவை பொருட்சுவையோடு கருத்தாழம் கொண்ட பாடல்களைப் பாட வல்லவர் திருநாவுக்கரசர். இதனால் "சொற்குறுதிக்கு அப்பர் எனச்சொல்" என்று ஆன்றோர் கூறுவர்.

இப்பொழுது மேலே குறித்த திருத்தாண்டகப் பாடலை மீண்டும் ஒருமுறை படித்துப் பாருங்கள்: வற்றாத இன்ப ஊற்றாகச் சுவைகள் பல சுரந்து கொண்டேயிருக்கும், பாடிக் கொண்டே இருக்கலாம்:

"செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ்
சேதுபந் தனஞ்செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலால் இறையே ஊன்றி
அடர்த்தவற்கே அருள்புரிந்த அடிகள் இந்நாள்
வங்கமலி கடல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே."

# பாவைச் சிரிப்பு

அரமுழக்கும் சிவநாம வாழ்த்தொலியும் விண்ணைப் பிளந்தன. விண்ணவரும் கண்ணைத் திறந்தனர். மார்கழி பிறந்து விட்டது. நமக்கு ஓர் ஆண்டு, தேவர்களுக்கு ஒரு நாள். இருள் நீங்கி ஒளிஓங்கும் அமயம். நம் இன்னலின் இடிவும், மருளின்மடிவும், துன்பத்தின் முடிவும் இன்பத்தின் விடிவும் மார்கழியில் அமைந்துள்ளன. அழிப்பு ஒழிந்து விழிப்பு எழூம் வேளை. அம்பலக் கூத்தன் ஆடல் புரிந்து அடியார்களுக்கு ஆனந்த அருள்புரியும் ஆதிரை நாளும், கூதிர்ப்பனியொடு, மார்கழியிலேயே மலர்கின்றது. பத்தி பத்தியாய் சத்திகள் எழுந்து முத்தி முதல்வனின் பணிகளில் முனைவர். கன்னிப் பெண்கள் வைகறைத் துயிலெழுந்து, ஒருவரை யொருவர் அழைத்துச் சென்று நீராடி, சத்தியோடு கூடிய சிவனை வழிபடும் காலமும் மார்கழியே யாகும். இதனை அம்பாவாடல் என்பர். இதனைப் பாடும் பாடல்கள் பாவைப் பாட்டு எனப்படும். பாவைப்பாடல்களுள், மாணிக்க வாசகர் பாடிய திருவெம்பாவையும் ஆண்டாள் பாடிய திருப்பாவையும் சிறந்தன. மார்கழி விடியலில் சீதப்புனலாடி அவற்றை ஓதுதல் வேண்டும். அவ்விதம் வழிபட்டால், உடல் உறுதிபெறும், உள்ளம் உரம்பெறும், அறிவு ஆற்றல் பெறும், ஆன்மா அருள் பெறும். திருவாசகம் ஒரு மலர் என்றால், திருவெம்பாவை அதில் விளைந்த செந்தேன். அது பொங்கிப் பொழிவதால் திருவாசகம் முழுவதுமே தேனாகி விடுகிறது. இதை மாணிக்கவாசகர் தேமதுரத் தமிழில் தித்திக்கப் பாடுகிறார்; சித்தம் அழகியராய்ச் சிரித்து விளையாடுகிறார்.

ஆ! இஃது என்ன, கல்லென்ற ஒலி கேட்கின்றது? ஏன் இந்தக் கலகலப்பும் சலசலப்பும்? கொல்லென்றும் சிரிக்கின்றனர்! காதார் குழையாடப் பைபூண் கலனாடக் கோதை குழலாட வண்டின் குழாம் ஆடச் சிவனது பேர்பாடிச் சிரித்து விளையாடும் சிறுமியர் இவர் யார்? இவர்களே பாவைப் பெண்கள். ஆ! இவர்களின் களிப்பும் விளையாட்டும், சிரிப்பும் சீராட்டும், ஏசலும் எக்காளமும் அமர்க்களமாய் இருக்கிறதே! என்ன விளையாட்டு? ஆம், இது பாவை விளையாட்டு! இறைவன் நம்மை ஆட்கொண்டருளும் விளையாட்டு. இவ்வானும் குவலயமும் எல்லாமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடும் விளையாடியாகத்தான் தில்லைச் சிற்றம் பலவனும் விளங்குகிறான். அதுபோல், அவன் அடியார் களாகிய இப்பெண்களும் இன்ப விளையாட்டில் மிதந்து செல்கிறார்கள். விடியற்பொழுதிலே வீடுவீடாகத் தோழி மார்களைத் துயில் எழுப்பிக் கூட்டிக் கொண்டு மார்கழி நீராடப் புறப்படுகிறார்கள். அவர்கள் செல்லும் வழியில், ஒரு பெண் தன்வீட்டில் படுக்கையில் தூங்கிக் கொண் டிருக்கிறாள். அவள் தன் தோழிகளோடு பேசும்பொழு தெல்லாம், 'இரவும் பகலும் எப்போதும் தனக்கு ஈசனி டத்திலே தான் பிரியம்' என்று சொல்லுவாள். ஆனால் இப்பொழுதோ வெளியில் பெண்கள் பாடி வருகிற சிவநாமத்தைச் கூடக் கேளாமல், உறக்கத்தில் ஈடுபட்டிருக்கிறாள். அவளைத் தோழிமார் கேலி பண்ணி எழுப்புகிறார்கள். "நேரிழையாய்! ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியினிடத்தில் தான் இரவும் பகலும் எனக்குப் பாசம் என்று எப்போதும் எங்களிடத்தில் சொல்லிக் கொண்டிருப்பாயே, இப்பொழுது உன் பாசமெல்லாம் எங்கே போய் விட்டது? மலர்ப்படுக்கைக்கு மாறிவிட்டதோ" என்று நகைத்தனர்.

அதற்கு அவள், "சீச்சி! இஃது என்னடி கேலிப் பேச்சு உங்களுக்கு? ஏசி விளையாடுவதற்கும் நையாண்டி செய்வதற்கும் இதுவா நேரம்? இதுவா இடம்?" என்று கண்டித்துப் பேசினாள். சிவனுக்குப் பக்தி செய்ய வேண்டிய நேரத்தில் விளையாடலாமா என்று கேட்பது போன்றிருந்தது அவள் பேச்சு. இவ்வளவு நேரம் தூங்கிக் கொண்டிருந்தவள் எழுப்பியவுடன் இப்படிப் பேசினால் யாருக்குத்தான் சிரிப்பு வராது? இது கேலிக்கு இடமாகத் தானே இருக்கும்! அதைக் கேட்ட மற்றப் பெண்கள், "ஆகா! எவ்வளவு பக்தி இவளுக்கு, பார்த் தாயா! இது படுத்து உறங்கும் பயபக்தி போலிருக் கிறது! தேவர்களுக்கு அன்றி, நமக்கு என்று வலிய வந்து திருவடிகளை வழங்குகின்ற ஈசனுக்கு உரிய அன்பு எங்கே? நாம் எங்கே? அஃது எந்த மூலை, இஃது எந்த மூலை?" என்று ஏளனம் செய்தார்கள். அவ்வினிய பாடல் வருமாறு:

"பாசம் பரஞ்சோதிக்கு என்பாய் இராப்பகல் நாம்
பேசும் போது எப்போது இப் போதுஆர்
அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசி இவையும் சிலவோ விளையாடி
ஏசும் இடம் ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசு மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச் சிற்றம் பலத்துள்
ஈசனார்க்கு அன்பு ஆர்யாம் ஆர் ஏல்ஓர் எம்பாவாய்."

இரவும் பகலும் ஈசனுக்கு அன்பு செய்பவள் விடியலின் கண் இப்படி உறங்கினால் எப்படி அன்பு செய்ய முடியும் என்று கேலி செய்தவாறு இது.

அடுத்து மற்றொரு பெண்ணைச் சென்று எழுப்பு கின்றனர். "தோழி! நீ முன்னெல்லாம் நாங்கள் எழுவ தற்கு முன்னேரே முத்துப்போல் பல் விளக்கித் தூய்மை

செய்துகொண்டு வெளிப்போந்து, எல்லார்க்கும் உரிய இறைவனை உனக்கு மட்டுமே உரியவன் போல, 'என் அத்தன்! என் ஆனந்தன்! என்னுடைய அமுதன்!" என்று உருகிப் பாராட்டுவாயே. இன்று கதவைக் கூடத் திறக்காமல் அடைத்துக் கொண்டு உறங்குகின்றாயே? கதவைத் திற" என்றார்கள். தூங்கிய பெண் பெரு நாணி னளாய் வெளிவந்து கேலியாய்ப் பேசுகின்றாள். "நீவிரோ ஆண்டவனிடத்துப் பேரன்புடையீர்; யானோ அன்பில்லா தவள்; நீவிரோ ஆண்டவனுக்குப் பழமையான அடிமை யுடையீர்; யானோ புதியவள். புதிய அடியவளான என் குற்றத்தை நீக்கித் தாங்கள் என்னை அடிமை கொள்ள லாகாதா? நம் தோழமை கருதி அவ்வாறு கொண்டால் அது தீங்காகுமோ?" என்றாள். இவ்வாறு எழுப்பப் பட்டவள், இறைவனுக்குத் தொண்டு பூண்டு ஒழுகும் பரம்பரைக் குடியிற் பிறந்தும், நெடுநாள் தொண்டு செய்து வருபவளாக இருந்து, தன்னைப் புத்தடிமை என்றும் எழுப்புவோரைப் பழவடியார் என்றும், தன் புன்மையைத் தீர்த்து ஆட் கொண்டாற் பொல்லாதோ என்றும் குறிப்பாகக் கேலி செய்து குத்துவதைக் கேட்டு, எழுப்பவந்தோர், "ஓகோ! நீ புத்தடியாளா? உன் அன் புடைமை எம்மட்டோ? எங்களுக்கு யாவும் தெரியாது என்று நினைத்தாயா? எல்லாம் தெரியும்" என்றனர். அதற்கு எழுப்பப் பட்டவள், "அப்படித் தெரிந்திருந்தால் நீங்கள் என்னைக் கேலி செய்வீர்களா? நீங்கள் தூய நெஞ்சினராய், சித்தம் அழகியாராய் இருப்பின் சிவனை யல்லவா பாடவேண்டும்? அதனை விடுத்து என்னைக் கேலி செய்வீர்களா?" என்று கேட்டாள். எழுப்ப வந்தவர்கள் சலித்துக் கொண்டது போல், "ஆம், உன்னை எழுப்ப வந்ததற்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்" என்று கூறி, அவளையும் அழைத்துச் செல்வாராயினர்:

"முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்து
எதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துஉன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மை தீர்த்து ஆட்கொண்டாற்
பொல்லாதோ
எத்தோ நின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கு ஏல்ஓர் எம்பாவாய்."

இன்னொரு துயிலெழுப்பும் காட்சி. நித்திலநகை என்ற பெண், பற்கள் வெளியே தெரிய வாய் சிறிது திறந்த வண்ணம் உறங்கிக் கொண்டிருக்கிறாள். "இன்னும் உனக்கு விடியவில்லையா?" என்று தோழிகள் வந்து எழுப்புகின்றனர். அவள் படுத்த வண்ணமே, "வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்துவிட்டார் களா?" என்று கேட்கிறாள். கீச்சுக் கீச்சென்னும் பேச்சுடைய தோழிமாரின் கூச்சல் அவள் தூக்கத்தைக் கலைத்துவிட்ட நிலையில், அவர்களைக் கிளிமொழியார் என் கிறாள். 'இன்னும் வரவேண்டியவர்கள் பாக்கியிருந்தால் அவர்களையும் போய் அழைத்துக் கொண்டு வாருங்கள். அதுவரையும் நான் தூங்கிக் கொண்டிருக்கிறேன்' என்பது போன்றிருந்தது அவள் பேச்சு. 'எல்லாரும் வந்தாரோ?' என்றால் வந்தவர்களை வரிசையாய் நிறுத்தி எண்ணிக் கணக்குச் சரி பார்த்தல்லவோ சொல்ல வேண்டும்? வந்திருப்பவர்களோ எண்ணற்றவர்கள். அவர்களை யெல்லாம் எண்ணுவது என்றால், நேரம் போதாது. கண்ணைத் துயின்று கிடப்பதே காலத்தை அவமாகப் போக்குவது ஆகும். அதன் மேலும் ஆளை எண்ணிக்கொண்டிருப்பது அதைவிட மோசம்! இப்படி எண்ணவும் துயிலவும் செலவிடும் நேரத்தை இறைவன் துதிபாடுவதற்குச் செலவிடலாம். பாடிக் கசிந்து உள்ளம்

உருகி இன்பம் பெருக்கலாம். இவ்வாறு கருதிய தோழி மார், "சரிதான்! இன்னும் அது வேறு வேலே வைக்கிருயா? எங்களால் எண்ணிக் கொண்டிருக்க முடியாது. நீயே வந்து எங்களே எண்ணிப் பார்த்துக் கொள். நாங்கள் எண்ணிக்கையில் குறைந்தால் நீ மீண்டும் போய்ப் படுத்துக் கண்ணே மூடித் தூங்கலாம்" என்று கேலி செய்தனர்.

"ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றே
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணேத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக்கு ஒரு மருந்தை வேத விழுப்பொருளே
கண்ணுக்கு இனியானேப் பாடிக் கசிந்து உள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்து
எண்ணிக் குறையில் துயில் ஏல்ஓர் எம்பாவாய்."

இது போன்று சுவையுடைய தெய்வமறைத் திருப் பாடல்கள் இருபது கொண்டது திருவெம்பாவை. அவற்றைப் படித்துப் பயன்பெறுவோமாக.

# சுந்தரச் சிரிப்பு

உண்மையான் உணர்தலே மெய்யுணர்தல். மெய்யுணர்வே இருள் நீக்கி இன்பம் பயக்கும். அவ்வின்பத்தைத் தருவது தமிழ். ஆதலால் தமிழே இன்பமாவது, தமிழின் இன்பமாய், தமிழின் உயிராய், தமிழின் தமிழாய், தமிழேயாய் இலங்குபவன் இறைவன். தமிழே என்று இறைவனை அடியார்கள் அழைத்துள்ளார்கள். 'பண்ணார் இன் தமிழாய்ப் பரமாய் பரஞ்சுடரே' என்று சுந்தரர் இறைவனை விளிக்கிறார். சுந்தரர் போன்ற அடியார்களின் அருட் பாசுரங்களைப் படியாத தமிழர் தங்களுக்குக்கிடைத்த ஓர் இன்ப வாய்ப்பினை இழந்தவர்களேயாவர். சுந்தரர் செந்தமிழை இறைவன் வலிதிற் சென்று வழக்காடிப் பெற்றுக் கொண்டார். வழுக்கி வீழினும் திருப் பெயர் அல்லால் மறுமாற்றம் அறியாதவர் சுந்தரர். அவருடைய தீந்தமிழ்ப் பாடல்கள் பெறுதற்கரிய இறைவனை நமக்கு மிக நெருங்கிய தோழனாக எளிதாக்கி நம்மிடையே கொண்டு வந்து நிறுத்திவிடும்; ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய் இருக்கிற இறைவனை நம்முடைய தோழனாய் நாம் செய்யும் துரிசுகளுக்கு உடனாகும்படியும் செய்துவிடும்.

தமிழ்மொழி இறைவனோடு நெருங்கிப் பழகி அவன் உள்ளத்தைக் கவர்ந்ததற்குச் சுந்தரர் போன்ற ஞானச் செல்வர்களின் திருப்பாடல்களே காரணமாகும். இறைவனுக்கு நண்பன் என்ற முறையில் இந்த நானிலத்தில் வாழ்ந்தவர் நம்பியாரூரர். அதனால் அவர் தம்பிரான் தோழர் எனப்பட்டார். இறைவனுக்கு அருச்சனையாகச் சொற்றமிழ் பாடுவதே சுந்தரர் தொழில். வேறு எத்

தொழிலும் அவருக்குக் கிடையாது. பாடலை அருச்சனை யாக ஏற்றுக்கொள்ளும் பரமன் அவரை வலிந்து ஆட் கொண்டு தம்மைத் தமிழ் பாடும்படி பணித்திருந்தார். அவரும் அவ்வாறே பாடிக்கொண்டிருந்தார். ஆனால் உண்ணவும் உடுக்கவும் பொருள் வேண்டுமே? யார் கொடுப்பார்கள்? மனிதர்களோ மனம் இறுகியவர்கள். இம்மியும் ஈய மாட்டார்கள். ஒருவன் நடுத்தெருவில் புழுதியைக் கிளறித் தேடிக்கொண்டிருந்தானும். என்ன என்று கேட்டபொழுது, இறந்த தந்தைக்கு நீர்க்கடன் செலுத்த மளிகைக் கடையில் மாதிரிக்கு என்று இலவச மாய்ச் சில எள் வாங்கிவந்தானும்; அந்த எள் மண்ணில் விழுந்து மறைந்துவிடவும் தேடிக்கொண்டிருந்தானும். இத்தகையவன் ஈக்குக்கூட ஓர் எச்சிற் பருக்கை கொடுக்க மாட்டான். அவனைப் போய் 'வள்ளலே! தலைவனே!' என்று வாழ்த்தினால் ஏதேனும் கொடுப்பானு? மாட்டான். அவ்வாறு உலக மக்களைப் பாடாது இறைவனைப் பாடினால் நம் துன்பம் நீங்கி வாழலாம் என்ற சுந்தரர் வாக்கை நோக்குங்கள்:

"எள் விழுந்திடம் பார்க்கும் ஆகிலும்
ஈக்கும் ஈகிலன் ஆகிலும்
வள்ளலே எங்கள் மைந்தனே என்று
வாழ்த்தினுங் கொடுப்பார் இலை
புள்ளெலாஞ் சென்று சேரும் பூம்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அள்ளற் பட்டழுந்தாது போவதற்
கியாதும் ஐயுற வில்லையே."

### ஆர் ஊர்?

இறைவன் திருவடித் தொண்டை மேற்கொண்டு சுந்தரர் மீளா அடிமையாகி விட்டார், உண்மைதான். ஆனால் தமக்கு வேண்டிய செலவுக்குப் பொருள்

கொடுக்க இறைவனாலே கட்டுப்படியாகுமா? இறைவனிடத்தில் என்ன இருக்கிறது கொடுப்பதற்கு? அடியவன் ஒருவன் சிவனிடத்திலிருந்து என்னதான் பெறமுடியும்? அவன் மேலெல்லாம் பாம்புகளே மாலைகளாக நெளிந்து கொண்டிருக்கும். சிவன் வாழ்கின்ற ஊராவது அவனுக்குச் சொந்தமான ஊர் என்று சொல்லக் கூடியதாயிருக்கிறதா? அஃது (ஆர் ஊர்?) ஆரூர் என்ற கேள்விக் குறியிலேயே இருக்கிறது. ஒற்றியூரையாவது சொல்லலாமா என்றால் அதுவும் சிவனுக்குச் சொந்தமான ஊராகச் சொல்வதற்கில்லை. ஏனெனில் அஃது ஒற்றி வைத்த ஊர் தானே! இறைவனுக்கு என்று எதுவும் ஊராக இருப்பதாகத் தெரிய வில்லை. ஏனெனில் அவன் ஊரே சுடுகாடுதான். உடுக்க நல்ல உடையாவது உண்டா என்றால் புலித்தோலையே ஆடையாக அணிந்து கொண்டிருக்கிறார். உடைதானில்லை, உணவாவது அவன் மனைவியிடமிருந்து வாங்கி உண்ணலாம் என்றால் அவள் தண்ணீராக ஓடி அவன் சடைமுடியில் பெருகித் தலையில் ஏறிக்கொண்டிருக்கிறாள். அவள் தான் கங்கை. மனைவியைத் தூக்கித் தலைமேலே சுமந்து கொண்டிருக்கிறவன் ஆண்மையோடு அடியவனுக்கு எதைத்தான் அஞ்சாது வழங்கிவிடப் போகிறான்? இப்படியாக ஓர் அடியவன் தன் நாயகனை ஐயுற்றுப் பாடுவது போல் சுந்தரர் நகைச் சுவையோடு சிரித்துக் கொண்டே, சிவனை விளித்துப் பாடுவதைப் பாருங்கள் :

"வார மாகித் திருவடிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே
ஆரம் பாம்பு வாழ்வதாரூர்
ஒற்றியூரேல் உம்மதன்று
தாரம் ஆகக் கங்கையாளைச்
சடையில் வைத்த அடிகேளுந்தம்
ஊரும் காடும் உடையும் தோலே
ஓணகாந்தன் தளியுளீரே."

## அறிவாளியின் செயல்

சுந்தரர் இறைவனுக்குத் தோழர் அல்லரோ? தோழனோடு அசதியாடி அளவளாவி வேடிக்கையாகப் பேசுவதில்தான் எவ்வளவு இன்பம் இருக்கிறது? இவ்வாறு கேலி செய்து பழகிப் பேசுவதால் அன்பு ததும்பி உறவு எவ்வளவு நெருங்கி உறுதி பெறுகிறது? இந்தப் பயிற்சி சுந்தரருக்கு நிரம்ப உண்டு. தம்மை ஒரு தொண்டனாக வைத்து மேலும் கேலி செய்ய முயலுகிறார். இறைவன் ஏதாவது கொடுப்பார் என்று அவர் இறைவனை வாழ்த்தி எப்பொழுதும் பாடிக் கொண்டிருக்கிறார்? இல்லை, அவர் கொடுத்தாலும் சரி கொடாவிட்டாலும் சரி, அவர் திருவடியை அடியாராகிய இவர் துதித்துக் கொண்டுதான் இருக்கிறார். இருந்தாலும் தமக்கு எது வேண்டும் என்பதை இறைவராகப் பார்த்துக் கொடுக்க வேண்டும் அல்லவா? இவர் போய்க் கேட்கும் படியாக அவர் வைத்துக் கொள்ளலாமா? அவருக்கு இது தெரிய வேண்டாமா? அடே! இவன் நம் அடியவன் ஆயிற்றே! வேறு எங்கே போவான்? இவனுக்கு நம்மைத் தவிர வேறு என்ன கதி இருக்கிறது? என்று அவராகப் பார்த்து இரங்கி ஏதாவது கொடுக்க வேண்டாமோ? அது வன்றோ ஓர் அறிவாளியின் செயல்? காலில் விழுந்த சந்திரனுக்கு நாம் அருள் புரிந்தோம் என்று சந்திரனைத் தூக்கித் தலைமேல் வைத்துக் கொண்டு பெருமை அடித்துக் கொண்டால் மட்டும் போதுமா? அதுபோல், தம்மையே நம்பிப் பாடிக் கொண்டிருக்கும் அடியவர்களுக்கும் வேண்டும் பொருள் கொடுத்து மனமிரங்கி உதவிக் கொண்டிருக்க வேண்டுமல்லவா? அப்படிச் செய்யாதிருந்தால் ஓர் ஆபத்துக் காலத்தில் திடீரென்று பொருள் தேவைப்பட்டால் பணத்துக்கு எங்கே போவது? உண்ணும் சோற்றுக்கே

திண்டாட்டம் ஏற்பட்டால் இறைவனைக் கொண்டு போய் எங்காவது அடகு வைக்க முடியுமா? ஒற்றி வைத்து உண்ண முடியுமா? எவர் இறைவனை விலைக்கு வாங்குவார்? இவரை வைத்துக் கொண்டு எவனாவது காசு தருவானா? என்று சுந்தரர் அரிய தத்துவக் கருத்துக்களை எளிதாக அமைத்துச் சிரித்துக் கொண்டே பாடும் பாடல் நம் நெஞ்சை அள்ளுவதாகும்:

"பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்
பேணிஉம் கழல் ஏத்துவார்கள்
மற்றோர் பற்றிலர் என்றிரங்கி
மதியுடையவர் செய்கை செய்வீர்
அற்ற போழ்தும் அலந்த போழ்தும்
ஆபற்காலத் தடிகேள் உம்மை
ஒற்றி வைத்திங் குண்ணலாமோ
ஓணகாந்தன் தளியுளீரே."

இவ்வருமைப் பாடலில் 'மதியுடையவர்' என்பதை அறிவுடையவர் என்றும் பிறைசூடி என்றும் இரு பொருள்படச் சிலேடையில் அமைத்துள்ளார். ஆண்டான் அடிமை உறவால் ஏற்பட்ட உழுவலன்பு ஒற்றிவைக்கும் அளவுக்கு உரிமை கொள்ளும் தோழமைத் தொடர்பாய் மலர்ந்த நிலை வியத்தற்குரியது. பத்திச் சுவையோடு தரம் குறையாமல் நகைச்சுவையையும் உடன் இழைத்துக் கொடுக்கும் திறம் தமிழ்மொழிக்கு எளிதாவதுபோல் வேறு மொழிக்கும் கூடுமா என்பது ஐயமே. கூலிபெறாத வேலைக்காரனின் வயிற்றெரிச்சல் குமுறிக்கொண்டு வருவதை 'ஒற்றிவைத்திங் குண்ணலாமோ' என்ற சொற்கள் அழகாக எடுத்துக் காட்டா நிற்கும்.

இங்ஙனம் சலித்துக் கொள்ளும் வேலைக்காரன் முதலாளியைத் திட்டுவதோடு அமையாது முதலாளியின் குடும்பத்தார் அனைவரையுமே திட்ட ஆரம்பித்து விடுவான். அதுபோல் சுந்தரர் ஆண்டானின் குடும்பத்

தாரை யெல்லாம் குறைகூறி "உங்களுக்கு நம்மால் வேலை பார்க்க முடியாது'' என்று பாடும் பாடல் சிரிப்பை விரித்துக் கட்டிய ஒரு சித்திரமாகும். வேலை செய்த வனுக்கு வீட்டுத் தலைவன் கூலி கொடுக்க வில்லை யாயினும் வீட்டில் உள்ளவர்கள் உணவாவது அளிக்க லாம் அல்லவா? சிவனுக்கோ இரு மனைவியர். அதில் இளையவள் கங்கை. அவள் சிவன் தலையில் ஏறி அலைந்து கொண்டிருப்பாள். வாய்திறந்து ஏன் என்று கூடக்கேட்க மாட்டாள். மூத்தவளோ உமாதேவி. வேலைக் காரனுக்குரிய கொற்றை (உணவை அல்லது கூலியை)க் கொடுத்து ஆதரிக்க வேண்டும் என்ற எண்ணமே கிடையாது. காணும் காணாததற்கு வீட்டில் இரண்டு பிள்ளைகள் உண்டு. மூத்தவன் கணபதி.அவன் தொப்பை யைத் தடவிக்கொண்டு கொழு கொழு என்று உட்கார்ந் திருப்பான். இளையவன் முருகன். அவன் வேல் எடுத்துத் திரியும் விளையாட்டுப்பிள்ளை. இப்படிப்பட்ட குடும்பத்திலே வேலை செய்கிறவன் எப்படிப் பிழைக்க முடியும்? "உங்களுக்கு நம்மாலே இனி வேலை செய்ய முடியாது'', என்று சுந்தரர் பாடிச் சிரிப்பது பேரின்பமே:

"திங்கள் தங்கு சடைக்கண் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கையாளேல் வாய் திறவாள்
கணபதியேல் வயிறுதாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
தேவியார் கொற்றட்டி யாளார்
உங்களுக்காட் செய்ய மாட்டோம்
ஓணகாந்தன் தளியுளீரே.''

முட்டிக் குடிக்கும் கன்றுக்குப் பாலைச் சுரந்து கொடுக்கும் பசுப்போல, இறைவனுக்குத் தட்டு முட்டின்றித் தமிழ்ப் பாடலைப் பொழிந்து கொடுத்தார் சுந்தரர் என்பது உண்மை.

# மணிவாசகரும் திருவைந்தெழுத்தும்

"நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நான் அறி விச்சையும்
நமச்சி வாயவே நா நவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே"

என்று பாடினுர் நாவுக்கரசர். சமணர்கள் தமக்கு விடம் அருத்தியபொழுதும், நீற்றறையில் அடைத்தபொழுதும், யானையை ஏவி இடறச் செய்தபொழுதும், கல்லிற் கட்டிக் கடலில் எறிந்தபொழுதும் சிவாய நம மந்திரத்தைத் துணையாகக் கொண்டே தப்பிப் பிழைத்தார். கற்றுணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சியபோதும் நற்றுணையாவது நமச்சிவாயவே என்று நாவால் மொழிந்து நலம்பெறக் கரையேறினுர். நாதனுடைய நல்ல நாமமாகிய நமச்சி வாயத்தைச் சொல்லியே நாவரசர், மாணிக்கவாசகர் போன்ற பெரியார்களெல்லாம் பிழைத்துய்ந்திருக் கிருர்கள். கல்லோடு கயிற்ருற் பிணைத்து நடுக்கடலில் வீசியபோதும் ஆழ்ந்துபோகாது மிதந்துவந்த தெப்படி என்ற விஞவிற்கு அப்பர் விடையிறுப்பதைப் பாருங்கள் :

"கல்லி னேடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்க என் வாக்கினுல்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே."

நாம் இந்த உலகின் இயல்பைச் சிறிது சிந்தித்துப் பார்த்தால் ஓர் உண்மை எளிதில் விளங்கும். அஃதாவது, ஒருவர் பெயரைச் சொல்லித்தான் மற்ருெருவர் பிழைக்

கிரூர். இவ்விதம் பெயர்சொல்லிப் பிழைக்காமல் ஒருவன் இவ்வுலகில் வாழ்வதே அரிதாகிவிடும் என்றுகூடச் சொல்லலாம். புதிதாக ஒருவன் அயலூருக்குச் செல்வதாயிருந்தாலும், வெளிநாடு புறப்பட்டாலும், அரசாங்க அலுவலகங்களில் ஒரு காரியம் முடியவேண்டியிருந்தாலும், அல்லது புதிதாக ஒரு வேலை கிடைப்பதாயிருந்தாலும் ஒரு தனி உரிமையோ, சலுகையோ அல்லது அனுமதிச் சீட்டோ அல்லது ஒரு நன்மதிப்புப் பத்திரமோ, அல்லது ஒரு நல்ல பண்டமோ, எதுவாயிருந்தாலும் அதனைப் பெறுவதற்கு ஒரு பெரிய மனிதரின் பெயரைச் சொல்லி, அவர் நமக்கு வேண்டியவர் என்றும், அல்லது தெரிந்தவர் என்றும், அல்லது உறவினர் என்றும், அவர் நன்மதிப்பைப் பெற்றுள்ளோம் என்றும், அவர் எப்பொழுதும் நமக்குச் சான்று பகரத் தவரூர் என்றும் நாம் கூறியும் நிலைநாட்டியுமே நம் காரியத்தை முடிக்கவேண்டியிருக்கிறது. இவ்விதம் பேர் சொல்லாவிடில் நம் காரியம் பழுதாகிவிடும். இது சிற்றின்ப உலகில் நிகழும் காரியம். இதைவிட மேலானது நம் பேரின்ப வாழ்க்கை. சில்வாழ்நாள் பல்பிணிச்சிற்றறிவினையுடைய மனிதனின் பேரைச் சொல்வது நம் உடல் வளர்க்கக் கருதி. ஆனால் இந்தப் பெயரெல்லாம் உயிருக்கு உறுதுணையாகா.

உயிருக்கு நன்மையைத் தருவது நமச்சிவாயமாகிய இறைவனின் திருப்பெயர்தான். உற்றூர் உறவினர் பந்து சனங்கள் நல்லோர் நட்பினர் என்பதெல்லாம் இவ்வுடலைப் பொறுத்த மட்டுந்தான். உயிரை உற்றுநோக்கினல் அது தனித்துத்தான் கிடக்கிறது. உயிருக்கு உறுதுணையாவார் உலகில் ஒருவரும் இல்லை. அதனை ஈடேற்றவல்லது நமச்சிவாயம் என்னும் நாம மந்திரம் ஒன்றுதான். அதைத் தெப்பமாகக் கொண்டுதான் நாம் பிறவிக் கடலைக் கடக்கவேண்டும். அதைத் தெப்பமாக்க

கொண்டு அப்பர் அப்புக் கடலைத் தப்பிப் பிழைத்தது வியப்பாகாது. ஏனெனில் திருவைந்தெழுத்தும் பிறவிக் கடலையே கடக்கவல்ல தெப்பம் என்கிறார் சேக்கிழார் :

"இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தாசை இக்கடல்
ஒரு கல் மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ."

நல்வினை தீவினை என்னும் கயிற்றால் ஆணவ மலமாகிய கல்லிலே கட்டிப் பிறவியாகிய கடலிலே எறியப்பட்ட உயிர்களை இன்பக்கரை முகந்தேற்றவல்ல அருட்சத்தியைக் கொண்ட திருவைந்தெழுத்தும் உவர்க் கடலில் கருங்கல்லை மிதக்கச் செய்தது பெரிதாகச் சொல்லவேண்டுமோ? என்பது இப்பாடலின் பொருள்.

உலகில் இவ்வுயிரின் நிலையை உற்று நோக்கினால் அல்லற்பட்ட நிலையில்தான் இருக்கிறது. பிறவி என்கிற பெருங் கடலிலே நீச்சுநிலை அறியாது, மூச்சும் முட்டி, தனியாகக் கிடந்து தத்தளிக்கிறது உயிர். அலையலையாகத் துன்பங்கள் வந்து உயிரை அங்கும் இங்கும் மோதி அலைக்கின்றன. கொவ்வைக் கனிபோன்ற பவழ அதரங்களையுடைய பெண் என்கிற சூறாவளி சுழற்றி யெறிந்து உயிரைக் காம ஆசை என்கிற சுறாமீனின் வாயிலே தள்ளுகிறது. இத்துன்ப நிலையில் உயிர்க்கு யாதொரு பற்றுக்கோடும் இல்லை. இங்கு யார் பெயரைச் சொல்லிப் பிழைக்க முடியும்? உலகியல் வாழ்க்கையில் நாம் சொல்லிப் பிழைக்கும் பேர் எதுவும் இங்கே உதவாது. இறைவன் நாமம் ஒன்றுதான் உயிரைக் காக்கவல்லது. அதுவே ஐந்தெழுத்துப் பெயராகிய நமச்சிவாயம். நமச்சிவாயமே உயிரைக் காக்கவல்ல தெப்பம். இப்பெயரைச் சொல்லியே உயிரானது காம வெகுளி மயக்கங்களைத் தப்பிப் பிறவிக் கடலைக் கடந்து

இன்பக் கரையை அடைய முடியும். இதைத் திருவாசகம் அழகாகக் கூறுகிறது :

“ தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றென் றின்றிக்
கனியை நேர் துவர்வாயார் என்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல் அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே ”

தனியனேன் என்பது துணைபுரிவார் ஒருவரும் இல்லை என்பதைக் குறிக்கும். பெரும் பிறவிப் பௌவம் என்பது பிறவிப் பெருங்கடல். திருவள்ளுவரும் பிறவியைப் பெருங்கடல் என்றார். “காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலிற் பிறவிப் பெருங்கடல் என்றார்” என்று பரிமேலழகர் அதற்கு விளக்கம் கூறியது ஈண்டைக்கும் ஏற்புடையதாகும். நாம் கடல் என்று காண்பவற்றுக்கெல்லாம் காரண காரியத் தொடர்ச்சி கிடையாது, கரை உண்டு, ஒரே நிலையில் நிற்கும். ஆனால் பிறப்பு தொடர்ச்சியாய் வந்துகொண்டிருக்கும். கரையாகிய வரம்பு கிடையாது; மேன்மேலும் வந்துகொண்டிருக்கும். ஆதலால் கடல் என்னாது பெருங்கடல் என்றார். வினைவயத்தால் பிறவியிற் கிடந்து அழுந்தும் உயிரைக் கரையேற்றுவதற்கு வினையின் நீங்கிய முதல்வனின் உதவி தேவை. அம்முதல்வன் இங்கு முனைவன் என்னப்பட்டான். “வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்” என்றார் தொல்காப்பியரும். எத்தகைய இடர்களும் இன்னல்களும் உயிரைச் சூழ்ந்து நலிவுறுத்துகின்றன என்பதை இப்பாடல் மிகத் தெளிவாக உருவகித்துக் காட்டுகின்றது. கடலில் வீழ்த்திய அப்பர் ஐந்தெழுத்தின் புணையிடித்துக் கரையேறிய திறனை

நினைத்துத்தான் மாணிக்கவாசகர் இவ்வுருவகப் பாடலை உருப்படுத்தினரோ என்று நினைக்கத் தோன்றுகிறது. மேலே குறித்த சேக்கிழார் பாடலும் திருவாசகத்தை நினைத்துப் பாடியதோ என எண்ண இடங்கொடுக்கிறது.

இத்திருவாசகப் பாடலில் மணிவாசகர் பிறவியைக் கடலாக உருவகித்துக் காமத்தைச் சுறாமீனாக உருவகித்தார். அதேபோல் அப்பர் அடிகளும் தமது பாடல் ஒன்றில் பிறவியைக் கடலாக உருவகித்து மனத்தைத் தோணியாகவும் மதியைக் கோலாகவும் சினத்தைச் சரக்காகவும் காமத்தைப் பாறையாகவும் உருவகித்து இறைவன் நாமத்தை உன்னும் உணர்வால் உய்ய வேண்டும் என்று நயம்படக் குறிப்பிட்டுள்ளமை இங்கே ஒப்பு நோக்கற்பாலது :

"மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாறை தாக்கி மறியும்போ
தறிய வொண்ணுது
உனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூர்
உடைய கோவே."

ஐந்தெழுத்தின் புணைபிடித்துக் கிடந்த மணிவாசகர் இறைவன் பெயரை எவ்வாறு சொல்லிச் சொல்லித் திரிந்திருக்கிறார் என்பதையும், நமச்சிவாய மந்திரத்தைத் திடமாய்ப் பற்றி, இறைவனை உற்று நின்று, தம்மைத் துன்பக் கடலின் துயர்களினின்றும் காப்பாற்ற வேண்டி எவ்வாறு மன்றாடிக் கூவியலறிக் கரைந்துருகினார் என்பதையும் அவர் பாடல் கொண்டே நாம் அறியலாம் :

"போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப்
போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி."

(இப்பாடலில் 'போற்றியோ நமச்சிவாய' என்பதை 'போற்றியோம் நமச்சிவாய' என விரித்து, 'ஓம் நவச்சிவாய போற்றி' என்று அந்வயப்படுத்தி, 'ஓம் என்னும் பிரணவத்தின் வேறுபாடில்லாத திருவைந் தெழுத்தாகிய நமச்சிவாயத்தின் வாச்சியப் பொருளாக வுள்ள சிவபெருமானே!' என்று பொருள் கொள்ள வேண்டும். புயங்கம் என்ருல் பாம்பு! அதனை அணிகலனுக வுடையன் புயங்கன்; அவன் சிவபெருமான்.)

திருநாவுக்கரசர் மாணிக்கவாசகர் போன்ற அருட் பெரியார்கள் எல்லாரும் நமச்சிவாய என்னும் பெயரைச் சொல்லிச் சொல்லியே இறைவனை அழைத்து இழுத்து மனத்தில் இருத்தி அழகு கண்டு இன்புற்றிருக்கிருர்கள். எத்தனை தரம் ஐந்தெழுத்து மந்திரத்தைச் சொன்னுலும் மாணிக்கவாசகருக்கு மனநிறைவு வராது. இன்னும் சொல்லவில்லையே என்ற ஏக்கம் மேற்பட்டு நிற்கும். அதனுல் தம்மை நாய் என்றும் பேய் என்றும் திட்டிக் கொள்கிருர். நமச்சிவாயத்தைச் சொல்லும்போதெல்லாம் இறைவனுடன் இருப்பதாகவும், சொல்லாதபோதெல்லாம் இறைவனைப் பிரிந்து இடர்ப் படுவதாகவும் ஒருவகை உணர்ச்சி அவர் உள்ளத்தைப் பிளந்தது. கோவென்று கதறுகிருர் பாருங்கள் :

"மாய னேமறி கடல்விடம் உண்ட
வான வாமணி கண்டத்தெம் அமுதே
நாயி னேன்உனை நினையவும் மாட்டேன்
நமச்சி வாயஎன் றுன்னடி பணியாப்
பேய னுகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னுகிநின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே."

உயிருக்கு ஒரு பக்கம் இன்பம், ஒரு பக்கம் துன்பம். ஒரு பக்கம் சிவம், ஒரு பக்கம் மலம். இவ்வாறு இன்பத்

திற்கும் துன்பத்திற்கும் இடைப்பட்ட உயிர் தானுக இயங்கும் வலியற்றது. அதை இயக்குவது சிவனுடைய சக்தியேயாகும். உயிரை மலத்தின்பால் இழுத்து உலக விடயங்களிலே புகச் செய்யும் சிவசக்திககு ஆதிசக்தி அல்லது திரோதான சக்தி என்று பெயர். இருவினை ஒப்புக் காட்டி, மலபரிபாகம் கூட்டி, சத்திநிபாதம் அருளிச் சிவத்தின்பால் உய்க்கும் சிவசக்திக்கு அருட்சக்தி அல்லது பராசக்தி என்று பெயர். இவ்வாறு உயிருக்கு ஒரு புறத்தில் அருட்சக்தியும் மற்ருெரு புறத்தில் திரோதான சக்தியும் நின்று உயிரை நாடகம் ஆட்டி வைக்கின்றன. திரோதானம் ஆட்டுவிக்கும் நடக்கும் ஊன நாடகம். திருவருள் ஆட்டுவிக்கும் நாடகம் ஞான நாடகம். இதனை மணிவாசகர் காட்டுகின்ருர்:

"வான நாடரும் அறியொ ணுதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணுதநீ
ஏனை நாடரும் தெரியொ ணுதநீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா!
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே."

இவ்வாற்ருல் முன்சொல்லப்பட்ட மூன்று முதலும் ஐவகையாக நிற்பதை அறியலாம். அவை முறையே சிவன், அருட்சத்தி, உயிர், திரோதான சத்தி, மலம் என்பனவாகும். இவ்வைந்தையும் இம்முறையே குறிப் பதே 'சிவயநம' என்னும் இறைவன் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தாம்.

மணிவாசகரைக் கண்ட சிலர், "இப்பெரியார் சிவன் திருவருள் கைவரப் பெற்றவர். அதற்கு இவர் நல்ல தவம் செய்திருக்கிருர்!" என்று வியந்து கூறினர்கள். அதைக்

கேட்ட மணிநாவர், "ஐயோ! நானு தவம் செய்தேன்? நான் அப்படி ஒன்றும் தவம் செய்துவிட வில்லே. மூச்சைப் பிடித்துக் காற்றைக் குடித்து, வயிற்றை யடித்துத் துள்ளத் துடித்துச் செய்யப்படும் கடும் விரதங்களில் எதுவும் நான் செய்ததில்லே. நான் செய்த தவம் மிக எளிதானது. சிவாய நம என்னும் பேரைச் சொல்லும் பேறு பெற்றேன். உடனே தேனினும் அமுதத்தினும் இனிதாகத் தித்திக்கும் உணர்ச்சி பெற்றேன். சிவபெருமான் தானுக ஓடோடியும் வந்து என் உள்ளம் குடிகொண்டு திருவருள் புரிந்தான். எல்லாப் பற்றையும் ஒழித்தேன். பிறவிப்பிணி நீங்கியது," என்று தெளிவுற எடுத்துக் கூறினுர் :

"நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம
எனப்பெற்றேன்
தேனுயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனுரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே."

சிவாய நம மந்திரத்தை ஓதுவதையே தவமாகக் கொண்டு ஓதினுர் மாணிக்கவாசகர் என்பது இதனுல் நன்கு போதரும். "அருந்தவம் தரும் அஞ்செழுத்தோதினுல்" என்ற அப்பர் திருவாக்கும் இங்கே நினையத் தக்கது.

சிலர் அப்பர் அடிகளிடம் இறந்தவன் ஒருவனேக் காட்டி "இவன் ஏன் செத்தான்? செத்தவன் இனிப் பிறப்பானு?" என்று கேட்டனர். அதற்கு அப்பர், "இவன் வாழ்ந்தபோது நமச்சிவாய மந்திரத்தை வாயார ஓதினுனு?" என்று கேட்டார். "ஐயோ! அவனுக்குப் பணமே வாழ்க்கை மந்திரமாக இருந்தது. நமச்சிவாயத்தைக் கேட்டும் அறியான்" என்று பதில் வந்தது. (ஐந்தெழுத்தாலாகிய *MONEY*-மணி என்னும் ஆங்கிலச்

சொல்லே இன்று பலருக்கும் ஐந்தெழுத்து மந்திரமாக இருக்கிறதல்லவா!) "அஞ்செழுத்தை நெஞ்சழுத்தாது போனால் போகட்டும். செந்தழல் போல் திருமேனி கொண்டவனான சிவபெருமான் உளன் என்று கொண்டு அவன் திருப்புகழை என்றாவது பேசியிருப்பானா?" என்று அப்பர் கேட்டார். "கடவுள் என்ற சொல்லே அவன் காதில் அடிபட்டிருக்காது" என்று பதில் வந்தது. "ஒரு நாளாவது சிவன் கோயிலை வலம் வந்திருப்பானா?" என்று அப்பர் கேட்டார். "அவன் ஒரு பெரிய குடும்பத்திற்குத் தலைவன் ஆயிற்றே.! அதைத் தாங்கிக் காப்பதற்குப் பொருள் வேட்டையில் அவன் உலகையே வலம் வந்து கொண்டிருந்தபோது, வெட்டியாய்க் கோயிலைச் சுற்றிக் கொண்டிருக்க அவனுக்கு நேரமும் ஓய்வும் இருந்திருக்கவே முடியாதே" என்று பதில் வந்தது. "அவன் தினமும் சாப்பிடுவதற்கு நேரம் இருந்ததல்லவா ? சாப்பிடுவதற்கு முன் இரண்டு மலரையாவது தூவி இறைவனை வணங்கிப் பின் சாப்பிட்டிருப்பானா?" என்று அப்பர் கேட்டார். "ஐயோ! வெந்து பாதி வேகாது பாதியாக, அலுவலுக்கு நேரமாகி விட்டதே என்று, வாரிப் போட்டுக் கொண்டு ஓடித்திரிந்ததால், மலர்கொண்டு அர்ச்சித்துப் பின் சாப்பிட அவன் எண்ணியிருக்கவே முடியாது" என்று பதில் வந்தது. "சரி; எத்தகைய நோயையும், பிறவி நோயையும் தீர்க்கவல்லது திருநீறு, அதையாவது பூசுவானா ?" என்று அப்பர் கேட்டார். "அவன் முகத்துக்கு வாசனைமாவு ஒத்திக் கொள்வானே தவிர, திருநீறு பூசும் வழக்கம் இல்லை" என்று பதில் வந்தது. திருநாவுக்கரசர் பெருமூச்சு விட்டார். "அத்தகையவன் ஏன் பிறந்தான் ? சாவதற்குத் தான் பிறந்தான். ஏன் ? மீண்டும் பிறப்பதற்குத்தான் செத்தான். செத்துச் செத்துப் பிறப்பதே அவனுடைய தொழில். சிவபெருமானுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்யாதவர்கள், வாழ்க்கையிலே

உயிரோடு இருந்தாலும், ஒவ்வொரு நாளும் செத்துச் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி, 'நேரமில்லை, வேலை அதிகம்' என்று சாவதற்கு ஓடிக்கொண்டிருக்கிறார்கள்'' என்று வருந்திப் பாடினார் :

''திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒரு காலும் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீறு அணியா ராகில்
அளியற்றார் பிறந்தவாறு ஏதோ என்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே.''

திருநீறு பூசி, மலர்கொண்டு அருச்சித்து இறைவன் நாம மந்திரமாகிய நமச்சிவாயத்தை ஓதி வழிபட்டுக் கோயில் வலம்வராத அறிவிலிகள் பிறவிக் கடலைக் கடக்க முடியாது. மண்ணாகிக் கழிவார்கள் என்பது இப்பாடலின் போந்த பொருள்.

திருநாவுக்கரசரின் இத் தீவிய பாடலை மேவியே போலும் மணிவாசகர் அதிசயப்பத்தில் ஒருபாடலைப் பாடியுள்ளார். திருநாம அஞ்செழுத்தை எண்ணாமல் விட்டால் பிறந்து இறந்து மண்ணாகிக் கழியவேண்டியது தான்: அவ்விதம் நேராமல் இறைவன் தம்மை அடியார் குழுவிற் கூட்டியது அதிசயமேயாகும் என்று பாடி நம்மை அதிசயமூட்டுகிறார் :

''எண்ணி லேன்திரு நாமவஞ் செழுத்துமென்
ஏழைமை யுதனாலே
நண்ணி லேன்கலை ஞானிகள் தம்மொடும்
நல்வினை நயவாதே
மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற்கு
ஒருப்படு கின்றேனை
அண்ண லாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயம் கண்டாமே.''

அப்பர் அடிகள் "திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்" என்றார்: மணிநாவர் "எண்ணிலேன் திருநாம அஞ்செழுத்தும் என் ஏழைமை யதனாலே" என்றார். அப்பர் "பெயர்த்தும் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே" என்று பாடினார். மணிநாவர் "மண்ணிலே பிறந்திறந்து மண்ணாவதற்கு ஒருப்படுகின்றேனை" என்று பாடினார். அப்பர் தேவாரத்தை முன்வைத்துக் கொண்டு ஒப்பிப்பது போன்றிருக்கிறது, திருவாசகப் பாடல். இது போலவே தோன்றுகிறது மணிவாசகரது மற்றொரு பாடலும். அதுவும் ஓர் அற்புதப்பாடல்தான்:

"இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
 இயல் பொடஞ் செழுத் தோதித்
தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாதுநான்
 தடமுலை யார்தங்கள்
மைப் புலாங் கண்ணா லேறுண்டு கிடப்பேனை
 மலரடி யிணைகாட்டி
அப்பன் என்னைவந் தாண்டுகொண் டருளிய
 அற்புதம் அறியேனே."

அப்பர் பாடலை நினைந்து பாடும் மணிவாசகர் தப்பிலாது இறைவனை அப்பன் என்று செப்பிவிட்டாரோ என நினைக்கத் தோன்றுகின்றது. "உண்பதன் முன் மலர் பறித்து இட்டு உண்ணாராகில்" என்ற அப்பர் வாக்கை வாங்கிக் கொண்டு "இப்பிறப்பினில் இணைமலர் கொய்து நான்...தப்பிலாது பொற்கழல்களுக்கிடாது" என்று பாடியது போல் தோன்றுகின்றதல்லவா? திருவைந் தெழுத்தை ஓதிக்கொண்டே திருவடிக்கு மலர் அர்ச்சனை செய்யவேண்டும் என்ற முறைமையை இங்கே நோக்கலாம்.

எதனைத் தொடங்கும் பொழுதும் நமச்சிவாயத்தைக் கூறியே தொடங்கவேண்டும். ஆதலால் திருவாசகத்தை மாணிக்கவாசகர் நமச்சிவாய வாஅழ்க! நாதன்தாள்

வாழ்க!'' என்று தொடங்கியிருக்கிறார். சிவன் பெயராகிய நமச்சிவாயத்தைச் சொல்லியே அவன் திருவடிகளை வணங்கவேண்டும் என்ற முறைமையையும் வாதவூரர் இங்கு நமக்குக் குறிப்பாகக் காட்டியுள்ளார். தாம் கூறத் தொடங்கியது சிவபுராணம் ஆகையினாலும், உலகத்தின் படைப்பைப் பற்றிக் கூறப்புகுந்ததாலும், உலகியலைக் குறிக்கும் முறையில் 'நமச்சிவாய' என்று தொடங்கினார் போலும். நமச்சிவாய மந்திரத்தின் பெருமையை உணர்வதுதான் திருவாசகம் படிப்பதன் பயன். ஒரு சில பக்கங்களைப் புரட்டிவிட்டு மூடிவிட்டால், ஐந்தெழுத்தை வாயாற் சொல்லும் வாய்ப்புக்கூட இல்லாது போய்விடுமே என்று எண்ணியே போலும், மாணிக்கவாசகர், எடுத்தவுடன் ''நமச்சிவாய வாஅழ்க'' என்று தொடங்கியுள்ளார். மேலும், நமச்சிவாயத்தை நாம் வாழ்த்தித்தான் அது வாழ வேண்டும் என்பதில்லை. நாம் வாழ்வதற்காகவே நாம் நமச்சிவாயத்தை வாழ்த்துகிறோம். அம் மந்திரம் குறிக்கும் பொருளை உலகத்தவர் உணர்ந்து ஓதி உய்வார்களாக என்னும் பொருள்படவே ''நமச்சிவாய வாஅழ்க'' என்று கூறினார். திருவைந்தெழுத்தைச் சிகாரம் முதலாகக் கூறுதல் ஆகம வழக்கு. திருப்பெருந்துறையில் இறைவன் குருவாக வந்து சிவாய நம என்றே வாதவூரருக்கு உபதேசித்தார் என்பர். எனினும், நகாரம் முதலாகக் கூறுதல் மறைவழக்காதலின், தமிழ் மறையாகிய திருவாசகத்தை நமச்சிவாய என்றே மணிவாசகர் தொடங்கியுள்ளார்.

இவ்வாறு இறைவன் ஐந்தெழுந்து மந்திரத்துள் தன்னை அடக்கிவைத்து அடியார்களுக்கு மிக எளியனாய் வந்து அருள்புரியும் ஓர் அற்புதத் தெய்வம் என்பது உண்மைதான். ஆயினும் அஞ்செழுத்தை ஓதுவார் வஞ்சகம் அற்றவராய், பொய் இல்லாத மெய்யராய். உண்மை அன்பராய், மனம் தூயராய் இருத்தல் வேண்டும். ஆசையால் அழிந்து சாகும் அற்பர்கள் எத்தனை முறை

எவ்வாறு ஐந்தெழுத்தை ஓதினும் ஆண்டவன் அவர்கள் கிட்டே வரமாட்டான். தூர ஓடிவிடுவான். இதை அப்பர் வாக்கால் அறியலாம்:

" தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தோன்றிய எவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற
தாயானைச் சக்கரமாற் கீந்தான் தன்னைச்
சங்கரனைச் சந்தோக சாமம் ஓதும்
வாயானை மந்திரிப்பார் மனத்து ளானை
வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச்
சேயானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே "

# ஏறூர்ந்த செல்வன்

"அப்பன் நீ அம்மை நீ
ஐய னும் நீ
அன்புடைய மாமனும்
மாமியும் நீ
ஒப்புடைய மாதரும்
ஒண்பொரு ளும் நீ
ஒருகுலமும் சுற்றமும்
ஓர்ஊ ரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும்
தோற்று வாய்நீ
துணையாய் என்நெஞ்சம்
துறப்பிப் பாய்நீ
இப் பொன்நீ இம்மணிநீ
இம்முத் தும்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த
செல்வன் நீயே."

இத்தேவாரத் திருப்பாடல் திருநாவுக்கரசர் பாடிய ஓர் அருமையான திருத்தாண்டகம். ஏறு ஊர்ந்த செல்வன் என்றது இடபத்தை ஊர்தியாகக் கொண்ட இறைவனாகிய சிவபெருமானைக் குறித்ததாகும். செல்வன் என்பதற்கு இறைவன் என்று பொருள். வால் வெள்ளேற்றை வாகனமாகக் கொண்ட வாலறிவனே நமக்கு எல்லாப் பொருளுமாவான் என்று அப்பர் இப்பாடலிற் கூறும் திறன் நோக்கியறிதற் பாலதாகும். இப்பாடல் ஏறூர்ந்த செல்வனை நோக்கி விளித்துக் கூறியதாகும்.

அப்பன் என்றது தந்தையை; அம்மை என்றது தாயை. முதலில், 'ஏறூர்ந்த செல்வா! நீயே எனக்குத்

தந்தையாவாய்' என்றார். அடுத்து, 'அம்மை நீ' என்றார். 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' என்பது புறநானூறு. கல்வியைக் கொடுத்து அறிவை வளர்ப்பவன் தந்தையாதலால், தந்தையை முதலில் எடுத்துக் கூறினார். தந்தையொடு கல்வி போம் அல்லவா? தன் மகன் சான்றோன் எனக் கேட்டுப் பெரிதும் மகிழ்பவள் தாய். அன்பிற் சிறந்தவள் தாய் ஆதலால் அப்பனுக்கு அடுத்து, 'அம்மை நீ' என்றார். பால் நினைந்து ஊட்டுபவள் தாய். குழந்தையின் உடலையும், உயிரையும் வளர்ப்பவள். 'ஈன்று புறந்தருதல் தாயின் கடன்' என்று கூறுகிறது புறநானூறு. அன்னையும் தந்தையும் முன்னறி தெய்வம் முறையாயினும், உடலை வளர்ப்பவளைவிட அறிவை வளர்ப்பவன் சிறத்தல் கருதி, அப்பனை முன் கூறி, அம்மையைப் பின் கூறினார். தகப்பன் இதத்தைச் செய்வான். தாயார் பிரியத்தைச் செய்வாள் என்று கூறுவர். அஃதாவது, தந்தை பிள்ளைக்கு எது நல்லது என்பது கண்டு அதை மட்டும் செய்வான். பிள்ளையின் மனதுப்படி விடமாட்டான். ஆனால் தாயானவள் நல்லது கெட்டதைக்கூடக் கருதாமல், பிள்ளை எதை விரும்புகிறதோ அதையே செய்து கொடுக்க விரும்புவாள். தாயின் அன்பிலே பேதைமையும் கலந்து நிற்கும். கள்ளை விரும்பும் பிள்ளையைத் தந்தை கடிந்து மதுவை விலக்குவான். தாயோ, கள்ளே யானாலும் வயிறு நிறைய உண்டிடச் சொல்வாள். அவளுக்கு எதுவானாலும் பிள்ளை வயிறு நிறைய உண்ண வேண்டும் என்ற ஆசை மேலோங்கி நிற்கும். அவள் அன்பு அறிவோடு பட்டதாயிராது. குழந்தை கிணற்றில் விழவேண்டும் என்று அடம் பண்ணினால், தந்தை பிள்ளையை ஓங்கி அறைந்து கிணற்றுக்கு அப்பால் இழுத்துக் கொண்டு போய் விடுவான். குழந்தையை அடக்குவதற்கு வன்மையைக் கையாளத் தயங்கமாட்டான். தாயோவெனில், மென்மை

யாகவே இருப்பாள். பிள்ளை கிணற்றில் விழுந்தபின்னர்த் தானும் விழுந்து பிள்ளையைத் தூக்கி வந்து கரை சேர்ப்பாள். குழந்தைக்கு உண்டி கொடுத்து வளர்ப்பதில் தாயின் மிக்கார் ஒருவரும் இல்லை. அதனால் தாயோடு அறுசுவை போம் என்பர். இவ்வுலகில் ஒருவனுக்கு அன்னையும் அப்பனுமே முன்னறி தெய்வம். தாயும் ஆனவராய்த் திருச்சிராப்பள்ளியில் இறைவன் திகழ்வதை யாவரும் அறிவர். தந்தை தாயாரின் சிறப்பை இராமன் பரதனுக்கு எடுத்துக் கூறியதும் இங்கே நோக்கத்தகும்:

"பரவு கேள்வியும் பழுதில் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால்."
அந்த நற்பெருங் குரவர் ஆரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்
தந்தை தாயரென் றிவர்கள் தாமலால்
எந்தை கூறவே றெவரும் இல்லையால்"

அடுத்து "ஐயனும் நீ" என்ருர் அப்பர். ஐயன் என்பது குரு அல்லது ஆசான்.

"இதவிய லியற்றிய குரவர் யாரினும்
மதவியல் களிற்றினுய் மறுவில் விஞ்சைகள்
பதவிய விருமையும் பயக்கப் பண்பினல்
உதவிய வொருவனே உயரும் என்பரால்"

என்று வசிட்டன் இராமனிடம் கூறியதாக இராமாயணத்தில் காண்கின்ருேம். குரவர் யாரினும் என்றது, ஐங்குரவருள்ளும் என்றவாறு. ஐங்குரவராவார்: "அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தம்முன், நிகரில் குரவர் இவர்" என்றதால் அறிக. இறைவன் குருவடிவில் தோன்றியே சிவஞானத்தைக் கொடுத்தருள்வான் என்பது சைவசித்தாந்தத்தின் உண்மை. "எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும்," என்பதும்

அறிக. ஆதலால், கடவுளை 'ஐயனும் நீ' என்றார் அப்பர்.

அடுத்து, "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்றார், அன்பில்லாத மாமனைத் தவிர்ப்பதற்கு. தாயன்பு தந்தையன்புபோல மாமன் அன்பு இயல்பாகவே அமைவ தொன்றன்று. ஆதலின், 'அன்புடைய' என்ற அடை ஈண்டு வேண்டப்படுவதாயிற்று. அப்பன், அம்மை இருவரிடமும் அன்பு சொல்லாமலே பெறப்படும். இல்லையென்று வெளியில் சொன்னாலும், இயல்பாகவே அன்பு அங்கே ததும்பி நிற்கும். அதைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. ஆனால் மாமன் என்றால், அன்புடைய மாமனா? என்ற கேள்வி உடனே எழும். அந்த வினாவை உட்கொண்டே அப்பர் 'அன்புடைய' என்ற அடையை நினைவாக மறவாது அமைத்துள்ளார். இதிகாச இலக்கியங்களில் வரும் மாமன் அவ்வளவு சிறப்பாக அமையவில்லை என்பது இங்கே அறிதற் பாலது. மாரீசன், சகுனி, கம்சன் போன்ற மாமன் எல்லாம் உள்ளே பகையாக மாறினமை யாரும் அறிந்ததே. அவர்களைப் போலாது, இங்கு அன்புடைய மாமனையே குறித்தார். அன்பு காட்டாது போனால் மாமன் உறவு சிறக்காது. அன்பாகிய ஒன்றை வைத்தே மாமன் உறவு உயிர் பெற்று உலவ வேண்டும். தாய் தந்தையார்க்காயின், அவர்கள் தங்கள் அன்பை வெளிப்படுத்தி உலகுக்கு மெய்ப்பிக்க வேண்டியதில்லை. ஆனால் மாமனேவெனில் தனக்கு அன்பு இருக்கிறது என்பதை உலகிற்கு அடிக்கடி காட்டிக் கொண்டே யிருக்க வேண்டும். இல்லையேல் அவன் மாமன் என மதிக்கப்படான். பெற்றோர்கள் தங்களுக்குப் பிள்ளை மேல் உள்ள அன்பைப் பிறர் மெச்சுவதற்காக வெளிக் காட்ட விரும்பவும் மாட்டார்கள். மாமன் தன்னிடம்

உள்ள அன்பை இல்லாத அளவுக்குப் பெரிதாக்கி வெளியிட விரும்புவான். தான் செய்யும் ஒவ்வொன்றும் அன்பின் அறிகுறி என்று அடுத்தடுத்து அழுத்திக் கூறுவான். தான் பெற்ற பெண்ணுக்காகவே எதையும் செய்கிறவன் மாமன். ஆயினும் தன் பெண்ணின் மாப்பிள்ளைக்கு அன்பு காரணமாய் எல்லாம் செய்வது போல் நடிப்பான். பிள்ளைக்கு உண்டி, உடை, உறையுள், மற்றும் உதவியனைத்தையும் செய்து மணமாகும் பருவத் துக்கு ஆளாக்கி விடுகிறவர்கள் பெற்றோர்கள். ஆனால் அவர்கள் தாம் செய்த உதவியைப் பற்றி எதுவும் உலகிற்கு அறிவிப்பதில்லை. பிறர் மெச்ச வேண்டும் என்றும் செய்வதில்லை. இயற்கைப் பாசத் தினால் உந்தப் பெற்று அவர்கள் அங்ஙனம் செய்கின் றனர். ஆனால் மகளைக் கட்டிக் கொடுத்த மாமன், மாப்பிள்ளைக்கு ஒரு புத்தாடையோ, அணியோ, பணமோ, அல்லது விருந்தோ கொடுத்தால், அதை உலகிற்கு அறிவிக்க வேண்டி, பல பெரியோர்களை வரவழைத்து, நடுமனையில் வைத்துக், கட்டி மேளம் கொட்டி, தான் செய்யும் ஒரு சிறு உதவியையும் மிகப் பெரிதாகக் காட்டித் தனது அன்பை ஆர்ப்பாட்டம் செய்துவிடுவான். ஆதலால் மாமன் உறவைவிட அவன் செய்யும் அன்பே பெரியதாகத் தோன்றும். ஆயினும் அவ்வுதவிச் செயல்களை அவன் செய்யுந் தோறுமே அவன் அன்பு தோன்றும். அல்லாமல் எப்பொழுதும் இயல்பாகத் தோன்றாது. இதனைக் குறிக்கவே அப்பர் சாமிகள் 'அன்புடைய மாமனும்' என்றார். அன்பு காட்டும் தாயோ தந்தையோ ஒவ்வோர் அமையம் வன்பு காட்டினாலும் அதனால் அவர்களுக்கு இயல்பாக உள்ள அன்பு அழிந்து விடாது; ஐயப் படவும் மாட்டாது. ஆனால் மாமன் எப்பொழுதும் அன்பு ஒன்றையே காட்டுதல் வேண்டும். எப்பொழு

தாவது வன்பு தோன்றுமானுல், மாமன் உறவே மடங்கி முறிந்து மண்ணுகி விடும். ஆகவே இங்கு அன்பை மாமனுக்கு வற்புறுத்திக் கூறினுர் என்க. அன்புடைய மாமன் என்றதால் தாய் தந்தையர் அன்பிற் குறைந்தவர்கள் என்று பொருளாகாது.

இதில் இன்னென்றும் நாம் கவனிக்க வேண்டும். அப்பன் நீ அம்மை நீஎன்றது போல், 'அன்புடைய மாமனும் நீ மாமியும் நீ' என்று கூருது 'அன்புடைய மாமனும் மாமியும் நீ' என்று இணைத்துக் கூறியதில் குறிப்பு ஒன்று உண்டு. அஃதாவது, மாமனும் மாமியும் இணைந்து செயற் பட்டாலன்றி அன்பு தோன்றுவதில்லை. மாமி இல்லாத மாமன் அன்பு சிறக்காது. அன்பு இருக்காது என்றே சொல்லலாம். மாமியின் தூண்டுதலைக் கொண்டுதான் மாமனிடம் அன்பு உண்டாகும். மாமியில்லாத மாமன் மருமகனிடமும் மகளிடமும் அவ்வளவு அன்பாய் இருக்கமாட்டான். ஆகவே மாமியை வைத்துத்தான் மாமனிடம் அன்பு மலர வேண்டும். மாமியில்லாத மாமன் இருப்பதும் ஒன்றுதான் இல்லாததும் ஒன்று தான். மாமன் இல்லாமல் மாமியில்லை. மாமியில்லாமல் மாமன் இல்லை. ஆகவே மாமனும் மாமியும் என்று இணைத்தார். மாமனும் மாமியும் இருந்தால் மட்டும் போதாது. அவர்களுக்கு அன்பும் இருக்க வேண்டும். அவர்களிடையேயும் அன்பு இருக்க வேண்டும். ஆகவே "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்ருர். இதனுல் இங்குக் கூறப்பட்ட மாமன் பெண்ணைக் கொடுத்த மாமன் என்பதும் நன்கு புலனுகும். வெறும் தாய் மாமனை இங்குக் குறிப்பிடவில்லை. மாமன் மாமியர் உறவு கொடுத்துக் கொடுத்தே உறுதிப்பட வேண்டியிருத்தலின், "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்ருர் என்றும் கொள்க. கொடை குன்றினுல்

அன்பும் குன்றியதாகவே கருதப்படுமாதலின், கொடுத்துக் கொடுத்து அன்பை எடுத்துக் காட்டுதல் வேண்டும். "மாமனும் மருகனும் போலும் அன்பின்" என்று சீவக சிந்தாமணியில் திருத்தக்கத் தேவரும் அன்பையே முக்கியமாக வற்புறுத்தினர். அதனை விளக்கவந்த நச்சினர்க்கினியரும் "ஒன்றுக் கொன்று பிற்படின் வருந்து மென்று அன்பு கூறினர்" என்று குறிப்பிட்டுள்ளார்.

அடுத்து, அந்த மாமன் மாமியின் அருமை மகளாய் ஒருவனுக்கு வந்து வாய்த்த வாழ்க்கைத் துணையான மனைவியை "ஒப்புடைய மாதரும்" என்ருர் அப்பர். உயிருக்கு ஒப்பான மாது மனைவியாதலின், ஒப்புடைய மாதரும் என்ருர். ஒப்பு என்பதை அழகு எனக் கொண்டு, அழகுள்ள மனைவி என்றும் சொல்லலாம். மற்றும், இலக்கண நூலோர் கூறியாங்குக் கணவனுக்கு ஒத்த இல்லக் கிழத்தியாய் இல்லறம் நடத்திவரும் மனைவி என்று கூறலாம். பெற்ருேர்களுக்குப் பின், ஒருவனுக்கு மனைவியை விடச் சிறந்தவர்கள் வேறில்லை. "பொற்ருலியோடு எவையும் போம்" என்ற பொன் மொழியையும் நோக்குக. மனையாள் கணவனிடம் செலுத்தும் அன்பு போன்றும் இறைவன் உயிர்களிடத்து அன்பு செலுத்துவான். பத்தித் துறையில் பயின்று வரும் சில அகப் பொருட் பாடல்களாலும் திருக்கோவையார் போன்ற நூல் களாலும் இதனை அறியலாம். மகவு இல்லாமல் கணவன் மனைவி உறவு சிறக்காது என்பதைக் குறிக்க, "மாதரும் ஒண் பொருளும் நீ" என இணைத்துக் கூறினர்.

"மனைக்கு விளக்கம் மடவாள், மடவாள் தனக்குத் தகைசால் புதல்வர்" என்றும், "மங்கலம் என்ப மனை மாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு" என்றும்

வரும் ஆன்றோர் வாக்கினை ஒப்ப, அப்பரும், மாதரை யடுத்து "ஒண்பொருளும் நீ" என்றார். பொருள் என்பது குழந்தையைக் குறிக்கும். ஒண்பொருள் என்றது அறிவுள்ள குழந்தையை. "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த, மக்கட்பே றல்ல பிற," என்பது தமிழ்மறை. சேயொடு தான் பெற்ற செல்வம் போம் ஆதலின் மக்களைப் பொருள் என்றார். "தம்பொருள் என்பதம் மக்கள்" என்று திருக் குறளிலும் வந்துள்ளது. மயக்குடை மக்களை யில்லோர்க்குப் பயக்குறையில்லைத் தாம் வாழுநாளே" என்று புறநானூறு புகல்கின்றது. புத் என்னும் நரகில் கிடக்க விடாமல் காப்பவன் புத்திரன் என்று வேதம் கூறுகின்றது. குழந்தையால் ஒருவன் அடையும் இன்பமும் பயன்களும் பலவுள. அவற்றையும் இறைவன் உயிர்களுக்குப் பிள்ளைபோல் முன்னின்று அளிக்கிறான் என்றார்.

பின்னர், "ஒரு குலமும் சுற்றமும் ஓர் ஊரும் நீ" என்றார். குலம் என்பது இனம் அல்லது சாதியைச் சுட்டி நின்றது. ஓர் இனத்தவர்களும் ஒரு சாதியினரும் ஒருவரையொருவர் இனப்பற்றுக் கொண்டு ஒரு குலமாதல் கருதி ஒன்றுற்ற போது ஒன்றாக நின்று உதவி செய்வர். சுற்றம் என்றது உற்றார் உறவினர் களையும் நண்பர்களையும். நண்பர்களிடையே வளரும் அன்புக்கு எல்லையில்லை. அதுபோலவே ஓர் ஊரினரும், நாட்டினரும், ஊர்ப்பற்று இடப்பற்று அல்லது நாட்டுப் பற்றுக் கொண்டு ஒன்றுபட்டு ஒருவருக்கொருவர் உதவி நிற்பர். மனித இன முழுதையும் மனிதக்குலம் என ஒரு குலமாகக் கொண்டு உதவுவதும் உண்டு. அத்தகைய உதவிகளையும் இறைவன் அவ்வாறே உயிர் களுக்கு அளிக்க வல்லவன் என்பார் "ஒரு குலமும் சுற்றமும் ஓர் ஊரும் நீ" என்றார். "ஒரு தோழன்"

என்ற மணிவாக்கும் "தோழனுமாய்" என்ற சுந்தர வாக்கும் இங்கே நினைக்கத்தகும்.

உண்ணப்படுவனவற்றைத் தூய்ப்பன என்றார். அனுபவிக்கப்படுவனவற்றை உய்ப்பன என்றார். துய்க்கும் பொருள்களும் உய்க்கும் பொருள்களும் உயிர்களுக்கு இன்பம் தருகின்றன. அவ்வின்பங்களையும் இறைவன் அளிக்க வல்லவன் என்றார். போகப் பொருள்களைக் கூறவந்த இடத்து, பொன்னையும் மணியையும் முத்தையும் கூட்டி, அவையும் அவற்றான் ஆம் இன்பமும் கடவுளே என்றார். இறைவன் என்றது இங்கே கடவுளையும் குறிக்கும், அரசனையும் குறிக்கும். நாட்டை ஆளும் அரசனால் உயிர்கள் அடையும் பயன்களும் பல உள்ளன. அவற்றையும் கடவுளே .தர வல்லவன் என்பார் "இறைவனே நீ" என்றார். மற்றும், நீயே கடவுள் என்றும் பொருள் கொள்ளலாம்.

இங்கு நாம் கவனிக்க வேண்டியது, ஒன்று உண்டு. அப்பன் நீ அம்மை நீ என்று ஒவ்வொருவரையும் தனித் தனியாக எடுத்துக் கூறவேண்டுவது என்னை? அப்பன், அம்மை, குரு, மாமன், மாமி, மனைவி, மகன், நண்பன், அரசன் முதலியோர் அவரவர் நிலைக்கேற்ப ஒவ்வொரு வேளையில் உதவுவர். ஆனால் பெருந் துன்பம் வந்த இடத்தில் நழுவி ஓடுவர். மேலும் தந்தை அறிவோடு கூடியவற்றைச் செய்யப் பார்ப்பான், அம்மை அன்போடு கூடியவற்றைச் செய்வாள். தந்தை தனக்கு விருப்ப மானதைச் செய்வான். தாயார் பிள்ளைக்கு விருப்பமான தைச் செய்வாள். தாய் செய்வதை மனைவி செய்யமாட் டாள். மனைவி செய்வதை மற்றவர்கள் செய்ய முடியாது. இங்ஙனம் ஒவ்வொருத்தர் ஒவ்வொரு திறத்திலேயே உதவி செய்வாராக, ஏறூர்ந்த செல்வனாகிய கடவுள் நலம், தீங்கிலும், நம்மைக் கைவிடாது எல்லாவித

உறவினர் செய்வதையும் தானே செய்து, நம்மைவிட்டு நீங்காது உயிருக்குயிராய் உடனாய் நிற்பன் என்பதை அப்பர் அழகாக நமக்கு அறிவுறுத்தியுள்ளார். அது மட்டுமா?

முடிவாக, "துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ" என்றார். இதன் பொருள் "நீ எனக்கு வாய்த்த உண்மைத் துணையாக நீங்காது நின்று, நான் என் நெஞ்சில் உண்மைத் துணையென இதுவரை நம்பியிருந்த உற்றார் மற்றார்களிடத்தும் உறுபொருள்களிடத்தும் வைத்திருந்த பற்றுக்களைப் பொய்யென்று கண்டு களையும்படி செய்து அழியாத களைகணாய் நின்று அஞ்சேல் என்று அருள்புரியும் ஆண்டவனாய்" என்பதாகும். எனவே அப்பன் நீ, அம்மை நீ என்று ஒவ்வோர் உறவினராகக் கூறிவந்தது, அவ்வுறவு முறையால் வந்த வாறும் போமாறும் உணர்ந்து மாயமாம் எனக் கொண்டு துறப்பதற்கேயாகும். சந்தைக் கூட்டமான தந்தை தாய் தாரம் எனும் பந்தம் நீங்காதவர்க்கு உய்ந்து போக்கில்லை என்பதை உணர்வதுவே இப்பாடலின் பயன். எவ்வகைச் சுற்றத்தாரும் எம்மாடு சும்மாடே எனவிட்டவர் அல்லரோ அப்பர் அடிகள்! நமக்கு உண்மையான துணையும் சுற்றமும், பொருளும், மற்றும் எல்லாம் சிவபெருமான் ஒருவனே என்பதைப் பசுமரத்தாணிபோல் பதிய வைத்திருக்கின்றது இப்பாடல். இவ்வாறு பொய்யான உறவுகளைப் போக்கி, மெய்யான உறவினை மெய்ப்பிக்கும் இவ்வருமைத் திருத்தாண்டகப் பாடலை ஓதி ஓதி உள்ளம் நெக்குருகுவதன்றி, அதன் உள்ளடங்கிய பொருளையெல்லாம் விள்ளத்தான் முடியுமா? இப்பாடலின் பொருளைத் தொழுது துதிப்பதன்றி எழுதிக் காட்டொணாதே.

# நீறணி அம்பலவன்

ஒரு தலைமகள் ஒரு தலைமகனைத் தனியாய் ஒரு சோலையில் தற்செயலாய் சந்தித்தாள். இருவரிடையும் காதல் பிறந்தது. பிறகு பல நாட்கள் அவனை அவ்வாறே அவள் சென்று கண்டு பழகிவந்தாள். எப்பொழுதும் அவனுடன் பிரியாது இருக்க முடியவில்லையே என்றும் வாடினாள். இஃது அவள் தோழிக்குத் தெரியாது. தலைவி பிரிந்து சென்று வந்தபொழுதெல்லாம் தோழி கேட்ட தற்குத் தான் ஓர் அழகான மயில் நின்று ஆலுவதைச் சென்று கண்டு வந்ததாகக் கூறி உண்மையை மறைத் தாள். மகிழவேண்டிய அதற்கு வாட்டமுறுவானேன் என்று தோழி கேட்டபொழுது தலைவி "நீயும் அந்த மயிலைக் காணப்பெற்றிலையே என்று வாடினேன்" என்றாள். இதைக் கேட்டதும் தோழிக்கு ஐயம் உண் டாகியது. ஒருநாள் அவள் தலைவியின் பின் மறைவாகச் சென்று உண்மையை அறியலானாள். தலைவி கண்டு வந்த மயில் உண்மையில் மயில் அன்று என்பதையும், தலைவியின் காதலனே அந்த மயில் என்பதையும் தோழி உணர்ந்து கொண்டாள். அதன்பின் தலைவனே தோழி யிடம் சென்று குறையிரந்து, தலைவியுடன் தன்னைச் சேர்த்துவைக்கும்படி வேண்டவும், தோழியும் குறை நேர்ந்து பகற்குறியின்கண் குறியிடத்திற்குத் தலைவியை அழைத்து வருவதாக வாக்குக் கொடுத்தாள். அவ்விதம் ஒப்புக்கொண்டபடி தலைவியைத் தலைவனிடம் எவ்வாறு அழைத்துச் செல்வது என ஆராயலானாள். தலைவனைத் தான் கண்டுகொண்டதாகத் தலைவியிடம் கூறினால், ஒரு வேளை அவள் நாணத்தால் மறைக்கக்கருதி மறுத்துவிடக்

கூடும். அவ்விதம் நேர்ந்துவிடாதபடி அவளைத் தந்திர மாய்க் கூட்டிச் செல்லவேண்டும்.

எனவே, "தினைப்புனம் காத்து வருவோம், வா" என்று தோழி தலைவியை அழைக்கிருள். தினைக்காவலைத் திடீரென்று இவள் ஏன் பெரிதாகக் கருதிஞள் என்ற ஆராய்ச்சி தலைவிக்கு நிகழாதபடி, உடனே, "நாம் விளையாடியும் வரலாம், வா" என்று அழைக்கிருள். என்னென்ன விளையாட்டுகள்? அது மலைப் பக்கம் ஆனதால், குகை வாயிலில் கூவியழைத்து எதிரொலி கேட்டு மகிழ்தலாகிய சிலம்பெதிர் கூவுதல் என்னும் விளையாட்டு, சிறு வீடு கட்டிச் சிறு சோறு சமைத்தல், சுனை நீர் பொங்கக் குளிர்புனலிற் பாய்ந்து குள்ளக் குடைந்து குதித்துக் குளித்தல், மலர்களைப் பறித்து மாலை தொடுத்தல் ஆகிய இவற்றையெல்லாம் செய்து கொண்டு, பிறகு, தினமும் தலைவி கண்டதாகச் சொன் ஞளே அந்த மயிலையும் பார்த்துவிட்டு வரலாம் என்று தோழி அழைக்கிருள். இவ்வாறு அவள் அழைப்பது எவ்விடத்திற்குத் தெரியுமா? பணிவார் வினையைப் போக்கத் திருநீறு அணியும் சிவபெருமானின் மலையாகிய கயிலாய மலைக்குத்தான்! பாடல் வருமாறு :

"தினைவளங் காத்துச் சிலம்பெதிர் கூய்ச்சிற்றில்
முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து
தொழுதெழுவார்
வினைவளம் நீறெழ நீறணி அம்பல வன்மலையிற்
புனைவளர் கொம்பரன் ஞயன்ன காண்டும் புனமயிலே."

மயிலையும் கண்டு வருவோம் என்று சொன்ஞள், தலைவி மருது வருவாள் என்னும் கருத்தாலும், தனக்கு உண்மை ஒருவாறு தெரியும் என்பதைக் காட்டவும் என்க. தலைவனையும் கண்டுவரலாம் என்று தோழி

கூறுவது நாகரிகமாகாது ஆதலால், குறிப்பாக 'அன்ன காண்டும் புனமயிலே' என்றாள்.

இது சிற்றின்பத் துறையில் 'குறியிடத்துக் கொண்டு சேறல்' என்பதாகும். ஆனால் இது வெறும் அகத் துறையில் அமைந்த ஊனப் பாடல் அன்று; பேரின்பத் துறையில் அமைந்த பெருஞானத் திருப்பாடல் என்பதை நாம் அறிதல் வேண்டும். 'அருமையிற் சிவத்தை உயிரிடத்துய்த்தல்' என்பது இந்தப் பேரின்பத் துறையாகும். இதில் மாணிக்கவாசகர் நம்மை நேரே சிவனிடத்துக்கே அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்துவைக்கிறார். தில்லைக் காட்சியைக் காட்டி நம்மைக் கயிலை மலைக்குக் கை காட்டி அழைக்கிறார். சிவனை அடைவதற்கு உரிய வழி வகைகளை உள்ளுறையாக அமைத்து அழகுபெற அவர் காட்டுவது வியத்தற்குரியதாகும். ஆகவே சிவத்தை உயிரிடத் துய்த்தல் என்று சொல்வதைவிட, உயிரினைச் சிவத்திடத்துய்த்தல் என்று துறையமைதி கூறுவது மிகவும் ஏற்புடையதாக இருக்கும். இதனைச் சிறிது விளக்குவாம்:

உலகியலில் தினைவளம் காத்தல் என்பது விளைந்து கிடக்கும் தினைப்புனத்தைப் பறவைகளும், விலங்குகளும், வேடர்களும் சூறைகொண்டு விடாமல் காப்பதாகும். பேரின்பத் துறையில், உண்மை என்னும் உழவைச் செய்து, அன்பு என்னும் விதையை விதைத்துப் பொய்ம்மை என்னும் களையைக் களைந்து, பொறுமை என்னும் நீரைப் பாய்ச்சித், தகவு என்னும் வேலியைக் கட்டித்,தம்மையும் நோக்கிக் கண்டு செம்மை மனத்தராய்ச் செயற்படுவதுதான் புனம் காத்தலாகும். இங்ஙனம் செம்மை மனத்தராய் ஒழுகும் சீவன் முத்தர்களுக்குச் சிவானந்தம் மேலிடுவதை விளக்க எழுந்ததுதான் வள்ளியம்மை திருக்கலியாண வரலாறு என்பதையும் நாம் இங்கு

நினைவு கூர்தல் தரும். இதனை அப்பரடிகள் விளக்கி யுள்ளமை ஈண்டு அறிதற்பாலது.

"மெய்ம்மையாம் உழவைச் செய்து..."

சிலம்பெதிர் கூவுதல் என்பது மகளிர் விளையாட்டுக் களுள் ஒன்று. மலைக்குகை வாசலின் முன் நின்று கூவி, அங்ஙனம் கூப்பிட்ட குரலே மீண்டும் புரண்டு எதிரொலி யாய்த் தம்மிடம் வரக்கண்டு சிறுமிகள் மகிழ்வார்கள். பின்னர்க் கணவன் கூறுவதையே தானும் கூறிவாழும் வாழ்க்கையை மேற்கொள்ளும் ஒரு பெண்ணுக்கு இஃது ஒரு நல்ல பயிற்சியாகப் பண்டைக் காலத்தில் கருதப் பட்டது. இஃது உலகியல். பேரின்பத் துறையில், உயிர் தன் முனைப்பு அடங்கித் தன் அறிவு இச்சை செயல்களை யெல்லாம் இறைவன் வசம் கொடுத்து விட்டு, அவனு டைய அறிவு இச்சை செயல்களிலே அருள் அறிவு கொண்டு பணியாற்றுதல் வேண்டும். இதற்குப் பயிற்சி யாக, இதயமாகிய குகையிலே சிவாய நம ஓம் என்னும் ஐந்தெழுத்தோடு கூடிய ஓங்கார மந்திரத்தை ரீங்காரம் செய்யவிட்டு எதிரொலி கேட்டு உயிர்ப்பு அடங்கி இருத் தலே சிலம்பெதிர் கூவுதலாகும்.

சிற்றில் முற்றிழைத்தலாவது, சிறுவீடு கட்டிச் சிறு சோறு சமைத்துச்சிறு பெண்கள் விளையாடும் விளையாட்டு. பின்னர்த் தாம் நடத்தும் இல்லற வாழ்க்கைக்கு வழி கோலுவதாகவுள்ளதொரு சிறந்த பயிற்சி இது. பேரின் பத்துறையில், சீவன் முத்தர்களாக வுள்ளவர்கள் இன்ப மாகிய வீட்டினை இம்மையிலேயே அடைந்து வாழ்தல். சிவன் திருவடிக்குத் தொண்டு செய்து வாழ்தலே இத்த கைய நிலையைத் தரும். அதுவே இங்குச் சிற்றில் இழைத்தல் என்பதாகும்.

உலகியலில், மகளிர் பொய்கையில் குளித்துப் போது போக்குதல் சுனைவளம் பாய்தலாகும். பேரின்பத்து றை

யில் சுனைபாய்தல் என்பது, மலபரிபாக முற்ற உயிர்கள் சிவனருளில் தோய்ந்து குடைந்து குடைந்து ஆடுதலாகும். இதனைத் திருவெம்பாவைப் பாடல்களிற் பரக்கக் காணலாம்.

துணைமலர் கொய்தல் என்பது பெண்கள் விளையாடவும் தலையிற் சூடவும் வேண்டும் மலர்களைப் பறிப்பதாகும். பேரின்பத் துறையில் சிவனடியார்கள் சிவனுக்குகந்த மலர்களை முறைப்படி கொய்து அர்ச்சனை செய்தலைக் குறிக்கும்.

இவை யனைத்தும் சிவனை அடைவதற்குரிய நெறி முறைகள். இவற்றைக் குறிப்பாக நமக்கு உணர்த்திய தோடு சிவனை அடைவதற்குச் சிறந்த சாதனமான மற்றும் ஒன்றை வெளிப்படையாகவும் கூறியுள்ளார். எவ்வாறு கூறினர் ? "தொழு தெழுவார் வினைவளம் நீறெழ நீறணி யம்பலவன்" என்ருர். தொழா நின்று துயிலெழுவா ருடைய வினையினது பெருக்கம் பொடியாகத் தன் திரு மேனிக்கண் திருநீற்றை யணியும் தில்லைச் சிற்றம்பலவன் என்பது அதன் பொருள். துயிலெழுவார் என்றது, துயி லெழுங் காலத் தல்லது முன்னுணர் வன்மையான், உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் என்றவாறு. நீறணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும் எழிலுடைமை யான் அக்கோலம் தொழு தெழுவார் உள்ளத்து நீங்காது நிற்றலான் ஆண்டுள்ள வினை நீரும் என்னும் கருத்தான் வினைவளம் நீறெழ நீறணியம்பலவன் என்ருர். குழந்தை யினது பிணிக்குத் தாய் மருந்துண்டாற்போலத் தொழு தெழுவார் வினைக்குத் தான் நீறணிந்தான் என்க. நம்மு டைய வினைச்சுமையானது மலைபோலக் குவிந்து கிடத்த லான் நாம் அணியும் திருநீறு மட்டும் அதனைப் பொடி யாக்கப் போதா என்று சிவபெருமானும் நம் மீது கொண்ட பெருங்கருணைப் பெருக்கால் திருநீறு நிறையப்

பூசுகின்முன் என்க. சிவன் அணிகின்ற திருநீறு அவனது பேரருளேயே காட்டுவதாகும். இதனல் சிவனே அடைவதற்குத் திருநீறு அணிவதும், சிவனது திரு நீறணிந்த கோலத்தைத் துயிலெழும் பொழுது பணி வதும், அத்திருக் கோலத்தை இடைவிடாமல் சிந்தித் திருத்தலும் சிறந்த சாதனங்களாகும். இப்பயிற்சியால் நம் வினைகள் பொடியாவது திண்ணம். இவ்வாறு தீராத வினைகளையெல்லாம் தீர்த்துவைப்பது திருநீறு என்பதை அப்பர் அடிகளும் குறிக்கின்முர் :

"சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
அந்தரத் தமரர் பெம்மா னனல்வெள் ளூர்தி யான்தன்
மந்திரம் நமச்சி வாய வாகநீ றணியப் பெற்முல்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்
டன்றே."

நீறணிந்த கோலம் நெஞ்சைப் பிணிக்கும். அதை நினைக்க நினைக்க நெஞ்சை உருக்கும். சிவன் தோளில் திருநீறு பூசியிருக்கும் கோலத்திலே மனதைப் பறி கொடுத்து அக்காட்சி மறையவும் நெக்கு நெக்குருகி நீள நினைந்து தவித்து மணிவாசகர் எவ்வாறு பாடுகிமுர் பாருங்கள் :

"மாறி நின்றெனேக் கெடக்கிடந் தனேயையெம்
மதியிலி மடநெஞ்சே
தேறு கின்றில மினியுனேச் சிக்கெனச்
சிவனவன் திரள்தோள்மேல்
நீறு நின்றது கண்டனே யாயினும்
நெக்கிலே இக்காயம்
கீறு கின்றிலே கெடுவதுன் பரிசிது
கேட்கவுங் கில்லேனே."

சிவனது திரண்ட தோள்களிலே பூசிய திருநீறு மணிவாசகரின் கண்ணேயும் கருத்தையும் கவர்ந்து

என்றும் மாருது நின்றது. "சிவனவன் திரள் தோள்மேல் நீறு நின்றது கண்டனே" என்று தமது மறவாத நெஞ்சிற்கு அது மறந்தது போல எடுத்துக் கூறுகிருர். தில்லைக் கூத்தப் பெருமானின் பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீற்றைக் காணப் பெற்ருல் மனிதப் பிறவியும் இம்மா நிலத்தில் வேண்டுவதே என்று சிவனது சுண்ண வெண்ணீறு சண்ணித்த சுந்தர வேடத்தில் தோய்ந் தழுந்தி அப்பரும் பாடவில்லையா ? நீறுபூத்த முழு நெருப்பாம் சிவனது திருமேனி. அஃது ஓர் அழகான அரும் பெரும் சோதி. அந்த நீறு பூத்த நெருப்பைத் தொழு தெழுவார்களே முதல்தேவர் என விளங்குவார்களும் தொழுவார்கள் என்று அப்பர் பாடுகிருர் பாருங்கள் :

"முழுத்தழல் மேனித் தவளப்
 பொடியன் கனகக் குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள்
 பிரானை யிகழ்திர் கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு
 வானைத் தொழுத பின்றைத்
தொழப்படுந் தேவர் தம்மால்
 தொழுவிக்கும் தொண்ட ரையே."

இங்கே "எழிற்பெருஞ் சோதியை" என்ருர். உலகில் உள்ள பொருள்களுக்கெல்லாம் அழகை அளிப்பவன் சிவபெருமான். அவன் அழகுக்கு அழகு செய்யும் பேரழகன். "புவிக்கெழிலாம் சிவக்கொழுந்து" என்பது அப்பர் வாக்கு. அத்தகைய அழகனுக்கும் அழகைக் கொடுப்பது திருவெண்ணீறு.

மதுரை சோமசுந்தரக் கடவுள் சைவச் சிறுவன் தருமிக்காக ஒரு தமிழ்ப் புலவனுய்த் தோற்றம் செய்தான். அச்சுந்தரவிடங்கனின் தோற்றம் தான் என்னே! அவனுடைய விரிகதிர்ச் சட்டையும் தெரிமணிக் கடகமும்

கண்ணைப் பறித்தன. தலையிற் சுடர்முடி, கழுத்திற் கண்டிகை, மார்பிடை மதாணி, விரல்களிற் கணையாழி, காதிலோ வைரக்குண்டலம். அவன் பொன்னார் மேனியின் பொற்பையெல்லாம் அவ் அணிகள் வாரி விழுங்கின. அவன் விலாடத் திட்ட திருநீறு திரிபுண்டரமாகத் திகழ்ந்தது. அவ்வெண்ணீற்றின் நிலவொளி பொய்யிருளைக் கிழித்துத் தள்ளியது. நெற்றித் திருநீறு மூன்று கோடாக விளங்கினது, முத்தமிழிலும் தான் வல்லவன் என்பதை முத்திரையிட்டு முழக்கம் செய்ததாம் :

"கண்டிகை மதாணி யாழி
கதிர்முடி வயிரம் வேய்ந்த
குண்டலம் குடிகொண் டாகத்
தழகெலாம் கொள்ளை கொள்ளத்
தண்டமிழ் மூன்றும் வல்லோன்
தானெனக் குறியிட் டாங்கே
புண்டரம் நுதலிற் பூத்துப்
பொய்யிருள் கிழித்துத் தள்ள."

அக்காலத்தில் சொக்கலிங்கப் பெருமான் தமிழ்ப் புலவராய்த் தோன்றியருளிய திருவிளையாடலை யாம் கண்டறியோம். ஆனால் இன்றும் என்றும் எம்போலியர் கண்டு மகிழ்ந்து கையெடுத்தேத்த இச்சொல்லோவியத்தில் அச்சுந்தரவுருவனை—சொல்லற் கரியானை—உள்ளபடி தீட்டிய பரஞ்சோதி முனிவரின் வியத்தகு கவித்திறனையும் உதவியையும் நாம் என்றும் பாராட்டுதல் வேண்டும். இப்பாடலைப் படிப்போர் மனக்கண் முன் தமிழீன்த் தந்த அத்தையல் பாகன் இன்னகை ததும்ப எழிலொளி வீசித் திருநீறு பூசி முன்னுற வருவது முற்றிலும் உறுதி.

"காண இனியது நீறு கவினைத் தருவது நீறு"

என்றும்,

"சுந்தரமாவது நீறு"

என்றும் சம்பந்தர் பாடினர். முதன் முதல் சிவபெருமான் சிவஞானப் பாலூட்டி ஆட்கொண்ட பொழுது ஞானப் பிள்ளையாரின் உள்ளத்தைப் பிணித்தது சிவனது திரு நீற்றுக் கோலமேயாகும். அதனைச் சம்பந்தர் தாம் பாடிய முதற்பாடலிலேயே "காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளங்கவர் கள்வன்" என்று சுட்டியுள்ளார். அத்திரு நீற்றுக் கோலத்தைக் காழிவள்ளலார் எந்த நிலையிலும் மறந்ததில்லை. உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் மறந்ததில்லை. திருநாவுக்கரசரை விட்டுப் பிரிந்து, சம்பந்தர் பாண்டி நாட்டுக்குச் சமணரை வெல்லப் புறப் பட்டபொழுது, அவர் பல்லக்கில் ஏறிய பரிசினைச் சேக்கிழார் பகர்கின்றார்:

" திருநாவுச் கரசரும் அங்கிருந்தார் இப்பால்
திருஞான சம்பந்தர் செழுநீர் முத்தின்
பெருநாமச் சிவிகையின் மீதேறிப்
பெற்றம் உயர்த்தவர்தாள் சென்னியின்
மேற் பேணும் உள்ளத்
தொருநாமத் தஞ்செழுத்தும் ஓதி வெண்ணீற்
றொளிவிளங்குந் திருமேனி தொழுதார் நெஞ்சில்
வருநாமத் தன்புருகும் கடலாம் என்ன
மாதவர் ஆர்ப்பொலி வையம் நிறைந்த தன்றே."

எந்தக் காரியத்தைத் தொடங்கும் பொழுதும் சிவனது திருநீற்றுக்கோலத்தை மனத்தில் நினைவு கூர்ந்துதொடங் கினல் வெற்றி நிச்சயம் உண்டு. நித்தலும் பத்திரிகை களிற் காணப்படும் விபத்துக்களை யெல்லாம் இப்பழக்கத் தால் நாம் குறைத்துவிடுதல் கூடும். சம்பந்தர் திருவைந் தெழுத்தை ஓதி இறைவனது திருநீற்றுக் கோலத்தைத் தொழுது மதுரைப் பயணத்தைத் தொடங்கினர். அதனல் வெற்றியும் கண்டார். திருக்கோவைத் திருப்பாடலில் "தொழுது எழுவார்" என்ற மணிவாக்கில் இப்பொருளும் தொனிப்பதை எளிதிற் காணலாம். நாம் எந்தக்

காரியத்தை நினைத்து வெளியில் எழும்பொழுதும் சிவனது திருநீற்றுக் கோலத்தை நமச்சிவாய என்று ஓதி நினைதல் வேண்டும். இவ்வுண்மையைச் சம்பந்தர் தேவாரப் பாடல் ஒன்று மேலும் விளக்குகிறது:

"வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ."

இவ்வருமைத் தேவாரப் பாடலை விளக்கும் முகத்தான் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்துக் கூறுவதாவது:

"வெந்த சாம்பல் விரையென் பதுதம
தந்த மில்லொளி யல்லா வொளியெல்லாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமுஞ் சாற்றினர்."

வெந்த சாம்பல் என்றது காடுடைய சுடலைப் பொடியாகும். சுயஞ்சோதி என்று வேதங்கள் கூறும் தனது அழிவில்லாத ஒளியல்லாத ஏனைய ஒளிகள் எல்லாம் ஊழியின் முடிவில் தன்னிடத் தொடுங்கித் தனது இரௌத்திரி என்னும் சத்தியால் நீறுய்விட, அச்சுடலைப் பொடியைப் பூசித் தன் திருமேனிக்கு ஓர் அழகாகக் கொண்ட முறைமையைச் சம்பந்தர் அவ்வாறு பாடினர் என்று சேக்கிழார் விளக்கியுள்ளார்.

அந்தமில்லொளியல்லா வொளியெல்லாம் வந்து வெந்தற என்றதில் அந்தமில் ஒளி என்றது சமவேத சத்தியாகிய பராசத்தி யொளியை. அச்சத்தி சிவத்தோடு அபேதமாய் நிற்றலின் அந்த மில்லொளி என்றார். அல்லா வொளி அச்சத்தி பிரகிருதியை அதிட்டிக்குங்கால் தோன்றும் காரிய ரூபம். அது நிலையாமையை யுடைமையின் அல்லாவொளி என்றார். புருடன், மான், அகங்காரம், மனம் தன்மாத்திரை, ஞானேந்திரியம், கன்மேந்திரியம் ஆகிய

இவைகளும், இவற்ருலாய உலகங்களும், உடலங்களும், நுகர்ச்சிப் பொருள்களும், இவைகளைப் படைத்துக் காக்கும் நான்முகன், திருமால், இந்திரன், சந்திரன், சூரியன் முதலிய தேவர்களும் இரௌத்திரி என்னும் சத்தியால் மகாசம்மாரத்தில் (பேரூழிக் காலத்தில்) எரிக்கப் பட்டுத் தன்னிடத் தொடுங்குதலில், “எல்லாம் வந்து வெந்து அற” என்றும், அப்பிரளயத் தாண்டவத்தில் அப்பொடியைத் திருமேனிக்கு அணியாகக் கொண்டு நடித் தலின், “மற்றப் பொடியணி சந்தமாகக் கொண்ட வண்ணமும்” என்றும் கூறினர். இறுதியைச் செய்யும் முதல்வர் எனக் கூறி, அச்சுடலைப் பொடியணியும் இயல் புடையர் என்று அருளியதாம்.

“அடு சுடலைப் பொடி வைத்தார் அழகும் வைத்தார்” என்று பாடினர் அப்பர் அடிகள். மீண்டும் அவ்வழகிலே ஈடுபட்டுச் “சுட்டங்கங் கொண்டு துதையப் பூசிச் சுந்தர னாய்ச் சூலங்கை யேந்தினனே” என்றும் பாடியுள்ளார். யாருடைய அங்கத்தைச் சுட்டுச் சுடலைப் பொடியாக்கி இவ்வாறு சுந்தர வண்ணமாய்ப் பூசினன் சிவன் என்பதை மேலும் ஒரு வண்ணப் பாடலில் திண்ணமாய் எண்ணம் கொண்டியம்புகின்ருர் அப்பர்:

“ ஒளிவளர் கங்கை தங்கு மொளிமால் அயன்தன்
உடல் வெந்து வீய சுடர் நீறு
அணி கிளரார வெள்ளை தவழ் சுண்ண வண்ணர்
தமியா ரொருவர் இருவர்
களி கிளர் வேட முண்டொர் கடமா வுரித்த
உடைதோல் தொடுத்த கலனர்
அணி கிள ரன்ன தொல்லை யவள் பாக மாக
எழில் வேதம் ஓதும் அவரே.”

பேரூழிக் காலத்திலே உலகெல்லாம் நெருப்பாகித் தீய்ந்து பிரமனும் திருமாலும் நொந்து வெந்து சாம்பலாகும்

போதும் அவர்கள் உடற் சாம்பலை எடுத்துத் தன் திரு மேனியில் அழகு பெறப் பூசுவானும் சிவபெருமான். இவ்வாறு சிவன் நீறு அணிவதைக் கலித் தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலிலும் காணலாம். பல பெரும் போர்களை வென்று முப்புரத்திலுள்ளாரையும் எரித்து அந்த நீற்றை யணிந்து நீ பாண்டரங்கக் கூத்து ஆடும் பொழுது மெல்லிய மூங்கில் போலும் தோள்களையுடைய வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையுடையாளாகிய உமாதேவி தூக்கினை (தாளம்) உதவுவாளோ என்னும் பொருள்பட வரும் பகுதி வருமாறு:

"மண்டமர் பல கடந்து மதுகையால் நீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்காற் பணையெழில்
அணைமென்தோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ".

பத்ம புராணத்தில் — "தானத்தினுல் என் பயன்? நியமவிரதங்களால் என் பயன்? அத்தியயனத்தால் என் பயன்? யாக வேள்விகளால் என் பயன்? திருநீறு அணிவதால் ஒருவன் சிவகணமாவது நிச்சயம். சடை யுடையனுயிருந்தாலும், முண்டிதனுயிருந்தாலும், நீற ணிந்த மேனியையுடையவன் சிவசாருபத்தை யடைந்து சிவனேடு கூடி மகிழ்கிருன். அதனுல் திருநீறு அணிவதற்கு ஒப்பான புண்ணியமும் இல்லை, அதற்கு ஒப்பான தவமும் இல்லை. சடையும் திருநீறும் உடைய வன் எக் குலத்தவனுய் இருந்தாலும் சிவயோகி யாவான்" என்று கூறப்பட்டுள்ளது. அதனுல், திருநீறு நெற்றியில் பூசியவர் எவராயிருந்தாலும், அவரைப் பற்றிய ஆராய்ச்சி எதுவுமின்றிக் கலங்காத மனத்துடன் சிவன் திருக் கோலத்தை மனத்துட் கொண்டு வணங்குதல் வேண்டும் என்று அப்பர் வகுத்துள்ளார்:

"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டால் உள்கி
உவராதே யவரவரைக் கண்ட போது
உகந்தடிமைத் திறம்நினைந்தங் குவந்து நோக்கி
இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சின் உள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே."

திருஞானசம்பந்தர் "நாவணங்கியல்பாம் அஞ்செழுத் தோதி நல்லராய் நல்லியல்பாகும், கோவணம் பூதி சாதனம் கண்டால் தொழுதெழு குலச்சிறை" என்றும், "சிவன் திரு நீற்றினை வளர்க்கும் பந்தணை விரலாள் பாண்டிமாதேவி" என்றும் போற்றிய குலச்சிறை நாயனாரும் மங்கையர்க் கரசியாரும் தேவாரத்திலேயே ஒரு பதிகம் முழுவதும் இடம் பெற்றுவிட்டமை யாவரும் அறிந்ததாகும்.

திருநீறு பூதி என்றும் புகலப்படும். அது பரம், அபரம் என்னும் செல்வத்தைக் கொடுத்தலால் விபூதி என்றும் கூறப்படும். பரவிபூதி என்பது மோட்ச இன்பம், அபரவிபூதி சுத்த போகம். இடையூறுகளை (விக்கினங்களை)ப் போக்குதலால் காப்பு (இரட்சை) என்றும் சொல்லப்படும். தானே விளங்குதலாலும் பாவங்களை எரித்தலாலும் சாம்பல் (பஸ்மம்) என்றும் சாற்றப்படும்.

நால்வகைப் பூதியாவன கற்பமும், அனுகற்பமும் உபகற்பமும், அகற்பமும் என இவை. கற்பமாவது கபிலைப் பசுவின் கோமயத்தைத் தாமரையிலை முதலிய வற்றில் சத்தியோசாதத்தாலேற்று மேல் வழும்பு நீக்கி, வாமதேவத்தால் பிசைந்து உண்டை செய்து சுத்தமான இடத்தில் உலர்த்திச் சிவாக்கினியால் எரிப்பதாம்.

அனுகற்பமாவது, வனத்தில் சித்திரை மாதத்திற் சென்று உலர்ந்த கோமயத்தை எடுத்துச் சூரணம் செய்து கோசலம் வார்த்துப் பிசைந்து உருட்டிச் சிவாக் கினியால் எரிப்பதாம்.

உபகற்பமாவது, காட்டில் தாவாக்கினியால் வெந்த சாம்பலைப் பஞ்ச கௌவியம் சேர்த்துப் பிசைந்து சிவாக் கினியால் எரிப்பதாம்.

அகற்பமாவது, மேலே கூறிய முறைகளானன்றி வேறு விதங்களால் உண்டாக்குவது.

திருநீற்றைத் தரித்தற்குரிய விதியாவது புத்தி-முத்திகட்குக் கங்கையினும் பரிசுத்தமான நால்வகைப் பூதியை அதர்வ சிரசு, சுவேதாசுவேதரம், தைத்திரியம், கைவல்யம், முதலிய உபநிடதங்களிலும், ஸ்ரீகாமிகம் முதலிய சைவாகமங்களிலும், அவைகளின் அநுவாதங் களான மனு, பராசரம் முதலிய மிருதிகளிலும், சைவ புராணங்களிலும், இதிகாசங்களிலும், வருணத்துக் கேற்ப உத்தூளனமாயும் திரிபுண்டரமாயும் தரித்தல் வைதிக சைவர், சித்தாந்த சைவர் என்னும் இருவர்க்கும் உரித்தாம் என விதிக்கப்பட்டும் ஏனைய புண்டரங்கள் ஆகா என விலக்கப்பட்டும் உள்ளன.

உத்தூளனமாவது திருநீறு அணிதற்குரிய இடமல் லாத இடமொழித்து, மூன்று வருணத்துக் கிரகத்தரும், நான்கு வருணத்து விரத்தரும் வேதாகம விதிப்படி தலையுச்சி, நெற்றி, முகம், மார்பு, நாபி முதலிய இடங் களில் நீரால் குழைத்துப் பூசுவது. விரத்த மாதவர்க்கும் மறையவர்க்கும் சர்வாங்க உத்தூளனம் உரித்தாகும்.

திரிபுண்டரமாவது,-தர்ச்சனி, மத்திமை, அநாமிகை என்னும் மூன்று விரல்களால் முப்பத்திரண்டு, பதினாறு, எட்டு, ஐந்து என்னும் இடங்களில் அங்குலக் கிரம

மாகத் தரிப்பது. இவற்றை விரிவாகத் திரு. சிவக் கொழுந்து தேசிகர் கிரியா தீபிகையிற் கண்டு கொள்ளலாம்.

உச்சி முதல் பாதம் ஈருக முப்பத்திரண்டு அங்கங் கட்கும் அட்ட மூர்த்திகள் எண்மரும், வித்தியேசர் எண்மரும், திக்குப்பாலகர் எண்மரும் பிரீதியடைவார்கள். நெற்றி முதல் முதுகு ஈருகப் பதினுறு அங்கங்கட்கும் அட்ட மூர்த்திகள் எண்மரும், வித்தியேசர் எண்மரும் பிரீதியடைவார்கள்.

தலைமுதல் முதுகு ஈருக எட்டு அங்கங்கட்கும் பிரமனும் சப்தரிஷிகளும் பிரீதியடைவார்கள்.

நெற்றி முதல் உந்தி ஈருன ஐந்து அங்கங்கட்கும் சதாசிவர், மயேஸ்வரர், உருத்திரர், விண்டு, பிரமன் ஆகிய ஐவரும் பிரீதியடைவார்கள்.

ஏனைய,புண்டரங்களாவன.—ஊர்த்த புண்டரம், திரி சூல புண்டரம், கூர்ச்ச புண்டரம் முதலியன. இவை அவைதிகங்களாதலின், சூத சம்மிதை முதலியவற்ருல் விலக்கப்பட்டன.

# ஒரு நாடகம்

ஒருவரும் இல்லாத காடு. அவர்கள் இருவரும் மட்டும் போயினர். அவர்கள் இளங் காதலர்கள். அவன் ஓர் ஆணழகன், அவளோ கட்டழகி. அவனை முதல் முதல் கண்ட நாளிலிருந்து இவ்வுலகம் முழுதிலும் அவன் ஒருவனே தனக்குரிய ஆடவன் என்பதை உணர்ந்து காதலித்தவள். அன்று முதல் பெற்றோரும், உற்றோரும், மற்றோரும் அவள் காட்சியில் மறைந்தனர். கட்டுப்பாடுகளைக் கைகளைந்தாள். உலக ஆசாரங்களையும் உதறினாள். கற்பு ஒன்றையே கடமையாகக் கடைப் பிடித்தாள். தன்னையும் மறந்து தலைவன் தாளையே தலைக்கொண்டு விட்டாள். பெற்றோர்கள் கொடுக்க மறுத்ததால் அவர்களை மறைத்துக் காதலனோடு அவன் ஊருக்குப் புறப்பட்டாள். தீபாவளிக்கு அவன் வீட்டை அடைந்து விடவேண்டும் என்ற எண்ணம். வழியில் அந்தக் கொடுங் கானத்தைக் கடக்க வேண்டி நேர்ந்தது.

அவனுக்கு அவள்மேல் ஒரே மயக்கம். அவளுக்கும் அவன் மேல் பிரேமை. அவனது கட்டான உடலில் இளமைத் துடிப்பும் எழிலின் வனப்பும் ஒவ்வோர் அங்கத்திலும் தவழ்வதுகண்டு அவள் உள்ளம் பூரித்தது. அவனும் செல்லும் பொழுதே, வைத்தகண் வாங்காமல் அவள் அழகையெல்லாம் ஆரப் பருகினான். அவள் முன்னழகையெல்லாம் ஒருவாறு முடித்த பின்னர், பின்னழகையும் ஒருவாறு பார்க்கலுற்றான். நீர்க்குமிழியினும் மெல்லிய சிவந்த பாதங்களை அவள் குந்தி மிதித்துக் குறுகி நடந்தாள். அவள் தலைமேல் அவன் வைத்துக் கட்டியிருந்த மலர்களின் சுமையோ பாரமாக அவளை

அழுத்தியது. வழிநடந்த வருத்தம் வேறு. அவள் தளர் நடையிட்டுத் தள்ளாடி நடந்தாள். அந்த மயிலனையாளின் அன்னநடை அவன் கண்களுக்குப் பெருவிருந்தாக இருந்தது. அவளை அன்பு வார்த்தைகளால் தழுவிய வண்ணம் நடத்திச் சென்றான்.

இல்லை, சென்றான் என்று சொல்லுதல் பொருந்தாது. நின்றான் என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில், அவளும் முன்னேறிச் சென்றால் அல்லவா அவன் செல்ல முடியும்? அவன் அடிக்கடி தன் தோளின் பின்னாகப் பார்வையைச் செலுத்தித் தன் பின்னழகைப் பார்ப்பது அவளுக்கு வெட்கமாக இருந்தது. மேலும் அவளுக்கும் ஆசை இருக்காதா? அவளும் அவன் அழகைப் பார்த்தும் பாராமலும் களித்துநோக்கிக்கொண்டுதான் வருகிறாள். ஆனால் அவன் அவள் கூடவே நடப்பதுபோல் இருந்தாலும், அவள் பின்னழகில் ஈடுபட்டுச் சற்றுப் பின் தள்ளியே வருவதால், அவனுடைய மிடுக்கான பின்தோற்றப்பொலிவையும், விரைந்து செல்லும் நடையழகையும் அவளால் நன்கு பருகக் கூடவில்லை. அவற்றைக் காணும் வேட்கையால் அவளும் அவனுக்குச் சற்றுப் பின் வாங்கினாள். தன்பார்வை தடைப்படுவதை அறிந்து அவன் இன்னும் சிறிது பின் வாங்கினான். அவளும் முன் நடந்து செல்வதை நிறுத்திப் பின் தங்கி விட்டாள். இருவரும் தாம் செய்வது இன்னது என்று உணராமலே அவ்வாறு பின்தங்கி நடக்கலாயினர்.

பொழுது மயங்கும் அந்திவேளை. விரைவில் இருள் வந்து சூழ்ந்து விடும். அதற்குள் அருகிலுள்ள ஏதாவது ஓர் ஊர்போய்ச் சேரவேண்டும். வேகமாய் முன்னேறி நடக்க வேண்டாமா? அவர்களோ பின்வாங்கி நிற்பதில் போட்டியிட்டு நின்றனர். இவ்வாறு இவர்கள் பின் நடந்தால் புறப்பட்ட இடத்திற்கல்லவா போய் விடுவார்கள்

போல் இருக்கிறது ? இவர்கள் எவ்வாறு சுரத்தைக் கடக்கப் போகிறார்கள் ? ஆனால் அவர்களுக்கு அதைப் பற்றியெல்லாம் கவலையில்லை. உலகையே மறந்து விட்ட நிலை அவர்களின் நிலை! அஃது அவர்கள் அழகு படுத்திய பாடு.

நல்ல செழுமையான தாமரை மலரில் குடைந்து குடைந்து, இனிய மதுவைக் குடித்த வண்டு கிறங்கி மயங்கிச் சுற்றிச் சுழன்று அம்மலரைவிட்டுப் போகாது அதிலேயே ஆடிப்பாடி அயர்ந்து நிற்பது போன்ற காட்சி தான் அவர்களின் காட்சி. அவர்களுடைய கண்கள் வண்டுகள்போல் ஆயின. ஒருவருக் கொருவர் தாமரை மலர்கள் ஆயினர். அவர்களின் அழகு அத்தாமரை மலரி லுள்ள தேன் ஆயிற்று. தேனை வண்டு சுவைக்காமல் இருக்குமா ? வண்ணத் தாமரையைக் கண்டால் வண்டு மதுர ராகம் பாடிக்கொண்டு வருவதும் அதில் விழுவதும், எழுவதும் ஆக இப்படியே மயங்கிக் கிடக்கும் அல்லவா ? அதுபோன்றிருந்தது அக்காதலர்களின் செயல். இஃது ஒரு வண்ணக் காட்சியல்லவா ? 'இதைவிடச் சிறந்த நாடகக் காட்சி வேறு ஒன்று இருக்கவா செய்கிறது ?' என்று வியந்து வியந்து உருகினார் மாணிக்க வாசகர். இஃது ஒரு நல்ல நாடகக் கூத்து! என்று ஆர்ப்பரித்துக் கைகொட்டினார். நாக்கைச் சுவைத்துச் சொட்டினார். ஒரு தெய்வத் தமிழ்ப் பாடலில் தம் உள்ளக் கருத்தைத் தேனாற்றாகக் கொட்டினார். இதோ அப்பாடல் :

"அன்பணைத் தஞ்சொல்லி பின்செல்லும்
ஆடவன் நீடவன்தன்
பின்பணைத் தோளிவரும், இப்
பெருஞ்சுரம் செல்வதன்று;
பொன்பணைத் தன்ன இறையுறை
தில்லைப் பொலிமலர்மேல்
நன்பணைத் தண்ணற வுண் அளி
போன்றொளிர் நாடகமே!"

[அஞ்சொல்லி-அழகிய சொல்லையுடையவள். பணைத் தோளி-மூங்கில் போன்ற தோளையுடையவள். நன்பணை-நல்ல வயல்கள்.]

இப்பாடல் மாணிக்கவாசகர் பாடிய திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் நூலில் உள்ளது. கண்டவர் மகிழ்தல் என்னும் அகப்பொருள் துறையில் அமைந்தது. தில்லைச் சிற்றம் பலத்தில் கூத்தாடும் நடராசப் பெருமான் மேல் பாடப் பட்டது. இறைவனையும் உயிரையும் நாயக நாயகி பாவத்தில் வைத்து, அத்தெய்வ ஆன்மீக உறவை விளக்கினர். திருக்கோவையாரில் அகத்துறைப் பாடல் களாக நானூறு பாடல்களை மணிவாசகர் பாடினர். அவற் றைத் திருச் சிற்றம்பல முடையார் தம்முடைய கையாலே எழுதி ஒரு பிரதி வைத்துக்கொண்டார் என்பது வரலாறு. திருக்கோவைப் பாடல்களில் சிற்றின்பத் துறையில் வைத்துப் பேரின்பக் கருத்துக்களைக் குறிப்பாக விளக்கினர். ஆயின் மேற்கண்ட பாடலின் பேரின்பக் கருத்து யாது?

அடியார்களுக்கு ஆண்டவன்மேல் காதல். ஆண்டவனுக்கும் அடியார்கள்மேல் காதல். அதனல் அவன் பித்தன் எனப் பட்டான். அவர்கள் பத்தர் எனப் பட்டார்கள். உலகில் அடியார்கள் ஆண்டவனைத் தேடிக்கொண்டு அலைகிருர்கள். ஆனல் ஆண்டவனே அடியார்களைத் தேடிக்கொண்டு அவர்கள்பின் செல்கிருன். அடியார்கள் ஆண்டவன் அருளுக்கு ஏங்கி நிற்கிருர்கள். ஆண்டவன் அடியார்களுடைய அன்பிற்குத் தவித்து நிற்கிருன். ஒவ்வோர் உயிரிடமும் சென்று அதன் அன்பைப் பிச்சை கேட்கிருன். தன்னைத் தேடிக் கொண்டு தனக்குப்பின்னல் வருகிற உயிருக்குச் சிவஞானம் என்னும் தேனைச் சொரிகிருன். அதன் ஞானப் பொலிவைக் கண்டு மகிழ்கிருன், சொக்குகிருன். அதனையே பின்தொடர்ந்து செல்கிருன்.

ஆனால் சீவன் முத்தர்கள் அவன் அழகைப் பருகுவதற்கு அவனுக்குப் பின்னால் தொடர்கிறார்கள். இவ்வாறு இறைவனை உயிரும் உயிரை இறைவனுமாக, ஒருவரையொருவர் தொடர்ந்து பற்றுகின்றனர்.

சிவஞானத்தைக் கொடுத்தபின் இறைவன் ஏன் அவ்வுயிரைத் தொடரவேண்டும் என்ற ஐயம் எழுதல் கூடும். ஒரு பொற்கிண்ணத்தில் பாலை வைத்துக் கொண்டு சிறு குழந்தை எழுந்து நடக்க முயன்றால், அதன் தாய் அக்குழந்தையைப் பிடித்துக்கொண்டு அதன் பின்னாலேயே கண்ணாய் நடந்து செல்வாள். குழந்தை பாலையும் கொட்டிக் கிண்ணத்தையும் போட்டு உடைத்து விடுமோ என்ற கவலை அவளுக்கு இருக்கும். அதுபோல், உயிர்களிடத்தே சிவஞானத்தைக் கொடுத்து விட்டால், அதன்பெருமையை உணராது உயிர் சிதறிவிடலாகாதே என்று இறைவன் அதன் புறம் புறமே திரிகிறானாம். ஆனால், தாயினுமினிய தயாளனாகிய இறைவன் தன்னை விட்டு ஓடிவிடக்கூடாதே என்று, உயிர் அவன் பின்னால் சென்று பற்றிப் பிடிக்கிறதாம். இவ்வாறு உலகில் இறைவனும் உயிரும் அன்பொழுகக் காதற் கசிவோடு ஒருவரையொருவர் புறத்தே தழுவும் காட்சி ஞானக் காட்சியல்லவா? அஃது ஒரு சிறந்த நாடகக் காட்சியும் அல்லவா'?

இத்தகைய ஞான நாடகக் காட்சியை ஞானக் கண்ணால் கண்டு களிக்கவும், சுயானுபவத்தால் உற்று உணரவும், இறைவனைப் பற்றிப் பிடிக்கவும் வல்லவர்கள் அறிவாற் சிவனேயான மாணிக்க வாசகர் போன்றவர்களே யாவர். நாமும் அவர்களுடைய ஞானவுரைகள் மூலம் அத்தகைய நாடகக் காட்சியை நம் மனத்திரையிலே கண்டு, 'என்னே! என்னே!' என்று விம்மிதம் கொள்ளலாம். இந்நாடகக் காட்சியை விளக்கும் வகையில் திருவாசகத்திலும் மணிவாசகர் ஒருவாசகம் வைத்துப் பாடினார் :

"பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே! சிவபெரு மானே!
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே!"

இங்குவரும் 'புறம்புறம் திரிந்த செல்வம்' மேற்கண்ட கோவைப்பாடலில் வரும் 'அன்பனைத் தஞ்சொல்லிப்பின் வரும் ஆடவன்.' 'யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்' என்பது அங்குள்ள 'நீடு அவன்தன் பின் வரும் பணைத்தோளி.' இவ்வாறு திருக்கோவைப்பாடல்களை விளங்க வைத்துப் படித்தால் இன்பத்தேன் ஊறி உவட்டாமல் தித்திக்கும்.

# நல்ல காலம்

ஞாலத்தில் இனிது வாழ வேண்டுமானுல் நாம் காலத்தின் அருமையை உணர்தல் வேண்டும். காலக் கடவுளை ஒரு வழுக்கை மண்டைக்காரன் என்று சொல்வ துண்டு. அவனுக்கு ஒரு சிறு முன்குடுமி மட்டும் இருக் கும். அவன் வரும்பொழுதே அவன் முன்குடுமியை நாம் எட்டிப் பிடிக்கவேண்டும். அதைத் தவறவிட்டால் அவன் நழுவி விடுவான். அவன் வழுக்கை மண்டை நம்பிடிக்கு அகப்படாமல் வழுகி விடும். குறித்த காலத்தில் குறித்த ஒன்றைச் செய்தல் என்பது நம்மிடையே இல்லாது போனது ஒரு பெருங்குறை. இது மிகக் கொடிய பழக்கம்; கெட்ட பழக்கம். இதை 'இந்தியன் பஞ்சுவாலிட்டி' என்று பெருமையாகவும் பேசிக்கொள்கிருேம். ஒரு கூட்டம் ஐந்து மணிக்குத் தொடங்கும் என்று குறித்தி ருந்தால், அஃது ஐந்து மணிக்குத் தொடங்குவதே கிடை யாது. மணி ஆறும் ஆகும், ஏழும் ஆகும். வந்தவர்கள் ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரத்தை வீணுக்கிக் கொண்டு அங்குக் காத்துக் கிடக்கவேண்டும், இஃது காலத் தைக் கொல்வதற்கு நேர் என்று சொல்லலாம். நமது பொன்னுன நேரம் இப்படி மண்ணுகிப் போகலாமா? காலத்தை இவ்வாறு வீணடிக்கும் நாடு எந்நாளும் வறுமைப் பிணியிலே தான் வதங்கிக் கிடக்கும். எது எதனை எந்தக் காலத்தில் எப்படிச் செய்யவேண்டுமோ அப்படிச் செய்யப் பழகியவனிடத்தில் செல்வம் அகலாமல் நிலைத் திருக்கும். உரிய காலத்தில் உற்றதைச் செய்யப் பழகியவன் எவனே அவனே நிலையில்லாத செல்வத்தை நிலைக்கப் பண்ணுவான். இதனைத் திருவள்ளுவர் அழகாகக் கூறியுள்ளார்:

"பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு."

காலத்தோடு பொருந்துதலாவது காலம் தப்பாது செய்தல். எது எதை எப்பொழுது செய்யவேண்டுமோ அதனை அப்பொழுதே நேரம் தப்பாமல் செய்து முடிக்கப் பழகிக் கொள்ளுதல் வேண்டும். எதையும் காலம் தாழ்க்காது உரிய காலத்தில் செய்தல் வேண்டும். அவ்விதம் செய்து வந்தால் ஊழையும் ஒருவன் வென்றுவிட முடியும் என்கிறார் திருவள்ளுவர்.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துளுற்று பவர்."

உரிய காலத்தில் ஒன்றனைச் செய்யாமல் இருப்பதற்கு முக்கிய காரணம் சோம்பலேயாகும். எதையெடுத்தாலும் நகட்டிக் கொடுத்துக் கொண்டு, ஊக்கமும் உழைப்பும் இல்லாமல், காலத்தைக் கழியவிட்டுச் சுணங்கிக் கொண்டேயிருப்பார்கள். மிகச் சுருங்கிய காலத்தில் செய்ய வேண்டியதை நீண்ட நாளைக்கு இழுத்துப் பறித்துக் காலத்தை வீணாக்கிக் கொண்டிருப்பார்கள். கண்ணிமை பொருந்தாமல் விழித்திருந்து முடிக்க வேண்டிய காரியத்தைச் செய்து முடிக்காமல் நாளைக் கடத்திக் கொண்டே தூங்கியிருப்பார்கள். இதற்கிடையே அதனை மறந்து போகிறவர்களும் உண்டு. இவர்களெல்லாம் உடலை வருத்தாமல் மிதப்பாகவே காலத்தைக் கழிக்க விரும்புவார்கள். இத்தகையோரைக் கெடுநீரார் என்று கடிந்து கொள்கிறார் திருவள்ளுவர். விரைந்து செய்வதனை நீட்டித்து செய்யும் இயல்பும், சோம்பலும், மறப்பும், தூக்கமும் ஆகிய நான்கும் நான்கு இன்பப் படகுகள் போன்றன. இந்நெடுநீர் முதலிய நான்கு படகுகளும் கெடுநீராரை ஏற்றிச் சென்று நடுநீரில் கவிழ்த்து விடும். விரைந்து

செய்யும் வினையை நீட்டித்தலும், செய்ய நினைத்ததனை மறத்தலும், அதனைச் செய்தற்குச் சோம்புதலும் அதனைச் செய்யாது உறங்குதலும் ஆகிய இவை துன்புறு நீரார்க்கு இன்புறுத்துவ போன்று காட்டி அவர் விரும்பிக் கொண்ட வழித்துன்பத்திடை வீழ்த்தலின், நாளுலந் தார்க்கு ஆக்கம் பயப்பது போன்று காட்டி அவர் விரும்பி யேறிய வழிக் கடலிடை வீழ்க்கும் காமக்கலனை ஒக்கும் என்றார். இவற்றை உல்லாசப் படகு என்று குறித்தவாறு.

> "நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
> கெடுநீரார் காமக் கலன்."

இவை நான்கும் ஒரே நீர்மைத்தாகிய நான்கு தன்மைகள் அல்லது இயல்புகள். இவை தம்மைக் காதலித்து ஏறினாரை நடுக்கடலுள் தள்ளும் மரக்கலம் போறலின் காமக்கலன் என்றார். "கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே" என்பது மணிவாக்கு.

காலை ஐந்து மணிக்குக் குடுகுடுப்பைக்காரன் உடுக்கு அடிக்கிறான். தெரு வீடுகளில் உள்ளவர்கள் எல்லாரும் விழித்துக் கொள்கிறார்கள். கூர்ந்து கேட் கிறார்கள். ஏதாவது நல்ல செய்தி தமக்குக் கிடைக்குமா என்று ஒவ்வொருவர் உள்ளமும் டமாரம் கொட்ட ஆரம்பித்து விடுகிறது. இவ்வாறு ஆசைக் கனலை எழுப்பி விட்ட குறிகாரன்—தென்னாட்டில் இவனை இராப்பாடி என்றும் கூறுவர்—உடுக்கை அடித்துக் கொண்டே என்ன சொல்கிறான்? "ஐயோ என்று போகிறான்! ஐயோ என்று போகிறான்! அங்கே ஒருத்தன் ஐயோ என்று போகிறான்!" என்று முழங்குகிறான். இஃது எல்லாருடைய காதிலும் விழுகிறது. யாரையோ சொல்கிறான். நமக்கென்ன? என்று கேளாதது போல் இருந்து விடுகிறார்கள். கெட்ட செய்தியை யாராவது

விரும்பி ஏற்பார்களா? மாட்டார்கள். ஒவ்வொருவரும் தங்களுக்கு அடுத்த வீட்டுக்காரனைச் சொல்கிறான் போலிருக்கிறது என்று சும்மா இருந்து விடுவார்கள். தன்னைச் சொல்வதாக எவனாவது நினைப்பானா? நினைக்கமாட்டான். அடுத்தாற் போல், குடுகுடுப்பைக் காரன் உடுக்கை மாறி அடிக்கிறான். எப்படி? "நல்ல காலம் பிறக்குது! நல்ல காலம் பிறக்குது! ஒரு நல்ல செய்தி வருது! அதிர்ஷ்டம் அடிக்கப் போகுது! ஒரு கடுதாசி வருது! நல்ல காலம் பிறக்குது! குடுகுடுகுடு குடு!" என்று தட்டி விடுகிறான்: எல்லாருடைய செவி களும் குளிர்கின்றன. இதயங்கள் விரிகின்றன; வீட்டுக் கதவுகள் திறக்கின்றன. அரிசி துணிமணிகளெல்லாம் குடுகுடுப்பைக்குக் கிடைக்கின்றன. ஒவ்வொருவரும் தமக்கே நல்ல காலம் பிறந்ததாக எண்ணி விடு கிறார்கள். தள்ளாத வயதுக் குடுகுடு கிழவியாய் இருப்பவள்கூட வெளியில் வந்து, "நல்ல காலம் வரும் என்று சொன்னாயே, எப்பொழுது வரும்?" என்று கேட்கிறாள். பாவம்! எண்பது வயதுக்கு மேலான இந்தக் கிழவி கூடச் சோதிடம் பார்த்து அலைகிறாள்; எதற்கோ? தெரியவில்லை. இதைக் குறிப்பாகக் கம்பர் பாடிய பாடல் ஒன்று வருமாறு:

"திக்கு நோக்கிய தீவினைப் பயனெனச் சிந்தை
நெக்கு நோக்குவோர் நல்வினைப் பயனென நேர்வோர்
பக்க நோக்கலென் பருவரல் இன்பமென் றிரண்டும்
ஒக்க நோக்கிய யோகரும் அருந்துயர் உழந்தார்."

பலருக்குத் தற்பொழுது நடப்பது கெட்ட காலமாகத் தோன்றுகிறது. நல்ல காலம் எப்பொழுது வரும் என்று வாடிக்கிடக்கின்றனர். தேடி அலைகின்றனர். சோதிடம் பார்க்கின்றனர். குறி கேட்கின்றனர். கையிற் கிடைத்துள்ள காலத்தைக் கழியவிட்டு, நல்ல

காலம் வரட்டும் என்று மூடிக்கொண்டிருப்பது, நல்ல காலத்தை நழுவ விட்டுக் கெட்ட காலத்தைக் கட்டிப் பிடிப்பது போலவே ஆகும். நாட்குறிப்பு ஏட்டிலிருந்து 'இன்று கழிந்தது, நாளைக் கழிந்தது' என்று ஒவ்வொரு தாளைக் கிழிக்கிறோம். உண்மையில் நாம் தாளையா கிழிக்கிறோம்? நம்முடைய வாழ்நாளையல்லவோ அவ்வாறு கிழிக்கிறோம்! நாள் என்பது ஒரு வாள். அதன் கூரிய வாயிலே உயிர் கிடக்கிறது. ஒவ்வொரு நாளும் ஒரு வாளாக அவ்வுயிரை அறுத்து இறுதியெல்லைக்கு இழுத்துச் செல்கிறது. இதனைத் திருவள்ளுவர் எவ்வாறு கூறுகிறார் பாருங்கள்:

"நாளென வொன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்."

எனவே, வருகின்ற நாளைவிட இன்று கிடைத்திருக்கின்ற நாள் மிகவும் நல்ல நாள். இன்றைய நாளில் உயிருக்கும் இறுதிக்கும் உள்ள இடைவெளி அகன்றிருக்கின்றது. நாளை நாள் வந்து விட்டால் அவ்வளவுக்கு அவ்விடைவெளி சுருங்கிவிடும். அதற்கேற்ப நமக்கும் அறிவு குன்றித் தளர்ச்சி மேம்பட்டு விடும். இதனால் வந்த நாள் இனிவரும் நாளைவிட மிக நல்ல நாள் என்பது தெளிவாகும். நல்ல காலத்தைத் தேடியலைந்து சோதிடம் பார்ப்பது மாமடம் அல்லவா? இன்று வாய்த்திருக்கும் நாளே நல்ல நாள். நாளை நாள் நமன் நாள். இவ்வாறு காலத்தின் அருமையை நாம் நன்கு உணர்ந்து செயன் முறைகளைக் கடைப் பிடிக்க வேண்டும்.

"காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சு வதியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே"

என்று பாடினர் அப்பர் சுவாமிகள். மாணிக்கவாசகரும்,

"காலமுண்டாகவே காதல் செய்துய்மின் கருதரிய
ஞாலமுண் டானெடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன்
அடியவர்க்கு
மூல பண்டாரம் வழங்குகின்றுன் வந்து முந்துமினே"

என்று பாடினர். கடவுள் வெளிவந்து காட்சி கொடுக்கும் நாளை யார் தாம் விரும்பமாட்டார்கள்? கடவுளே இல்லையென்று சொல்லுகிறவர்களும் கூடக் கடவுளைக் காண ஆசைப்படத்தாம் செய்வார்கள். கடவுளை எப்பொழுதோ ஒரு நாள் காணப் போகிறேம் என்று நினைத்துக் கொண்டிருக்கும் வரை, ஒரு நாளும் காணப் போவதில்லை. ஒன்றே செய்யவும் வேண்டும், ஒன்றும் நன்றே செய்யவும் வேண்டும், நன்றும் இன்றே செய்யவும் வேண்டும், இன்றும் இன்னே செய்யவும் வேண்டும். அங்ஙனம் செய்தால் கடவுளை நாம் இப்பொழுதே காணலாம்: இன்று இப்பொழுதே நமக்குப் புலப்படாத கடவுள் வேறு எந்த நாளில் தான் புலப்படப் போகிருர்? நாம் இனியவற்றையே நினைந்து, இனியவற்றையே பேசி, இனியவற்றையே புரிந்து, இன்பத்தை எங்கும் பரப்பி நம் அறிவைக் கொண்டு கூர்ந்து நோக்கினுல் இறைவன் வெளிப்படு வான். இதனை, ஆனந்தம் என்கிற குதிரையில் ஏறி, அறிவு என்கிற வாளைக் கொண்டு இப்பிறவியிற் சூழ்ந் துள்ள அறியாமை யென்னும் இருளைப் பொருது போக்கினுல், இறைவன் வெளிப்படுவான்; இப்பொழுதே வெளிப்படுவான். எப்பொழுதோ வருவான் என்று நினையாதீர்கள். எல்லாக் காலத்துள்ளும், நம் கைக்கு எட்டியுள்ள இந்தக் காலமே நல்ல காலம்" என்று மணிவாசகர் பாடுகிருர் பாருங்கள்:

"செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின்
தென்னனன்னாட்(டு)
இறைவன் கிளர்கின்ற காலம் இக்காலம்
எக்காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வா ளுறைகழித் தானந்த மாக்கடவி
எறியும் பிறப்பை யெதிர்ந்தார் புரள இருநிலத்தே.''

இப்பாடலின் பொருளை நாம் நன்கு சிந்தித்தல் வேண்டும்.

வாழ்க்கை என்பது ஒரு பெரும் போர்க்களம். அதில் வெற்றியும் உண்டு, தோல்வியும் உண்டு. அஞ்சி யஞ்சிச் சாகின்ற கோழைகள் வாழ்க்கையில் ஒரு போதும் வெற்றி காண முடியாது. ஆணுக்கும் பெண்ணுக்கும் வீரம் என்பது வேண்டும். அஞ்சாமையும் துஞ்சாமையும் வேண்டும். வாழ்க்கைப் போரில் நம்மை எதிர்த்து நிற்கும் தீயசக்திகள் ஒன்றிரண்டல்ல. ஆறு கோடி மாயா சக்திகள் வேறு வேருகத் தம்மாயைகள் தொடங்கி எதிர்க்கின்றன. ஆணவம் வேறு தலைவிரித் தாடுகிறது. காம வெகுளி மயக்கங்கள் நம் காலை வாரி விடுகின்றன. மகா பாதகங்கள் ஐந்தும் பதுங்கி வந்து பாய்கின்றன. ஐம்புலநுகர்ச்சி வேட்கைகள் நம்மை வந்து வேட்டையாடுகின்றன. அவற்றைப் பொருது வெட்டி வீழ்த்தும் ஆண்மை நமக்கு வேண்டும். எந்த நிலையிலும் நாம் நமது ஆனந்தம் அல்லது உள்ளத்து உவகையை இழந்து விடக் கூடாது. அதுவே நமது போர்ப்புரவி. அதனை ஊர்ந்து சென்றே நாம் வெற்றி காண வேண்டும். நமது அறிவே நமது வாளாயுதம். சோம்பித் துயிலாமல் விழிப்புடன் இருந்து நம் ஞான வாளால் எதிர்ப்புச் சத்திகளை வீசி எறிய வேண்டும். ஊக்கமும், உறுதிப்பாடும், உவகையும், நம்பிக்கையும் நம் நெஞ்சைவிட்டு அகலக்கூடாது. ஒரு துளி நேரத் தையும் வீணாக்கக் கூடாது. இதுவே நமக்கு நல்ல காலம். கடவுள் நிச்சயம் துணை புரிவார். வீறிட்டு எழுக!

# தந்தையும் மகனும்

இறைவன் நமக்குத் தாயும் தந்தையும் ஆவான். எல்லா உயிர்களும் அவனுடைய குழந்தைகள். இந்த நினைப்பு நம் ஒவ்வொருவருக்கும் ஏற்படுமானுல் நம் வாழ்க்கை வளமுற்று இன்பமுறும் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. இவ்வுணர்ச்சியே நம்மை நல்ல கதிக்குச் செலுத்த வல்லது. அன்னையும் அப்பனும் முன்னறி தெய்வம் என்பது ஓர் உண்மை வாசகம். இதனை மறுப்பார் எவரும் இல்லை; நினைப்பாரும் இல்லை.

ஒரு குடும்பத்தில் செல்வக் குழந்தை ஒன்று பிறந்து விட்டால் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெருமகிழ்ச்சியா யிருக்கும். ஊராரை யெல்லாம் அழைத்து விருந்து வைப் பார்கள். குழந்தையைக் கீழே கிடக்கவிட மாட்டார்கள். தந்தை மகனை அரை நொடியும் பிரிந்திருக்க மாட்டான். வெளியே வேலைக்குப் போய்விட்டுத் திரும்பியவுடனே பையனைத் துக்கிக் கையில் வைத்துக்கொள்வான் தந்தை. அவன் கன்னத்தைக் கிள்ளிக் கொடுத்துத் கிலுகிலுக் காட்டுவான். அவன் அழகு முகத்தை அள்ளிப் பருகிப் பூரித்துப் போவான். பையனும் வளர வளர அப்பாவின் அருகிலேயே அமர்ந்து கொள்வான். ஒக்கலிலும் மடியிலும், பக்கலிலும் அடியிலுமாய்ப் பிள்ளை இருந்து வளர்ந்துவரும். பிறகு பிள்ளை பள்ளிக்குப் போய்வரும். படித்து வீடு வந்ததும் பிள்ளை அப்பாவையே கட்டிக் கொண்டு திரிவான். தந்தையும் பையனைப் பக்கலில் வைத்தாலல்லது உண்ணமாட்டான். பையனும் அப்பா வைக் காணுமல் சாப்பிட மாட்டான். கள்ளமொன்றறியாத பள்ளிப் பிள்ளை இது. ஆனுல் அரும்பு ஏற அரும்பு ஏறக்

குறும்பு ஏறும். கூட்டாளிகள் கூடுவார்கள். சீட்டாட்டம் போடுவார்கள். திரைப்படங்களுக்கு ஓடுவார்கள். பெற்ரூர் களும் தேடுவார்கள், வாடுவார்கள். தந்தையுடனுறையும் காலத்தைவிடத் தந்தையைப் பிரிந்துறையும் காலம் பெரிதாக விரியும். தந்தைக்கும் மகனுக்கும் உள்ள பிடிப்பு வரவர நெகிழ்ந்து கொண்டே வரும். மகனை மடியில் வைத்தே சாப்பிட்டுவந்த தந்தை இப்பொழுது தனியே சாப்பிடத் தலைப்படுகிருன். பையனும், பிறகு அப்பா இல்லாத நேரம் பார்தது அடுக்களைககுள் நுழைவான். பையனிடம் பொய்யும் களவும் பையப் புகுகின்றன. பைய னுக்கு வரவர அப்பாவைப் பார்க்கவே பிடிப்பதில்லை அப்பா இல்லாத இடமே நல்லதாய்த் தோன்றுகிறது. பையனுக்குப் பதினறு வயது ஆனதும், "பெரியவனுகி விட்டான். எப்படியும் போகிருன்" என்று தந்தையும் அசந்து விடுகிருன். மகனும் தந்தை முகத்தைக் காணக் கூசுகிருன்; அஞ்சுகிருன். தந்தையில்லாத இடத்தில் மகனுடைய பொல்லாத செயல்களுக்கு வழி ஏற்படுகிறது. தட்டித் திருத்துவார் தந்தை என்று தனயன் தனியே பிரிந்து, தான் தோன்றியாய்த் திரிந்து தறுதலையாகிவிடு கிருன்; மேலும் மேலும் கெடுகிருன்; பிறகு தந்தை முகத்தில் விழிக்கவே வெட்கப்படுகிருன், பையன். அன்பு விளைய வேண்டிய இடத்தில் வெட்கமும் வெறுப்பும் வேண்டுமட்டும் விளைகின்றன. இவ்வாறு பிள்ளைகளை வளர்த்து விடுவதனுல் மக்கள் எவ்வாறு உருப்படுவார் கள்? பெற்ற தந்தையைப் பார்க்கவே நாணும் கோணல் மகன் ஒரு சமுதாயத்தை உருவாக்க எங்ஙனம் உதவப் போகிருன்? பிள்ளைகள் பெரியவர்களாகி நல்லறிவும் நல்லோரிணக்கமும் பெறும்வரை அவர்களைத் தனியே விடக்கூடாது. தந்தை மகனைக் கூடுமான வரையில் கூடவே வைத்து நற்பழக்கங்களை ஏற்படுத்த வேண்டும்; அவன் மனத்தில் நற்சிந்தனைகளை வளர்க்கவேண்டும்.

பெற்றோர்கள், பிள்ளைகளிடையே ஏற்படக்கூடிய அச்சத்தையும் கூச்சத்தையும் அகற்றி, அன்பையும் இன்றியமையாமையையும் பெருக்க வேண்டும். பிள்ளைகளுக்கு நல்லறிவு கொளுத்தி நல்வழிச் செலுத்துதல் பெற்றோர்களின் தவிர்க்கலாகாத முதற்கடமை யாகும். பள்ளிக்குச் செல்லும் நேரம், வேலை நேரம், விளையாடும் நேரம் என்றிவற்றைத் தவிர மற்ற நேரமெல்லாம் பிள்ளைகள் பெற்றோர்களை விட்டு எக்காரணம் கொண்டும் பிரிதலாகாது. உடன் உண்ணுதல், உடன் இறைவழிபாடு செய்தல், உடன் உறங்குதல் என்ற பழக்கங்களை ஏற்படுத்தி நல்ல முறையில் குழந்தைகளின் வாழ்க்கையை உருவாக்க வேண்டும். தவறிழைத்த ஒரு மகன் இந்த உடலின் தந்தையாகிய ஒருவனுக்கே இவ்வாறு நாணி அஞ்சுவானாயின், இந்த உடலுக்கும் உயிருக்கும் தந்தையாகிய இறைவனின் அருளைத் துறந்து, நன்றியை மறந்து, தீவினையில் செருக்கிச் சிறந்து திரிகின்ற உயிர்கள் எவ்வாறு நாணி அஞ்சும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

கிறித்துவ வேத நூலாகிய பைபிளில், உற்பத்திக் காண்டத்தில் (*Old Testament, Genesis Chapter III*) கூறப்படும் செய்தி ஒன்று ஈண்டைக்கு ஏற்புடையதாகும். கடவுள் ஆதாம் ஏவாளைப் படைத்து இன்பச் சோலையாகிய ஈடனில் வாழச் செய்தார். அவர்கள் துன்பமின்றி வாழ்வதற்கு வேண்டிய அனைத்தும் அங்கே அமையப் பெற்றிருந்தன. அவர்கள் மனம்போல வாழும் உரிமையையும் பெற்றிருந்தனர். ஒரே ஒரு சிறு கட்டளை மட்டும் கடவுள் விடுத்திருந்தார். அஃதாவது, 'அங்கிருந்த அறிவுமரம் என்ற ஒரு மரத்தின் கனிகளைத் தொடவேண்டாம்' என்று கூறியிருந்தார். நாள்தோறும் கடவுள் அங்குச் சென்று அவர்களைக் கண்டு தழுவிப் பிரியம் செலுத்தினார். ஆதாம் ஏவாளும் கடவுளிடத்தில் அன்புடையவர்களாய், அவரைக்

கண்டு அவருடன் அளவளாவுவதே தம் இன்பமாகக் கொண்டு வாழ்ந்துவந்தனர். இடையே சயித்தான் பாம்பு வடிவில் புகுந்தான். ஏவாளின் அறிவை மயக்கினுன். கடவுள் அவர்களை ஏமாற்றி வருவதாகவும், அறிவு மரக் கனிகள் மிக இனியவை என்றும், அவற்றை அருந்தினுல் பேரின்பம் காணலாம் என்றும் தூண்டிவிட்டான். அவ்வாறே அக்கனியைப் பறித்து ஏவாள் உண்டாள்; அதில் இன்பம் கண்டாள். ஆதாமுக்கும் கொடுத்தாள்; அவனையும் கெடுத்தாள். மறுநாள் விடிந்தது; அவர்கள் உள்ளமும் விடிந்தது. கடவுள் வந்துவிடுவாரோ என்ற கவலையும் அச்சமும் அவர்களையும் பிடுங்கித் தின்றன. முன்னெல்லாம் கடவுளை விழைந்து ஆர்வமாய்க் காணக் காத்திருந்தவர்கள், இப்பொழுது அவர் வந்துவிடக் கூடாதே என்று அஞ்சினர். அவரைக்காண நாணினர். கடவுள் வருகிற காலடிச் சத்தம் கேட்டது. ஆதாமும் ஏவாளும் மரத்திற்குப் பின்னுல் ஓடி ஒளிந்துகொண்டனர். இலைகளால் தம்மை மூடிக்கொண்டனர். அவர்களைக் கடவுள் அன்பாய்க் கூவி அழைத்தார். பதுங்கிக் கிடந்த ஆதாம், 'தந்தையே! நான் உமது முகத்தில் விழிக்க மாட்டேன். வெட்கமாய் இருக்கிறது. உமது கட்டளையை மீறிய பாவி நான்' என்று விம்மியழுது விளம்பினுன். கடவுளுடைய சாபம் அவர்கள் தலையில் விழுந்தது. கடவுளினுடைய காவலினின்றும் விலகி, அவரது அருள் நெறியில் ஒழுகத் தவறியதால், முன்னெல்லாம் அவரைக் கண்டு தொழுது திருவடி வணங்கிவந்த ஆதாமும் ஏவாளும் அவரைக் காணவே கூசி நாணி ஓடுவாராயினர். ஏன்? அவர்கள் நெஞ்சறிய இழைத்த நன்றி மறத்தலாகிய தீவினையே அவர்களைச் சுட்டு வருத்தியது. இவ்வரலாற்றின் உண்மை எத்தகையதாய் இருப்பினும், இது கூறிநிற்கும் உட் கருத்தை நாம் அனைவரும் உட் கொள்ளுதல் வேண்டும்.

முதலில் நம் வீட்டினுள்ளே நாள்தோறும் நடந்து வரும் காட்சி யொன்றை நோக்கினேம்: அடுத்துச் சமய நூல் ஒன்றிற் கண்டதும், பலரும் படித்திருப்பதுமான ஆதி மனிதனின் செயல் ஒன்றைக் கண்டோம். இப்பொழுது திருவாசகத்திற்கு வருவோம். இறைவன் திருவாதவூரரைத் திருப்பெருந்துறையில் குருவடிவில் வந்து ஆட்கொண்டான். வாதவூரரும் வள்ளலின் வண்ணத் திருவடிகளை வருடி வழுத்தித் திருவருள் பருகி, ஞானம் பெற்று, இன்பம் துய்த்து உலகை மறந்து இருந்தார். பின்னர் இறைவன் பிரிந்தான். தனியே விடப் பட்ட மணிவாசகர் இறைவன் திருவடிக்கு உருகித் தவித்தார். இனி என்று காண்போம் என்று மயங்கினர். உடன் அழைத்துச் செல்லவில்லையே என்று ஏங்கினர். மீண்டும் உண்டு உடுத்து உலக வாழ்வில் உழல நேர்ந்ததே என்று சோர்ந்தார். உலக வாதனைகளும் அவரை விடாது வந்து வருத்தின. இறைவனைப் பேண வேண்டிய தாம் புலால் உடலைப் பேண நேர்ந்ததே என்று வாடினர். இறைவனை எங்கும் தேடினர். வினையின் சேட்டைகள் அவரிடம் வந்து விளையாடின. இறைவனைப் பிரிந்ததே குற்றம்; பின்னரும் உலக வாழ்வை உகந்து வாழ்வது அதைவிடப் பெரிய குற்றம் என்று அழுது அல்லலுற்றர். இறைவனின் திருக்குறிப்பை மீறிய கொடிய பாவியாகத் தம்மை இகழலுற்றர். இறைவனைப் பிரிந்த நிலையில், உண்மையன்பிருக்குமானல், உடனே உயிர்விட்டிருக்க வேண்டும் என்று உன்னினர். தம்மைப் பெரும் பொய்யனுகக் கருதிக் கதறினர். உயிர் போக வில்லையே என்று உருகினர். இறைவன் திருவடியைக் கண்ட கண்கள் மேன்மேலும் கண்டு திளைத்துக் களிகூராமல் புண்களாகிவிட்டனவே என்று புழுங்கினர். இறைவனை நினைக்கவிடாதபடி உலக வாழ்வுக்குரிய தேவைகளின் நினைப்பு வந்துவிட்டதே என்று நொந்து

தவித்தார். இனி மீண்டும் இறைவன் வந்தால் அவன் முகத்தில் எப்படி விழிப்பது என்று வெள்கினர். இறைவன் முன் செல்ல நாணமாய் இருக்குமே என்று நைந்துருகினர். தாம் பொறுத்தற்கரிய பெரும் பிழையைச் செய்துவிட்டதாகக் கூசினர், குமுறினர்; குலைவுற்று நடுங்கினர். அவர் இறைவனிடம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிக் கரைந்துருகுவதைக் காணுங்கள்:

"காணுமதொழிந்தேன் நின்திருப் பாதம்
கண்டுகண் களிகூரப்
பேணுமதொழிந்தேன் பிதற்றுமதொழிந்தேன்
பின்னையெம் பெருமானே!
தாணுவே! அழிந்தேன் நின்னினைந் துருகும்
தன்மையென் புன்மைகளால்
காணுமதொழிந்தேன், நீயினி வரினும்
காணவும் நாணுவனே."

பெரிதும் தவறிழைத்துவிட்ட, முன்கண்ட வீட்டுப் பையனுக்கும், பைபிளிற் கண்ட ஆதாமுக்கும் இப்பாடல் எவ்வளவு பொருத்தமாயுள்ளது என்பதை எளிதிற் காணலாம். அந்நிலையில் மாணிக்கவாசகர் தம்மையும் கருதிப் பேசுகிறர். சிறிதும் திரிபுணர்ச்சியின்றிச் சிந்தையிடையரு அன்பு பூண்டு சிவத்தொண்டினை மேற்கொண்ட மணிவாசகரே இவ்வாறு கூறுவாரானல், அறவே இறைவனை மறந்து உலக வாழ்க்கையில் மூழ்கிக் கிடக்கும் ஏனைய உயிர்கள் எத்தகையோர் ஆவார்கள் என்பதை எண்ணிப் பார்க்கவும் அச்சமாய் இருக்கிறது. நாம் அனைவரும் முன்னொருகால் நம் தந்தையாகிய இறைவனை விட்டுப் பிரியாது அவன் அரவணைப்பிலும் அருட் கூட்டத்திலும் கலந்து வாழ்ந்து களித்தவர்களே. நம் ஊழ்வினை வயத்தால் நம் அப்பனைவிட்டுப் பிரிந்தோம். அறம் பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டுண்டோம். உடம்பு என்னும் இருட் சிறையில் அடைபட்டு உலகில்

விழுந்தோம். இங்கு நமக்குப் புதிய உறவுகள் ஏற்பட்டுச் சுற்றம் பெருகிக் குடும்பமும் வலுத்துவிட்டது. ஒரு பொழுதும் வாழ்வதறியாது கோடி எண்ணம் கொண்டு குலாவுகிறோம். தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்துகிடக்கிறோம். நாம் சிவகுமாரர்கள் என்பதை எண்ணாது தந்தை இறைவனை மறந்துவிட்டோம். இந்த நிலை நம் புன்மைகளாலேயே ஏற்பட்டுள்ளது. இனி இறைவன் நேரில் வந்து எதிர்ப்படும் பொழுது நாம் எம் முகம் கொண்டு அவனைக் காண்போம்? நாணாமல், கூசாமல் அஞ்சாமல் நாம் அவனைக் கண்டு களிக்க வேண்டாமா? அங்ஙனமாயின், நமக்கு அவன்பால் மெய்யன்பு உண்டாவதாக!

# பிரியாக் காதல்

பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை. பொருள் என்பது பொன். பொன்னை முன்னே வைத்தால்தான் எதுவும் நடக்கும். மண்ணை வளைக்க மன்னர்கள் போடும் திட்டங்கள் எல்லாம் பொன்னைக் கொண்டுதான் நிறைவேறும். முற்காலத்தைப் போல் இந்திரலோகம் புகவேண்டினாலும் தற்காலத்தைப்போல் சந்திரலோகத்தை அடையவேண்டுமானாலும் செலவழிக்க நிறையப் பொன் வேண்டும், சமயத் துறைக்கும் பொன்வேண்டும்.

உடையவனும் பொன்னை விரும்புகிறான், இல்லாதவனும் பொன்னை விரும்புகிறான். பொன்னை வேண்டாம் என்று எவரும் சொல்வதில்லை. பொன் இருந்தால் இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய எந்தக் காரியத்தையும் தடையின்றிச் செய்து வெற்றி கண்டு விடலாம். துயரம் துடைக்கவும், பகையை நட்பாக்கவும், வாழ்க்கையை நுகரவும், பிறர்க்கு உதவவும், இல்லையென்னும் கொடுமையை இல்லையாக்கவும் பொன் வேண்டும். பணம் இல்லாமல் வறுமையை அடைவதாயின், பெற்ற தாயிடத்து இயல்பாக இருக்கவேண்டிய அன்புகூட இல்லாது அற்றுப் போகிறது. இது பொன்னின் திருவிளையாடல்.

ஓர் ஆடவன். அவன் ஒரு கட்டழகு வாய்ந்த இளைஞன். புதிதாகத் திருமணம் செய்து கொண்டவன், தன் மனைவியை உயிர்போன்று காதலித்தான். அவளும் ஓர் எழில் வாய்ந்த இளம்பெண். அவள் தன் காதலனுக்காகவே உயிரை வைத்திருந்தாள். எந்த நேரமும் அவனை விட்டுப் பிரிய மாட்டாள். அவனையும் பிரியவிட மாட்டாள். ஆனால் சிறிது பொருள்தேடி வரவேண்டும் என்ற

விருப்பம் அவனுக்கு உண்டாயிற்று. பொருள் இருந்தால் இல்லறம் மேலும் சிறப்புறுமே என்று அவன் எண்ணினுன். அதற்கு மனேவியைப் பிரிந்து சிலகாலம் வெளியில் போய்வர வேண்டும். மனேவியோ அதற்கு உடன்பட மாட்டாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆயினும் சிறிது பேச்சுக் கொடுத்து அவள் மனத்தைத் திருத்த முடியுமா என்று பார்த்தான்.

தன் பிரிவைப் பற்றித் திடீரென்று சொன்ஞல் ஒப்புக்கொள்ள மாட்டாள் என்று பேச்சை மேல்கண்ட விதமாதத் தொடங்கினுன். முதலில் பொன்னினுடைய பெருமையை எடுத்துக்கூறி, அவள் ஏற்றுக்கொண்டால், பின் அத்தகைய பெருமையுடைய பொன்னேத்தானே ஏன் ஈட்டி வரக்கூடாது என்று நினேப்பது போல் பேச்சைக் கொடுத்துப் படிப்படியாக அவள் மனத்தைத் திருப்பித் தன் பிரிவுக்கு இசையும்படி செய்துவிடலாம் என்பது அவன் எண்ணம்.

மயக்கம்

"உலகில் அரசர்களாய் இருந்தாலும், அவர்கள் எண்ணியதை முடிப்பதற்குப் பொன் வேண்டியிருக்கிறது," என்று பீடிகை போட்டான். இதை அவன் சொல்லி முடிப்பதற்குள் அவன் மனேவி கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகி ஓடலாயிற்று.

"ஆகா! என் கணவர் என்னேவிடப் பொன் பெரிது என்று எண்ணும்படி ஆகிவிட்டதே. இனிப் பொன் எங்கே கிடைக்கும் என்று தேட ஆரம்பிப்பாரே. அதைச் சம்பாதிப்பதற்காக என்னேப் பிரிந்து போய்விடுவாரோ!" என்று காரண காரியத் தொடர்ச்சியாய்ப் பல எண்ணங்கள் அவள் உள்ளத்தைத் தாக்கித் துவைத்தன. அப்படியே உடல் சில்லிட்டு மயக்கம் போட்டு விழுந்து

விட்டாள். கணவனுக்குக் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை. "ஐயோ! நாம் சும்மா இருந்து தொலைக்காமல் இதை ஏன் போய்ச் சொன்னோம்?" என்று வருந்தினான்.

அருகிலிருந்த குடத்திலிருந்து தண்ணீரை எடுத்து அவள் முகத்தில் தெளித்தான். அவள் உதடுகளை நெளித்தாள். சரி அவள் பிழைத்துக் கொள்வாள் என்ற உறுதி அவனுக்குப் பிறந்தது. ஒரு விசிறி எடுத்து வந்து வீசினான். உடையை நெகிழ்த்து விட்டான். கைகால்களைச் சூடு பிறக்கத் தேய்த்துக் கொடுத்தான். அடுத்த வினாடியில் அவளுக்கு நினைவு திரும்பியது. கண்களை மிரள விழித்தாள்:

அவன் அவள் நாடியைத் தடவிப் பிடித்து, மகிழ்ச்சி நிறைந்த மனத்தனாகிச் சிரித்த முகத்துடன், கொஞ்சும் குரலில் கெஞ்சிய வண்ணம், "என் கண்ணே! பொன்னம்பலம் போன்று பொலியும் முகத்தவளே! உன்னைவிடப் பொன்னை நான் பெரிதாக மதிப்பேனா? நீ ஏன் இவ்வாறு வருத்தம் அடைய வேண்டும்?" என்று கூறினான். அவள் கன்னத்தைக் கிள்ளினான். அவளுக்கு அப்பொழுதுதான் முழுஉணர்வும் திரும்பி வந்தது. அவள் முகத்தில் ஒளி அலைகள் பாய்ந்து அவள் அழகுக்கு ஓர் அழகு செய்தன.

**இத்தனை நாட்களா ?**

உடனே திடுக்கிட்டுப் பதறி எழுந்தாள். கணவனைக் கைகளால் தொட்டுத் தடவிப் பார்த்தாள். அவன் கைகளையெடுத்துத் தன் கண்களில் ஒத்திக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். அவன் காலடியில விழுந்து வணங்கினாள். வணங்கிக்கொண்டே அவனை என்ன கேட்டாள் தெரியுமா? "என்னைத் தவிக்கவிட்டுப் பொருள் சம்பாதித்து விரைவில் வருகிறேன் என்று போன தாங்கள் இப்படியா இத்தனைநாள் கழித்து வருவது?" என்று கேட்டாளாம். எப்படியாவது அவன் வந்து சேர்ந்தானே என்று

மகிழ்ந்து அவனை வழிபட்டு வணங்கினுளாம். உலகில் முனிவர்க்கும் மன்னர்க்கும் பொன்தான் முதன்மையாய் வேண்டியிருக்கிறது என்று சொன்னதைக் கேட்டதும், அந்தப் பொன்னை ஈட்டுவதற்காக அவன் தன்னைப்பிரிந்து போய் விட்டதாகவே எண்ணிவிட்டாள். ஆகவே மயங்கி விழுந்தாள். மயக்கம் தீர்ந்து எழுந்தபொழுது அவனைக் கண்டதும், பிரிந்து போனவன் நெடுங்காலம் கழித்துத் திரும்பி வந்திருக்கிருன் என்றே எண்ணினுள். இவ்வள வையும் கூறுவதற்கு எத்தனையோ செய்யுள்கள் ஒரு புலவனுக்கு வேண்டும்.

ஆனுல் இரத்தினச் சுருக்கமாக ஒரே பாடலில் மாணிக்க வாசகர் அழகுறப் பாடியுள்ளார் :

"முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுல்
முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்திருச் சிற்றம் பலமனையாய்
துனிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிது வோவென்று வந்திக்கு நன்னுதலே."

உண்மைக் காதலர்களிடையே திகழும் அன்பின் கொடு முடியை எட்டிப் பிடித்திருக்கிறது இப்பாடல். இங்கே இலக்கிய தேவதையின் வெற்றியை நாம் காண்கின்றோம். இதுபோன்றதோர் இலக்கிய இன்பக் காட்சி வேறு எம் மொழியிலும் இல்லை என்று திண்ணமாய்ச் சொல்லலாம். தமிழ்மொழியிலும் வேறு கிடையாது. கற்பனை யுலகிலே வேறு எப்புலவனும் சிந்தனைத் தேரினை இவ்வளவு உயரத்தில் செழிக்கச் செல்லவிட்டதில்லை. தமிழ்மொழி செய்த தவப்பயனுக மாணிக்கவாசகர் இப்பாடலைப் பாடினுர்.

தலைவன் பிரியக் கருதினுன் என்று புலவர் இதில் குறிப்பிடவில்லை. ஆயினும், தலைவி அதை உய்த்துணர்ந்து கொண்டாள். தலைவி மூர்ச்சையானுள் என்று

புலவர் கூறவில்லை. ஆனால் தலைவன் தூநீர் தெளித்து அளித்தான் என்றதால் நாம் உய்த்துணர முடிகிறது. தலைவன் தலைவியை விட்டுச் சிறிதும் பிரியவே இல்லை. அப்படியிருந்தும், அவன் நெடுநாள் கழித்துத் திரும்பி வந்ததாகத் தலைவி நொந்து கொள்கிறாள். அஃது ஏன் ? அவள் மூர்ச்சை யடைந்து, பின் தலையளி செய்ததால் மூர்ச்சை தெளிந்து நினைவுபெற்ற பொழுதுதான் அறிவு அழிந்து கிடந்த அந்தச் சிறு பொழுதை அவன் பிரிந்த காலமாகவே கருதுகிறாள். ஏனெனில், அப்பொழுது அவள் நினைவிழந்தபடியால், மனத்தால் காதலனைப் பிரிந் திருந்தாள். அவள் அவனை நினைக்கவோ, காணவோ முடியாது போய்விட்டது. அஃது ஒரு விநாடிப் பொழுதா யினும், அவளுக்கு அஃது ஓர் ஊழிக்காலமாகத் தோன்றி யிருக்கிறது. பிரியாக் காதலின் பெருமையை இதைவிட வேறு எங்ஙனம் எடுத்து விளம்ப முடியும்? இது, தேனூறு பாடல்கள் நானூறு கொண்ட திருச்சிற்றம்பலக் கோவையாரில் பொருள்வயிற் பிரிதலின்கண், தலைவன் தோழிக்குக் கூறியதாக வந்துள்ளது. திருக்கோவையை மாணிக்கவாசகர் தில்லை நடராசப் பெருமான்மேல் பாடி னார். பாட்டுக்குருகும் ஆட்டுக்கொருவனை கூத்தப் பெரு மான் தன் கரங்கள் நோவ எழுதி ஒரு பிரதி வைத்துக் கொண்டார். இப்பாடல்களில் உயிரையும் இறைவனையும் நாயகியாகவும் நாயகனாகவும் கொண்டு, மாணிக்கவாசகர் சிற்றின்பத்துறையில் வைத்துப் பேரின்பக் கருத்துக்களை அழகுறக் கூறுகிறார். ஆயின், மேல்வந்துள்ள பாடலின் பேரின்பக் கருத்து யாது ?

கணவன் மனைவியின் தொடர்பு இடையிலே தோன்றுவது. கடவுளுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு என்றும் நின்று நிலவுவது. கணவன் மனைவியின் காதலைப் பார்த்தோம். நம்மைப் படைத்த கடவுளை நாம் இவ்வளவுக்குக் காதலிக்கிறோமா? அவனை மறந்தும் பிரிய

லாகாது என்று மனதில் நினைக்கிறோமா? அவனைப் பிரியாதிருக்க முயலுகிறோமா? அவனைப் பிரிந்து விட்டோமே என்று வருந்துகிறோமா?

மனைவியிடம் காதலித்து உருகுகிறவன் அது கடமை என்று நினைப்பதில்லை. அதை ஒரு தொல்லையாகவும் கருதுவதில்லை. மனைவிக்குப் பயந்தும் அவளைக் காதலிக்க முடியாது. மனைவியிடமும் கணவனிடமும் இயல்பாகத் தானாகவே தன்னை யறியாமல் காதல் விளைகிறது. அது போன்று இறைவனிடமும் பக்தி பெருகிப் பாயவேண்டும். கடவுளுக்கும் இந்த உயிருக்கும் உள்ள தொடர்பு நேற்று முன்னாளில் வந்த உறவன்று. மிக நெடும் பண்டைக் கால முதல் நேர்ந்து வருகிறது. கடவுளுடைய கருணை யானது, உயிர்களை நாடி ஓயாமல் உருகிப் பாய்கிறது. கடவுள் உயிர்களைத் தேடி ஏங்குகிறான். தன்னை யறிந்து வந்து கூடிக்கொள்ளும்படி அல்லும் பகலும் கூவியழைக் கிறான். அவை வராவிடில் கண்ணீர் பெருக்குகிறான். ஒரு கணப்பொழுதுகூட உயிர்களைப் பிரிந்திருக்கக் கடவுளால் முடியாது.

ஆனால், உயிர்களோ அவனைத் தேடுவதும் இல்லா மல், பிரிந்து, மறந்து, அவனைவிட்டு நெடுந்தொலைக்குச் சென்று கொண்டிருக்கின்றன. கடவுள் கண்ணுக்குப் புலப்படாத நிலையில், அவனை எவ்வாறு பிரியாமல் சேர் வது? என்று கேட்கலாம். அவன் எப்பொழுதும் பிரியா மல் உயிருக்குயிராய் ஒட்டிக் கொண்டிருக்கிறான் என்பதை உணர்ந்து அவனது அருட்பாதையில் அறத்தொழில் புரிவதே அவனைப் பிரியாமல் அவனோடு கூடி வாழ்வதாகும்.

உயிர்கள் தீமைகளைச் செய்யச் செய்ய, அவை ஆண்டவனைப் பிரிந்து ஆண்டவனை வருத்தித் தாங்களும் வருந்துவதாகவே முடியும். பொன்னைப் பெரிதென்று

மதித்துத் தலைவன் தலைவியைப் பிரிவது போல், உயிர்கள் உலக வாழ்க்கையைப் பெரிதென்று கருதி இறைவனைப் பிரிந்து நீங்குவதாகும். ஆனால் இறைவன் நம்மைத் தினையளவுகூடப் பிரியவிடாமல் இரண்டறக் கலந்து வாழக் கருதுகிறான். அதனை உணர்ந்து, அவனை மறவாமல் அவனுக்குப் பக்தி செலுத்தும் வரையில், நாம் பாவங்களைச் செய்யாது அறவினை புரியும் புண்ணியவான்கள் ஆவோம். இதனை மணிவாசகர் திருவாசகத்தில் கசிந்துருகிப் பாடுகிறார்:

"வினையென் போல் உடையார்
பிறர்ஆர் உடையான் அடிநாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது
திருக்குறிப் பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந்
திருந்துநான் முட்டிலேன் தலைகீறேன்
இனையன் பாவனை இரும்பு கல்மனம்
செவி இன்னதென் றறியேனே."

திருக்கோவைப் பாடலில் காதலர்களின் பிரிவுத் துயரைச் சித்திரித்துக் காட்டிய வாதவூரர், இத்திருவாசகப் பாடலில் இறைவனும் உயிரும் அடையும் பிரிவுத் துயரை அனுபவித்துப் பாடியுள்ளார். இது போன்று திருக்கோவைப் பாடல்களை ஒப்பு நோக்கி உட்பொருள் கண்டு கற்றுச் சுவைப்பது பேரின்பம் தருவதாகும்.

# சங்க மலி செந்தமிழ்

சங்க நூல்கள் என்றவுடன் தொல்காப்பியம், பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்னும் நூல்கள் நம் மனக்கண் முன் வந்து நிற்கும். இவற்றோடு சிலப்பதிகாரத்தையும் சேர்த்துக்கொள்ளலாம். இவை பண்டைத் தமிழ் மக்களின் சிறப்பியல், பண்பாடு, நாகரிகம், கலை நலங்கள், உயர்குணங்கள், இவற்றை யெல்லாம் ஆடியின் நிழல் போல் நமக்கு உள்ளவாறு எடுத்துக் காட்டும் சிறந்த இலக்கியங்கள் ஆகும். இவை தோன்றிய காலம் கி. மு. ஐந்நூறுக்கும் கி. பி. முந் நூறுக்கும் இடைப்பட்ட காலம் என்னலாம். இக்காலப் பகுதிக்குச் சற்றே கழித்து, கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் திருஞான சம்பந்தர். அவர் பாடிய தேவாரப் பாடல்களில் சங்க நூற் கருத்துக்கள் பல பாங்குடன் பதியப் பெற்றுள்ளன. அவற்றுள் சிலவற்றை ஈங்கு எடுத்து ஒன்ற வைத்து ஒப்புமை கண்டு உவப்பதுவே இக்கட்டுரையின் நோக்கம்.

சிவநெறிச் செல்வர்களாகிய சமய குரவர்கள் நால்வர். அவர்களாவார் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்போர். அவர்கள் சைவ சமயத்தின் நான்கு தூண்கள். அவர்கள் சைவ சமயத் திற்கும் தமிழ்மொழிக்கும் தலைவர்களாவார்கள். அவர்கள் பாடியருளியவை தேவாரமும் கோவை திருவாசகமும் ஆகும். அவ்வருட் பாடல்களாகிய திருமுறைகள் யாவும் சிவ வாக்கியங்கள் என்று அறிவுடையோர் நவில்வர். திருஞான சம்பந்தர் தமது பாடல்களைப் பற்றிக் கூறிய ஒரு குறிப்பு ஈண்டைக்குக் கருதத்தகும்:

"எனதுரை தனதுரையாக
நீறணிந் தேறுகந் தேறிய நிமலன்."

சம்பந்தர் பாடிய திருப்பாடல்கள் என்றால், அவை சிவ பெருமான் பாடிய திருப்பாடல்களே யாகும். திருஞான சம்பந்தர் ஒரு தத்துவ ஞானியாய், சிவஞானச் செல்வராய் விளங்கியதோடு ஒரு தமிழ்ப் புலவராகவும் விளங்கினர். தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் மதித்தவர் திருஞான சம்பந்தர். எத்தகைய தத்துவ ஞானியாக ஒருவர் இருந் தாலும், அவர் புலவர்களையும் கற்றோரையும் போற்றும் கருத்துடையராதல் வேண்டும் என்ற அசையாத கொள்கையையுடையவர் சம்பந்தர். அவர் பாடல்கள் பலவற்றில் இது வற்புறுத்தப்படுகிறது. எடுத்துக் காட்டாக ஒன்றை நோக்குவோம் :

"உரவார் கலையின் கவிதைப் புலவர்க் கொருநாளுங்
கரவா வண்கைக் கற்றவர் சேருங் கலிக்காழி
அரவா ரரையா அவுணர் புரமூன் றெரிசெய்த
சரவா என்பார் தத்துவ ஞானத் தலையாரே."

(102—1)

மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறையாரும் வேண்டிக்கொண்டதற்கிணங்கித் திருஞான சம்பந்தர் மதுரைக்குச் சென்றார். ஆ! மதுரையா? ஆம். மதுரை! மதுரத்தையுடையது மதுரை. மதுரம் என்றால் இனிப்பு, இனிமை. தமிழுக்கு இனிமை என்ற பொருள் உண் டல்லவா? தமிழை (இனிமையை)யுடைய ஊர் மதுரை என்றாயது. தமிழ் வளர்ந்தது மதுரையில். தமிழை வளர்த்தவர் சிவபெருமான். சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் நம் சிந்தையுள்ளும் உறைவான், உயர் மதிற்கூடலின் ஆய்ந்த ஒண் தீந் தமிழ் தெய்வத் திருமொழியல்லவா? ஆயுந் தொறுந்தொறும் இன்பம் தருந் தமிழைப் புலவர் பலர் கூடிச் சங்கமிருந்து ஆராய்ந்

ததால் மதுரை கூடல் என்றும் பெயர் பெற்றது என்பர். இறைவன் இறையனர் என்னும் புலவராய்த் தோன்றி அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் நான்கு வேதங்களாகவும், அகப்பொருள், புறப்பொருள் போன்ற பொருள்கள் மலிந்த இலக்கிய இலக்கணங்களை ஆய்ந்ததாலும் மதுரையில் சங்கத் தமிழ் வளர்ந்ததல்லவா? அத்தண்டமிழ் மதுரம் கூட்டுண எழுந்த வேட்கையால் சோமசுந்தரக் கடவுள் சவுந்தர மாற பாண்டியனுகவும், முருகன் உக்கிரப் பெருவழுதி யாகவும், உமாதேவியார் தடாதகா தேவியாகவும் மதுரையில் வந்து வாழ்ந்தார்கள் அல்லவா? அக்கொழி தமிழ்ப் பெருமையை யார் அளவிட முடியும்? இதுவா மதுரை? பாண்டிமாதேவி பணிசெய்ய, நால்வேதமும் பொருள்களும் அருளிக்கொண்டு, அங்கயற்கண் அம்மை யோடும் என் அப்பன் வீற்றிருக்கும் ஆலவாயாகிய மதுரை இதுவா? இதுவா மதுரை? என்று வினவிக் கொண்டே வந்து சம்பந்தர் மதுரைக் கோயிலை வணங்கி ஞராம். அவர் பாடிய பாடலையே பாருங்கள் :

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனுல்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னெடு மமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே."

(378—1)

இங்கு நால்வேதம் என்றது அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்களைக் கூறும் நூல்களை. பொருள்களும் என்றது அகப்பொருள் புறப்பொருள் நூல்களை. இறைவனே அறம் முதலிய நான்கையும்

அருளிச் செய்தான் என்பதை சம்பந்தர் இன்னொரு பாடலிலும் கூறியுள்ளார் :

"சுழிந்தகங்கை தோய்ந்ததிங்கட் டொல்லராநல் லிதழி
சழிந்தசென்னிச் சைவவேடந் தானினைத்தைம் புலனும்
அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு
மொழிந்தவாயான் முக்கணாதி மேயதுமு துகுன்றே."
(53—6)

கல்லாலின் நிழற் கீழிருந்து இறைவன் சனகாதி முனிவர் நால்வர்க்கும் உரைத்தது இவ் வறம்பொருள் இன்பம் வீடு என்னும் நான்குமே என்பதைத் திருவாசகப் பாடல் ஒன்றாலும் நாம் அறியலாம் :

"அருந்தவருக் காலின்கீழ் அறம்முதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடி
அருந்தவருக் கறம்முதல்நான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ."

சங்கத்திற்குக் கழகம் என்றும் பெயர் உண்டு. மதுரையில் கழகம் இருந்த செய்தியை சம்பந்தர் தமது பாடலில் குறிப்பிடுகிறார் :

"திங்களம் போதுஞ் செழும்புனலுஞ்
செஞ்சடை மாட்டயல் வைத்துகந்து
நங்கண் மகிழுநள் ளாறுடைய
நம்பெரு மானிதுவென் கொல்சொல்லாய்
பொங்கிள மென்முலை யார்களோடும்
புனமயி லாட நிலாமுளைக்கும்
அங்கழ கச்சுதை மாடக்கூட
லாலவா யின்க ணமர்ந்தவாறே."
(7—2)

சம்பந்தர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தை "மதுரைத் தொகை" என்றும் குறிப்பிட்டுள்ளார் :

"அற்றன்றி யந்தண் மதுரைத் தொகையாக் கினனும்
தெற்றென் றுதெய்வந் தெளியார் கரைக்கோலை
தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றேன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே."
(312—11)

இதில் பாண்டியர் தமிழ்ச் சங்கம் வைத்து நடத்திய பெருமை கூறப்படுகின்றது.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும் சங்கப் புலவர்களில் ஒருவராக இருந்து தமிழைச் சுவைத்து மகிழ்ந்துள்ளார். சங்கத்துச் சான்றோர்களாகிய தமிழ்ப் புலவர்கள் சிவஞானச் செல்வர்களாவும் திகழ்ந்தவர்கள். "பொய்யடிமையில்லாத புலவர்க்கும் அடியேன்" என்று சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் சங்கப் புலவர்களைக் குறித்துள்ளமை யாரும் அறிந்ததே. எனவே சங்கத் தமிழ் நூல்கள் சைவப் பெரியார்களால் தொன்றுதொட்டே போற்றப்பட்டு வந்துள்ளன.

குழந்தைப் பருவத்திலேயே ஞானப்பால் உண்டு சிவஞானம் பெற்றுத் திருநெறிய தமிழ்ப் பாடல்களைப் பாடத் தொடங்கினவர் சம்பந்தப் பிள்ளையார். அவர் கல்வியிற் பெரியராகவும் விளங்கினர். எல்லாக் கலைகளும் நிரம்பப் பெற்றார். அவருடைய நுண்மாண் நுழைபுலம் அவர் பாடல்களில் நன்கு பளிச்சிட்டுத் தோன்றுகிறது. அவர் பல நூல்களைக் கற்றவர் என்பது பின்வரும் பாடலாலும் தெரியப்படும்:

"குற்றம்நீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்தும்நீ அருத்தம்இன்பம் என்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென் முகம்மனே."
(310—3)

சம்பந்தருடைய பாடல்கள் செந்தமிழ் உறைப்பும் பெற்றுத் திகழ்வன என்று திருநாவுக்கரசரே தமது பாடலில் பாராட்டியுள்ளார். சம்பந்தர் தமிழ், தூய்மையும் இனிமையும் செறிவும் உயர்வும் சுவையும் உடையது. சங்கத் தமிழின் எழில்நலம் சிறிதும் குன்ருமல் உளங் குளிர்ந்த போதெலாம் அவர் உவந்துவந்து பாடினர். சங்க நூல்களை அவர் கசடறக் கற்றிருக்க வேண்டும்; அல்லது கல்லாமலே எல்லாம் அவர்க்குப் புலனுயிருக்க வேண்டும். அவர் பாடல்கள் பலவற்றில் சங்கநூற் கருத்துக்கள் பொன்போல் மின்னிட்டுப் பொலிவுறுகின்றன: அவர் பாடல்களிற் காணப்படும் ஐந்திணைகளைப் பற்றிய செய்திகள், திணைமயக்கங்கள், முதல் கருஉரிப் பொருள்கள், இயற்கை வருணனைகள், செடிகொடி மரங்கள், பறவைகள், விலங்குகள், அகப்பொருட் டுறைகள், இவை யாவும் சங்கப் பாடல்களோடு ஒற்றுமைப் பட்டு ஒத்த கருத்துடையனவாய் மிளிர்கின்றன. எத்தனை எத்தனை காட்சிகளையோ அவர் வண்ண ஓவியங்களாய்த் தீட்டுகிருர். அவர் பாடல்களில், குறிஞ்சித் திணையில் கல்லதிரக் குரங்காடும். அரிமுழங்க யானை ஓடும். மழையுதிர மயிலாடும். மருதத் திணையில் கழனியெல்லாம் கமலங்கள், குளங்களெல்லாம் மேதியினம். ஆறெல்லாம் ஆரல்மீன், கரையெல்லாம் நாரைகள். பொழில்களிலே மலர்சிந்தும், தேன்பிலிற்ற மிஞிறு இசைக்கும். நெய்தலிலே புன்னை அரும்பும், அன்னம் விரும்பும். ஆதலால் சம்பந்தரே தமது பாடல்களை, "சங்கமலி செந்தமிழ்கள்" என்று கூறுவது மிகவும் பொருத்தமேயாகும்:

"துங்கமிகு பொங்கரவு தங்குசடை
நங்களிறை துன்றுகுழலார்
செய்கயல்கண் மங்கையுமை நங்கையொரு
பங்கனமர் தேவூரதன்மேல்

பைங்கமல மங்கணிகொள் திண்புகலி
ஞானசம் பந்தனுரைசெய்
சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை
வல்லவர்கள் சங்கையிலரே."

(332—11)

மலைப் பகுதியில் ஓர் அழகான காட்சி. அருவி திமுதிமு வென்று விழுந்து கொண்டிருந்தது. மூங்கில் மரங்கள் காடாக வளர்ந்து கிடந்தன. மான் கூட்டங்கள் குரலை யெழுப்பி உலாவின. வண்டுகள் முரன்று மலர்களில் தேன் உண்டு சுலாவின. காற்றசைந்து மூங்கிலுட் பாய்ந்து குழலிசையை எழுப்பி விட்டது. அக்குழலிசைக்கு ஏற்ற முழவிசையை அருவி அமைத்துக் கொடுத்தது. கலைமான் தாழவிடுகிற குரல் பெருவங்கியம் வாசிப்பது போன்றிருந்தது, யாழிசையை வண்டுகள் அளிக்கத் தொடங்கின. அவ்வழகிய மலைப் பூஞ்சாரலில் இத்தனை பின்னணியிசையும் சேர்ந்து விட்டால் நாடகம் நடக்காமல் இருக்க முடியுமா? அதைக் காண்பதற்கு அவை கூடிவிட்டது. அங்குள்ள குரங்குக் கூட்டமே அவையத்தார். அவற்றுள் மந்திகளே மிகுதியாய் இருந்தன. கலைநிகழ்ச்சிகளில் எங்கும் பெண்ணினமே முக்கிய பங்கு கொள்ளும் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. இத்தகைய கலைநிகழ்ச்சிகளைக் காண்பதற்கு ஆண்களைவிடப் பெண்களே பேரார்வம் கொள்வர்; ஆதலால் மந்திகள் முந்திக் கொண்டு வந்தன போலும். திரை எழுந்தவுடன் விறலி அரங்கில் வந்து ஆடுவது போல், ஒரு மயில் பாறையில் ஏறி நின்று தோகையை விரித்து நாடகம் ஆடியது. அதை மந்திகள் அமைதியாய் அமர்ந்து வியப்புற்றுக் கண்டன. இவ்வழகிய இயற்கைக் காட்சியைக் கபிலர் அகநானூற்றில் நமக்கு விருந்தாக அளிக்கிறார்:

"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டு யாழாக
இன்பல் லிமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளடுக்கத் தியலி யாடுமயில்
விழவுக்கள விறலியிற் றேன்று நாடன்."

(அகநானூறு-82)

இதே காட்சி மணிமேகலையிலும் சித்திரிக்கப்படு கிறது. இங்கே 'மந்தி நல்லவை' என்று சொன்னதன் கருத்து சிந்திந்தித்து மகிழ்தற்பாலதொன்று. இவ்வாறு இசையமைத்துக் கொடுத்து நாடகம் ஆடச்செய்வதில் சம்பந்தருக்கும் பெருவிருப்பம் உண்டு. அவர் பாடல்கள் பலவற்றில் மயில் நாடகம் ஆடுவதை நாம் நலமுறக் காணலாம்:

"நாடகம தாடமஞ்ஞை பாட அரிகோடல் கைமறிப்ப
நலமார்
சேடு மிகு பேடையனம் ஊடிமகிழ் மாடமிடை
தேவூரதுவே."

(332-1)

அரி என்ருல் வண்டு. கோடல்-செங்காந்தள். செங் காந்தளைக் கைக்கு உவமையாகச் சொல்வது வழக்கம். வண்டு பாட மயில் ஆடும் பொழுது, செங்காந்தள் மலர்கள் பாடலைக் கேட்டும் ஆடலைக் கண்டும் கைமறித்து வியப்பெய்தினவாம். இவ்ஆடலைப் பார்த்துக் கொண் டிருந்த அன்னங்களில் ஆண் அன்னம் தன்னைப் பேணுது மயிலின் நடனத்தில் மிகவும் ஈடுபடுவதைப் பொருது பெண் அன்னம் விளையாட்டாக ஊடி மகிழ்ந்து

தாம். இப்பாடலின் நயத்தை முழுதும் எழுதிக் காட்டி விட முடியாது. இன்னும் பல தேவாரப் பாடல்களில் மயில் நடனத்தைச் சம்பந்தர் குறிப்பிடுகிறார்:

" கொத்தலர் மலர்ப்பொழிலி னீடுகுல மஞ்ஞைநட
மாடவதுகண்
டொத்தவரி வண்டுக ளுலாவியிசை பாடுதவி மாணி
குழியே."
(335-4; 338-3)

இன்னொரு பாடலில் சம்பந்தர் அருவிக்குப் பதில் கடலை மத்தளமாக முழங்கச் செய்து, வண்டிசைக்குத் தக மயிலை ஆடவைக்கிறார்:

" கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல் முழங்க
விண்மொய்த்த பொழில் வரிவண்டிசை முரலும்
வெண்காடே."
(184-8)

கிள்ளை

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை. அதன் வாயலகு வளைந்திருக்கும். அந்தணர்கள் நெருங்கி வாழும் ஊர்களில் உள்ள கிளிகள், வேதம் படிப்போர் அடிக்கடி ஓதிக் கொண்டிருக்கும் வேதமந்திரங்களின் ஓசையைக் கேட்டுத் தாமும் பழகிக் கொள்ளும். பின் அவற்றின் ஓசை கெடாது தாமும் மிழற்றும். ஆதலால் கிளிகளும் ஓதவல்லன வாகின்றன. அவற்றை ஓசை பிறழாமலும் ஒலிக்கின்றன. அவை இதில் பழகித் தேர்ந்திருக்கும் நிலையில், ஆசிரியன் மாணாக்கனுக்குக் கற்றுக் கொடுப்பது போல் வேத பாடங்களை ஓதுகின்றன என்று பெரும்பாணாற்றுப் படையில் கூறப்படும்:

" வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறை காப்பாளர் உறைபதி." (300-301)

வளைந்த வாயினையுடைய கிளிக்கு வேதத்தின் ஓசையைக் கற்பிக்கும் மறைகாப்பாளர் என்றும், வளைந்த வாயினை யுடைய கிளி வேதத்தின் ஓசையைக் கற்பிக்கும் மறை காப்பாளர் என்றும் இருவகையாகப் பொருள் கொள்ளக் கூடியனவாயுள்ளன மேலே குறித்த இருவரிகளும். சம்பந்தரும் இக்கருத்தை அமைத்துப் பல பாடல்கள் பாடியுள்ளார். சம்பந்தர் காட்டும் கிளிகள் வேதம் ஓதுவ தோடு, அதற்குப் பொருள் கூடச் சொல்கின்றன:

"பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோதும் ஓசை கேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லு மிழலையாமே."
(132-1)

"வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே."
(197-2)

"பெரிதிலங்கு மறைகிளை ஞரோதப் பிழைகேட்டலாற்
கருது கிள்ளைக்குலந் தெரிந்து தீர்க்குங் கடற்காழியே."
(249-5)

"சால நல்லார் பயிலும் மறை கேட்டுப் பதங்களைச்
சோலை மேவுங் கிளித்தான் சொற்பயிலும் புகலியே."
(258-2)

அந்தணர் ஓதும் வேதபாடத்தில் பிழைகண்டால் அதனைக் கிள்ளை தீர்த்துவைக்கும் என்றது, பிழையற்ற சரியான பாடத்தை எடுத்துக் கூறும் என்றவாறு.

குறிஞ்சி நிலப்பகுதிகளில், கிளிகள் கூட்டம் கூட்ட மாய் வந்து விளைந்து கிடக்கும் தினைக் கதிர்களைக் கொள்ளை கொள்ளும். அப்பொழுது புனம் காக்கும் மகளிர் கவண் எறிந்து ஓசைகளை எழுப்பிப் பாட்டுப்பாடி அந்தக் கிளி முதலிய பறவைகளை விரட்டுவார்கள். இதனைச் சங்க நூல்களிற் காணலாம்:

"வேட்டுவற் பெறலொ டமைந்தனை யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து
கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி
ஆங்காங் கொழுகா யாயின் அன்னை
சிறுகிளி கடிதல் தேற்றாள் இவளெனப்
பிறர்த் தந்து நிறுக்குவ ளாயின்
உறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே.''

(அகநானூறு-28)

"வள்ளுயிர்த் தெள்விளி இடையிடை பயிற்றிக்
கிள்ளை ஓம்பியும்.'' (குறிஞ்சிப்பாட்டு 100-101)

கிள்ளைத் தெள்விளி என்பது கிளிகளை ஓட்டுகிற ஓசை. இதனைச் சம்பந்தர் தேவாரத்திலும் காணலாம்:

"வெஞ்சொற் பேசும் வேடர் மடவார் இதணமதுவேறி
அஞ்சொற் கிளிகள் ஆயோ வென்னும்
அண்ணாமலையாரே.''

(69-2)

பழையகாலத்தில் இளம்பெண்கள் வீடுகளில் கிளிகளைப் பிரியமாக வளர்த்து அவற்றைப் பேசக் கற்றுக் கொடுக்கும் வழக்கம் இருந்து வந்தது. காதலனைப் பிரிந்திருக்கும் காதலி, வேறு யாரிடத்திலும் தன் இன்ப துன்பங்களை எடுத்துச் சொல்ல முடியாத நிலையில், தான் வளர்த்த கிளியைக் கையில் வைத்துக் கொண்டு அதனோடு பேசுவதாகப் புலவர்கள் கவிபாடுவது மரபு. இங்கே ஒரு பாடலைக் காணலாம்:

"பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி
துறைவிட் டன்ன தூமயி ரெகினம்
துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பில்
செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி
இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்தென
இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென
மழலை இன்சொல் பயிற்றும்
நாணுடை அரிவை மாணலம் பெறவே.''

(அகநானூறு—34)

இங்ஙனமே கிள்ளையாருடன் கொஞ்சிப் பேசுகிருர் நமது பிள்ளையாரும். அஃது ஓர் அகத்துறைத் தேவாரப் பாடல். சிவனிடத்துக் காதல் கொண்ட ஒரு தலைவி, தான் வளர்த்த கிளிப்பிள்ளைக்கு அவனுடைய திருநாமங்களைச் சொல்லிக் கொடுத்து, அவற்றை அது மிழற்றக் கேட்டு மகிழ்வ தாகவும், அவ்விதம் இறைவன் திருநாமங்களை அது திரும்பத் திரும்பச் சொன்னுல், தேனும் பாலும் உண்ணத் தருவதாகச் சொல்லிக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசி இறைவனிடத்துத் தான் கொண்ட காதலை வெளிப்படுத்துவ தாகவும் சம்பந்தர் பாடுகிருர். அத்தேவாரம் நம் உள்ளத்தை உருக்குகின்றது;

“ சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனெடுபால்
முறையாலே யுணத்தருவன் மொய்பவளத்
தொடுதரளந்
துறையாருங் கடற்றேணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே.”
(90—10)

அன்றில்

கிளியைப் போல் அன்றில் பறவையும் அகத்துறைப் பாடல்களில் அடிக்கடி கூறப்படும். அன்றில் பறவையினுடைய ஒரு சிறப்பு என்னவென்ருல், அவை ஆணும் பெண்ணும் எப்பொழுதும் இணைபிரியாமல் வாழும் இயல்பின. பெரும்பாலும் அவை பனைமரங்களிலேயே கூடு கட்டிக் கொண்டு வதியும். இதைக் குறிப்பிடும் சங்கப் பாடல்கள் பல உள்ளன:

“ மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும்.”
(குறுந்தொகை—177)

“ முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்
கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை யகவும் பானுட் கங்குல்.”
(குறுந்தொகை—301)

" மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்
துணையொன்று பிரியினுந் துஞ்சா காணென."

(அகநானூறு—50)

இவ்வாறு இன்னும் பல பாடல்கள் உள்ளன. சம்பந்தர் ஒரு தேவாரப் பாடலில், பனைமரத்தில் இணைபிரியாமல் வாழ்கின்ற அன்றில் பறவைகளை விளித்துத் தோணி புரத்தில் (சீகாழியில்) கோயில் கொண்டிருக்கும் சிவபெரு மானிடம் தூது அனுப்புவதாகப் பாடியுள்ளார்:

" முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறுநோய் அறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையுங்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறீரே."

(60—7)

தலைவனைப் பிரிந்த தலைவி தனிமையால் வருந்தி வாடுவதால் மெலிந்து மேனியெல்லாம் ஒருவித வெளிறின நிறம் படரும். இதனைப் பசலை நோய் என்று சங்க நூல்கள் கூறும். பசலையைப் பசப்பு, பயப்பு என்றும் வழங்குவர்.

" நயந்தனன் கொண்ட கேண்மை
பயந்தக் காலும் பயப்பொல் லாதே "

(குறுந்தொகை—264)

" ஊருண் கேணி உண்துறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே."

(குறுந்தொகை—399)

மேலே குறித்த அன்றிற் பாடலில் சம்பந்தர் பசலை என்பதைப் பயலை என்று வழங்கியுள்ளார். இதுபோல் அவர் பல பாடல்களில் குறித்துள்ளார். அன்றிலைத் தூது செலுத்தும் அத்தேவாரப் பாடல் அகத்துறைப் பாடலாக

அமைந்துள்ளதை அறிஞர்கள் காணலாம். "காமப் பகுதி கடவுளும் வரையார், ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்" (23) என வரும் தொல்காப்பியம், புறத்திணையியற் சூத்திரம், முழு முதற் கடவுளைத் தலைவனாகக் கொண்டு தேவர்களும் மக்களுமாகிய உயிர்கள் அன்பினால் காதலித்து வாழும் ஒழுகலாற்றைக் குறிப்பதாகும். இக் குறிப்பினை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியங் களில் விரித்துரைக்கப்படும் அகப்பொருட்டுறை அமையப் பாடிய அகத்துறைப் பாடல்கள் தேவார திருவாசக நூல்களிடையே பலவாகக் காணப்படுகின்றன. சம்பந்தர் தேவாரத்திலும் மிகுதியாக உள்ளன.

குயில்

இளவேனிற் காலத்தில் குயிற் பறவை மாமரத்தி லுள்ள இளந்தளிர்களை அலகால் கோதியெடுத்து உண்ணும். இச்செய்தியைப் பல சங்கப் பாடல்கள் இனி தியம்புகின்றன:

"வதுவை நாற்றம் புதுவது கஞல
மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்
படுநா விளியால் நடுநின் றல்கலும்
உரைப்ப போல ஊழ்கொள்பு கூவ."

(அகநானூறு—25)

"மின்னின் தூவி இருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
நறுந்தாது கொழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தல் தைவரு வேனே."

(குறுந்தொகை—192)

"மாநனை கொழுதி மகிழ்குயில் ஆலும்."

(நற்றிணை—9)

தோணிபுரத்திறைவனைத் தன்னிடம் வரும்படியாய்க் கூவும்படி ஒரு குயிலை வேண்டித் தலைவி பாடியதாகக் கூறும் சம்பந்தர் தேவாரம் ஒன்றில், குயில் மாந்தளிரைக்

கோதும் செயல் அமைந்திருப்பது அறிந்து இன்புறத் தகும். அஃது இளவேனிற் காலம் என்பதைக் குறிப்பிற் புலப்படுத்துவதாகும்:

" பாஞறு மலர்ச் சூதப் பல்லவங்கள் அவைகோதி
ஏஞேர்க்கும் இனிதாக மொழியும் எழில் இளங்குயிலே
தேஞரும் பொழில்புடை சூழ் திருத்தோணி புரத்தமரர்
கோஞரை என்னிடைக்கே வர ஒருகாற் கூவாயே."

(60—8).

(சூதம் = மாமரம்; பல்லவம் = தளிர்.)

வண்டு

இது காறும் கிளி, அன்றில், குயில் ஆகிய பறவை களைப் பற்றிப் பார்த்தோம். இது போல் வண்டை விளித்தும் தலைவி தலைவனுக்குத் தூது சொல்லிவிடும் வழக்கு தமிழ்ச் சங்கப் பாடல்களில் உண்டு:

" கொடியை வாழி தும்பி இந்நோய்
படுகதில் லம்ம யானினக் குரைத்தென
மெய்யே கருமை யன்றியுஞ் செவ்வன்
அறிவுங் கரிதோ அறனிலோய் நினக்கே
மனையுறக் காக்கு மாண்பெருங் கிடக்கை
நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய
தாறுபடு பீரம் ஊதி வேறுபட
நாற்ற மின்மையிற் பசலை யூதாய்.
சிறுகுறும் பறவைக் கோடி விரைவுடன்
நெஞ்சுநெகிழ் செய்ததன் பயனே அன்பிலர்
வெம்மலை யருஞ்சுர மிறந்தோர்க்கு
என்னிலை யுரையாய் சென்றவண் வரவே."

(நற்றிணை—277)

இதுபோல் இறைவனிடம் ஒரு தலைவி வண்டைத் தூது விடுவதாக ஞானப் பிள்ளையார் பாடியுள்ளார்.

" வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே ஒளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற்
பகராயே."
(60—1)

நாரை

எத்தனையோ வகை மீன்கள் உள்ளன வேனும், நாரையைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, சிறப்பாக ஆரல் மீனை அவை அருந்துவதாகச் சொல்வது சங்க நூல்மரபு.

" ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே."
(குறுந்தொகை—25)

" ஆரல் அருந்தும் வயிற்ற நாரை."
(குறுந்தொகை—114)

சம்பந்தர் பாடல்கள் சிலவற்றில் நாரைகள் ஆரல் மீனை வாரி வாரி உண்பதை நாம் காணலாம்.

" அள்ளல் நாரை ஆரல்வாரும் அந்தண் ஆரூர் என்பதே."
(237—6)

" நாரைகள் ஆரல்வாரிவயல் மேதிவைகும் நனிபள்ளி
போலும் நமர்காள்."
(220—1)

" நீண்ட நாரை யிரை ஆரல் வார."
(258—9)

நெய்தல் நிலத்தில் வளரும் தாழை மரத்தினது வெள்ளிய பூ குருகு என்று சொல்லப்படும் நாரைப் பறவைதானோ என்று சொல்லும்படியாகத் தோற்றம் அளிக்கும். இக்கருத்து குறுந்தொகைப் பாடல் ஒன்றிற் காணப்படுகிறது :

"தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை."
(குறுந்தொகை—226)

இக்கருத்தை அமைத்து சம்பந்தர் சுவையுள்ள ஒரு காட்சியைச் சித்திரிக்கிருர். நீர்க்கரையில் நின்ற தாழைச் செடியில் பூத்த மலரின் நிழல் தண்ணீரில் விழுந்ததாம். அந்நிழலைக் கண்டு குருகு எனப் பயந்த கெண்டை மீன் ஓடிப்போய்த் தாமரை மலருக்குப் பின்ஞல் ஒளிந்ததாம். அதனைக் கண்டு கடற்கரையில் கிடக்கும் முத்துக்கள் சிரிப்பன போன்று தோன்றியனவாம். இஃது ஒரு நல்ல வேடிக்கைக் காட்சி என்று வியந்து பாடுகிருர் சம்பந்தர்:

"விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின்
தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்தம் நகைகாட்டும் காட்சியதே."
(184—4)

இது பேதைமை பொருளாகப் பிறந்த நகைச்சுவை யும் மயக்கவணியும் அமைந்து விளங்குவதைக் காணலாம். இதனேடு அப்பர் தேவாரப் பாடல் ஒன்றையும் ஒப்பு நோக்குதல் தகும்:

"நெய்தற்குருகு தன்பிள்ளையென் றெண்ணி நெருங்கிச்
சென்று
கைதை மடல்புல்கு தென்கழிப் பாலை யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன்வைத்த பரிசறியோம்
எய்தப்பெறின் இரங்காது கண்டாய்நம் மிறையவனே."

இது சம்பந்தருடைய மற்ருெரு பாடலையும் நமக்கு நினைப் பூட்டுகிறது:

"ஏழை வெண்குரு கயலே
யிளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந்
தண்மறைக் காடமர்ந் தார்தாம்

மாழை யங்கய லொண்கண்
மலைமகள் கணவன் தடியின்
நீழ லேசர ணுகநினைபவர்
வினைநலி விலரே." (227—4)

புன்கம்

புன்க மரத்தின் பூக்கள் நெற்பொரியைப் போன்று தோன்றும் என்பதாக நாம் சங்கப் பாடல்கள் பலவற்றில் படிக்கிறோம். புன்கு மலர்களைச் சிந்தியது என்பதற்குப் பதில், பொரியைச் சிந்தியது புன்கு என்றே பாடுவர்:

"பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு."
(சிலப்பதிகாரம்—12)

புன்கமலர் வெள்ளை நிறமுடையதாயும், சிறியதாயும், உருண்டையாயும் இருப்பதால், அத்தன்மைகளையுடைய மெல்லிய நெற்பொரியோடு உவமிக்கப்பெற்றது. புன்கின் பூ உதிர்ந்த மணற்பரப்பு, பொரி சிந்தியதுபோல் இருப்பதால், அவ் வெண்மணல் வேலன் வெறியாடு களம்போல் காட்சியளிக்கும் என்பர்:

"நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
எக்கர் நண்ணிய எம்மூர் வியன்துறை."
(குறுந்தொகை-53)

சோலைகளில் புன்கமரத்தில் பொரி போன்று மலர்கள் பூத்திருப்பது ஓர் அழகுக் காட்சியாய் விளங்கும்.

"பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக் கொளாஅ."
(குறுந்தொகை-34)

சம்பந்தரும் புன்கமலரைப் பொரியோடு உவமித்துப் பாடியுள்ளார்.

"அரியேர் கழனிப் பழனஞ் சூழ்ந்தங் கழகாய
பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே."

(199-4)

இன்னொருபாடலில், தாமரை மலராகிய நெருப்பில் புன்கமலராகிய பொரியைத் தூவி ஒரு திருமணமே நிகழும்படி செய்து விடுகிறார். அது படித்துச் சுவைக்க வேண்டிய தொரு பாடல்:

அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற்
றைம்புலனும் அடக்கி ஞானம்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும்
புராணர்கோயில்,
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கந்திகழச்
சலசத்தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணஞ்செய்யு
மிழலையாமே."

(132-6)

முல்லை

முல்லைக் கொடியில் சிறிய வெள்ளிய அரும்புகள் தோன்றுவது பல்லைக் காட்டிச் சிரிப்பது போன்றிருக்கும். வினைமுற்றி மீளும் தலைவன் ஒருவன் மாலை வேளையில் மலர்ந்து கிடக்கும் முல்லையரும்புகள் தன் தனிமையைக் கண்டு எள்ளி நகைப்பதாகத் தன்மனத்திற் கொண்டு முல்லையை விளித்துப் பாடுகிறான் பாருங்கள்:

"கார்புறந் தந்த நீருடை வியன்புலத்துப்
பலர்புகு தரூஉம் புல்லென் மாலை
முல்லை வாழியோ முல்லை நீநின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
நகுவை போலக் காட்டல்
தகுமே மற்றிது தமியோர் மாட்டே."

(குறுந்தொகை-162)

எள்ளி நகையாடாமல் மகிழ்ச்சியால் புன்முறுவல் செய்வதற்கும் முல்லையைப் பயன்படுத்தலாம். திருமுது குன்றத்தில் காட்டு வேடுவர் கூடிநின்று இறைவனைக் கோயிலில் வழிபட்டுக் கும்பிடும் பொழுது, பக்கத்திலுள்ள முல்லை புன்முறுவல் பூத்துக் குலுங்கியது என்ற சம்பந்தர் பாடலைப் படித்து நாமும் முறுவல் பூக்கலாம்:

"அல்லி மலர்மேல் அயனும் அரவின் அணையானும்
சொல்லிப் பரவித் தொடர வொண்ணுச் சோதியூர்
கொல்லை வேடர் கூடிநின்று கும்பிட
முல்லை யயலே முறுவல் செய்யும் முதுகுன்றே." (200-9)

அயனும் மாலும் பரவித் தொடர வொண்ணுத சோதி யான இறைவனைப்பரவித்தொடர இக்கொல்லை வேடருக்கு முடிந்ததே என்று முல்லைக்கொடி முறுவல் செய்ததாம். இக்கொல்லை வேடரும் மிக எளிதில் பரவித் தொடரும் இறைவனை அயனும் மாலும் பரவித் தொடரவொண்ணுது போயினரே என்று முல்லைக்கொடி சிரித்ததாகவும் கொள் ளலாம். இதன் நயம் ஓர்ந்துணரத் தகும்.

### செங்காந்தள்

ஒள்ளிய செவ்விய காந்தள்மலர் கீழ்காற்றுல் வீழ்த் தப்பட்டு, பல வரிகளையுடைய பாம்பின் படம் ஒடுங்கிய தைப்போல் குவிந்து பாறையின்மேல் கவிந்து கிடக்கும். இவ்வாறு காந்தளைப் பாம்புக்கு உவமை சொல்லும்போது, அக்காந்தள் மலரில் வீழும் வண்டுக்குப் பாம்பின் மணியை உவமை சொல்வதும் உண்டு:

"சொல்லின் எவனும் தோழி பல்வரிப்
பாம்புபை யவிந்தது போலக் கூம்பிக்
கொண்டலில் தொலைந்த ஒண்செங் காந்தள்
கன்மிசைக் கவியும் நாடற்குஎன்
நன்மா மேனி யழிபடர் நிலையே."

(குறுந்தொகை—185)

"தொடிஞெகிழ்ந் தனவே தோள்சா யினவே
விடுநாண் உண்டோ தோழி விடர்முகைச்
சிலம்புடன் கமழும் அலங்குகுலைக் காந்தள்
நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புமிழ் மணியில் தோன்றும்."

(குறுந்தொகை—239)

காந்தளைக் கோடல் என்றும் வழங்குவர். சம்பந்தரும் காந்தள் மலரைப் பாம்பிற்கு ஒப்பிட்டுத் தமது பாடலில் சிறப்பித்துள்ளார் :

"கொந்தண் பொழிற்சோலை
யரவிற் றோன்றிக் கோடல்பூத்
தந்தண் பழையனூர்
ஆலங் காட்டெம் மடிகளே." (45—3)

"பையரம்விரி காந்தள் விம்மு பரிதிந் நியமத்து."

(362—11)

பெண்களின் கைகளுக்குச் செங்காந்தள் மலரை உவமிப்பதும் உருவகம் செய்வதும் கவிஞர் மரபு. பெண்ணின் மெல்லிய கைவிரல்களுக்குக் காந்தள் மலரை ஒப்புக் கூறுவது சங்கநூல் மரபு :

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்."

(குறுந்தொகை—167)

"நெடுவரை மிசைஇய காந்தள் மெல்விரல்."

(பொருநராற்றுப்படை—33)

சம்பந்தரும் கோடலாகிய செங்காந்தள் மலரைக் கைக்கு உவமை கூறி மகிழ்கிறார் :

"கோடல் கைமறிப்ப" (332—1)

திருநாவுக்கரசரும் "செங்காந்தள் கைகாட்ட" என்று திருப்புத்தூர்ப் பதிகத்தில் பாடியுள்ளார்.

**வேங்கை**

குறிஞ்சி நிலத்தில் வளரும் ஒருவகை மரம் வேங்கை. அதன் மலர்கள் பொன்போல் மஞ்சள் நிறம் கொண் டவை. வேங்கை மரத்தடியிலுள்ள குண்டுப் பாறைகளில் அதன் மஞ்சள் மலர் உதிர்ந்து கிடப்பது ஓர் அழகுக் காட்சியாய் இருக்கும். மஞ்சள் நிற வேங்கை மலர்களால் மூடப்பட்ட பாறை உண்மைப் புலி போலவே தோன்றும். குறவர் மகளிர் வேங்கை மலர் பறிக்கச் சென்ருல் "புலி! புலி!" என்று ஆரவாரம் செய்வது பண்டைத் தமிழ் வழக்கம். புலி போன்றிருப்பதாலேயே அந்த மரத்திற்கு வேங்கை என்று பெயர் வந்தது. குறிஞ்சித் திணையைப் பாடும் சங்கப் புலவர்களுக்கு வேங்கையைப் பற்றிப் பாடு வதில் ஒரு தனி ஆர்வம் உண்டு. வேங்கை மலர்கள் வரிவரியாகப் பாறைமேல் விழுந்து கிடப்பதும், பாறை புலிபோல் தோன்றுவதும் பல சங்கப் பாடல்களிற் கூறப் படும் :

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட் டொள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறங் கடுக்கும்."

(புறநானூறு—202)

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றும்."

(குறுந்தொகை—47)

சம்பந்தர் இக்கருத்தை உட்கொண்டு, காற்றடிப்ப தால் வேங்கை மரங்கள் பாறைகள்மேல் பூக்களைச் சொரி யவும், அப்பாறைகளைப் புலியென்று நினைத்து அங்குப் பதுங்கிக் கிடக்கும் உண்மைப் புலிகள் அவற்றின்மேல் சீறிப்பாயும் என்று அழகுறப் பாடியுள்ளார் :

"மடந்தை பாகத் தடக்கிம்
மறையோதிவா னேர்தொழத்
தொடர்ந்த நம்மேல் வினைதீர்க்க
நின்ருர்க்கிட மென்பரால்

உடைந்த காற்றுக்குயர் வேங்கை
பூத்துதிரக் கல்லறைகள்மேல்
கிடந்த வேங்கை சினமா
முகஞ்செய்யுங் கேதாரமே.'' (250—7)

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் வேங்கை மரத்தை ஒரு சோதிடம்வல்ல தெய்வமாகக் கொண்டு வழிபடுவர். அதனால் அது கணிவேங்கை என்றும் அழைக்கப்படும். வேங்கை மலரும் காலத்தை அறிந்துதான் திருமணங்கள் நிகழும். தினைப்புனங்கள் அறுவடையாகும் காலமும் அதுதான். விழாக்கோலம் கொண்ட குறவரும் குறத்தியரும் ஆடும் கூத்தாட்டங்களும் குரவைகளும் வேங்கை நிழலிலேதான் நிகழும்.

''வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே.''
(அகநானூறு—2)

சங்க காலத்துப் பயின்றுவந்த இவ்வழக்கத்தை, சம்பந்தர், திருக்காளத்தி மலையில் நின்று பாடும்பொழுது இனிது எடுத்துப் புகல்கின்றார் :

''இனதளவி லிவனதடி யிணையுமுடி
யறிதுமென விகலு மிருவர்
தனதுருவ மறிவரிய சகலசிவன்
மேவுமலை தன்னை வினவில்
புனவர்புன மயிலனைய மாதரொடு
மைந்தரு மணம்புண ருநாள்
கனகமென மலர்களணி வேங்கைகள்
நிலாவு காளத்தி மலையே.'' (327—9)

பாம்பு

படநாகங்களின் தலையில் மணிகள் உண்டென்றும், இரவில் பாம்புகள் தலையிலுள்ள மாணிக்கத்தைக் கீழே உமிழ்ந்து வைத்து, அதன் விளக்கொளியில் இரைதேடும்

என்றும் பண்டைக் காலத்தோர் நம்பிவந்தனர். இதற்கான குறிப்பு சங்கப் பாடல்களிற் காணப்படுகிறது:

"உருமுச் சிவந்தெறிந்த உரனழி பாம்பின்
திருமணி விளக்கிற் பெறுகுவை."

(அகநானூறு—92)

"ஆடுகளை நரலும் அணங்குடைக் கவாஅன்
ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
இருங்களி றட்ட பெருஞ்சின வுழுவை
நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த
மேய்மணி விளக்கிற் புலர வீர்க்கும்
வாணடந் தன்ன வழக்கருங் கவலை."

(அகநானூறு—138)

இவ்வாறு பாம்புகள் உமிழ்ந்த நாகரத்தினத்தின் ஒளியால் காளத்தி மலை இரவில் கனகம்போல் சுவலித்துக் கொண்டிருக்கும் என்று சம்பந்தர் பாடுகிறார்:

"ஆருமெதி ராதவலி யாகியச
லந்தரனை யாழியதனல்
ஈரும்வகை செய்தருள் புரிந்தவ
னிருந்தமலை தன்னைவினவில்
ஊருமர வம்மொளிகொண் மாமணியு
மிழ்ந்தவையு லாவிவரலால்
காரிருள் கடிந்துகன கம்மெனவி
ளங்குகா ளத்திமலையே."

(327—7)

இடியென்றால் பாம்புகள் குலைநடுங்கிச் சாகும். இடியொலி கேட்ட நாகம் அஞ்சியொடுங்கிப் படத்தைச் சுருக்கிக் கொண்டு குழிகளுக்குள்ளே போய்ப் பதுங்கிக் கொள்ளும். இக்கருத்து சங்க இலக்கியத்துள் பல இடத்தும் பயின்றுவரக் காணலாம்:

"உருமுச் சிவந்தெறிந்த உரனழி பாம்பின்"

(அகநானூறு—92)

"நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும்
கடுவிசை யுருமின் கழறுகுரல் அளைஇ."
(குறுந்தொகை—158)

சம்பந்தர் தேவாரத்திலும் இக்கருத்து வந்துள்ளதை நாம் படித்து ஒப்புமை நோக்கி உள்ளம் மகிழலாம் :

"குடங்கையி னுடங்கெரி தொடர்ந்தெழ
விடங்கிளர் படங்கொளரவம்
மடங்கொளி படர்ந்திட நடந்தரு
விடங்கன திடந்தண் முகில்போய்த்
தடங்கடல் தொடர்ந்துடன் நுடங்குவ
விடங்கொளமி டைந்தகுரலால்
கடுங்கலின் முடங்களை நுடங்கர
வொடுங்குகயி லாயமலையே." (326—5)

யானை

யானை ஒரு பெரிய விலங்குதான். ஆனால் அதனையும் விழுங்கும் மலைப்பாம்புகள் உண்டு என்பதைச் சங்கப் பாடல்களிலிருந்து நாம் தெரியவருகிறோம் :

"ஞால்வாய்க் களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்
நெடுவரை விடரகத் தியம்பும்."
(நற்றிணை—14)

இக்குறிப்பைச் சம்பந்தர் பாடிய பாடல் ஒன்றிலும் காணலாம்:

"புரிகொள் சடையர் அடியர்க் கெளியார் கிளிசேர்
மொழிமங்கை
தெரியவுருவில் வைத்துகந்த தேவர்பெரு மானார்
பரிய களிற்றை அரவு விழுங்கி மழுங்கவிருள் கூர்ந்த
கரிய மிடற்றர் செய்ய மேனிக் கயிலைமலை யாரே"
(68—2)

மேலே குறித்த நற்றிணைப் பாடலில் ஆண்யானையைப் பாம்பு விழுங்கி விட்டதால் பெண்யானை பெருந்துய

ரெய்தி இரவில் உறங்காமல் மலைச்சாரல் முழுதும் எதி ரொலிக்கும்படி முழங்கிக் கொண்டிருந்த செய்தியை நாம் படிக்கிறோம். இதுபோல், தன்னிடமிருந்து தவறிப் போன பெண்யானையைக் காணாமல் அதனைத் தேடி ஓடிப் பெரு முழக்கம் செய்த ஆண்யானை மலைச்சாரல் எல்லாம் அதிரும்படி அதனை அழைத்துத் திரிந்து பின் சோர்ந்து உறங்கும் என்று கூறும் சம்பந்தர் பாடிய பாடல் ஒன்று சுவை பயக்கின்றது :

"இழைத்த விடையா ளுமையாள்பங்க ரிமையோர்
பெருமானார்
தழைத்தசடையார் விடையொன்றேறித் தரியார்
புரமெய்தார்
பிழைத்தபிடியைக் காணாதோடிப் பெருங்கைமத வேழம்
அழைத்துத் திரிந்தங் குறங்குஞ்சாரல் அண்ணாமலை
யாரே." (69-4)

யானை யாமரத்தின் பட்டையையும் மராஅமரத்தின் பட்டையையும் உரித்துத் தின்னும். மூங்கில் மரத்தின் முளைகளையும் முறித்துத் தின்னும். பசித்த தன் பெண் யானைக்கு வாயில் ஆண்யானை இரை எடுத்துக் கொடுப் பது கண்கொள்ளாக் காட்சியாகும். இதனை எடுத்துக் கூறுவதில் சில சங்கப்புலவர்கள் கழிபேருவகை எய்துவர். அக்குறிப்பு வரும் சில பாடற் பகுதிகளை நோக்குவோம் :

"பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்." (குறுந்தொகை-37)

"வடாஅது, வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போலப்
புன்றலை மடப்பிடி உணீஇயர் அங்குழை
நெடுநிலை யாஅம் ஒற்றி நனைகவுள்
படிஞிமிறு கடியும் களிறே." (அகநானூறு-59)

"யானைதன், கொன்மருப் பொடியக் குத்திச்
சினஞ்சிறந்து
இன்னு வேனில் இன்துணை ஆர,
முளிசினை மராஅத்துப் பொளிபிளந் தூட்ட."
(அகநானூறு-335)

"பசுங்கழை தின்ற கயவாய்ப், பேதையானை."
(குறுந்தொகை-179)

இதுபோல் சம்பந்தர் பாடலிலும் கற்குடிமாமலையில் மூங்கிலின் முளைகளை வாரிப் பெண்யானையின் வாயில் ஆண்யானை அன்புடன் கொடுத்து ஆதரவு காட்டுவதைக் காணலாம் :

"ஒருங்களிநீ யிறைவா வென்றும்பர்கள் ஓலமிடக்கண்
டிருங்கள் மாரவிடத்தை யின்னமு துண்ணிய வீசர்
மருங்களியார் பிடிவாயில் வாழ்வெதிரின் முளைவாரிக்
கருங்களி யானைகொடுக்குங் கற்குடிமா மலையாரே."
**(43-4)**

மலைக்காட்டில் வாழும் யானைகள் மூங்கிலை வளைத்துத் தழைகளையும் முளைகளையும் தின்றுவிட்டு வளைத்த மூங்கிலைக் கைவிடும்பொழுது அது விரைந்து மேல் எழும் காட்சி, மீனைப் பிடித்த தூண்டிற்கோல் மேலே விசைத் தெழுவது போன்றிருக்குமாம் :

"கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலின் நிவக்கும்." (குறுந்தொகை-54)

இதனைப் பாடிய சங்கப் புலவரின் பெயர் தெரியவில்லை. ஆயினும், இவ்வழகிய கருத்தைக் கூறிய அப்புலவருக்கு அவர்பாடிய பாடலிலுள்ள சொற்றொடரைக் கொண்டே 'மீனெறி தூண்டிலார்' என்ற பெயர் அமைவதாயிற்று. யானை வளைத்துப் பின் விட்டமையால் விசைத்தெழுந்து பின் வானத்தைத் தோய்ந்த பசிய மூங்கில், அவிழ்த்து விடப்பட்ட குதிரை துள்ளியெழும் எழுச்சியைப் போன்று

காட்சியளிக்கிறது என்று மற்ருெரு சங்கப்புலவர் பாடினர்:

"விட்ட குதிரை விசைப்பி னன்ன
விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்."
(குறுந்தொகை-74)

இதனைப் பாடிய புலவர் பெயரும் தெரியவில்லை. ஆனால் அவர் கூறிய உவமை நயம் நோக்கி, அவர் 'விட்ட குதிரையார்' என்னும் பெயர் பெற்ருர். இங்ஙனம் யானை தழையைத் தின்றுவிட்டுக் கழையைக் கைவிடவும், அம் மூங்கில் விரைந்து மேலெழுந்து மழைமேகத்தைக் கீறியது என்று அழகுறப் பாடி அம்மலையின் உயர்ச்சியைக் குறிப்பிற் புலப்படுத்துகிருர் சம்பந்தர் :

'வாளமர் வீர நினைந்த விராவணன் மாமலை யின்கீழ்த்
தோளமர் வன்றலை குன்றத் தொல்விர லூன்று
துணைவர்
தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட விசைபோய்க்
காளம தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே."
(43-8)

அருவி

மிக உயர்ந்த மலையின் உச்சியிலிருந்து மிகத் தாழ்ந்த தாழ்வரையில் அருவி விழும்பொழுது ஒரு பேரொலி உண்டாகிறது. அந்த அருவியின் இரைச்சலிலும் ஒரு வகை இன்னிசை இருப்பதாகவே புலவர்கள் கண்டனர். சங்கப்புலவர்கள் அருவியின் தாளமேள ஓசைக்கு முழ வொலியை ஒப்புமை கூறினர் :

"பெருவரை மிசையது நெடுவெள் ளருவி
முதுவாய்க் கோடியர் முழவிற் றதும்பிச்
சிலம்பி னிழிதரும் இலங்குமலை வெற்ப,"
(குறுந்தொகை-78)

"பாடின் னருவிப் பனிநீ ரின்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாக" (அகநானூறு-82)

முழவொலியோடு யாழொலி குழலொலிகளைக்கூட அருவி யொலியிற் கண்டு மகிழ்ந்த புலவர்களும் உண்டு:

"யாழுங் குழலு முழவு மியைந்தென
வீழும் அருவி விறன்மலை நன்னாட." (திணைமொழி-7)

சம்பந்தரும் தமது தேவாரத்தில் அருவியின் இசையைப் பல படியாகப் புனைந்து பாராட்டியுள்ளார் :

"உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமுனி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண மறுமே."
(10-1)

"தந்தத் திந்தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்து
போய்ச்
சிந்த வெந்தகதி ரோனொடு மாசறு திங்களார்
அந்த மில்லவள வில்ல வனேகதங் காவதம்
எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே."
(141-4)

குரங்கு

மலைப்பகுதிகளிலுள்ள சோலைகளில் மாம்பழம், பலாப் பழம் போன்ற கனிகளைக் குரங்குகள் வயிறார உண்டு மகிழும். அக்கவிகளின் குணத்தையும் கனிகளின் மணத்தையும் மலைச் சாரற் பகுதிகளில் நாம் இன்றும் கண்டு இன்புறலாம். அவ்வியற்கைக் காட்சியை எழிலுறச் சித்திரிப்பது சங்கப்புலவர்களுக்கு உவகை தரும் செயலாகும். அத்தகைய பாடல்கள் பலவுள்ளன. சில வருமாறு :

"தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையொடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனும் அறியும்அக் கொடியோ னையே."
(குறுந்தொகை-26)

"நீடுமயிர்க், கடும்பக லூகக் கறைவிர லேற்றை
புடைத்தொடுபு உடைஇப் பூநாறு பலவுக்கனி
காந்தளஞ் சிறுகுடிக் கமழும்
ஓங்குவலை நாடனெடு அமைந்தநம் தொடர்பே."

(குறுந்தொகை-373)

இச்சங்கப்பாடல்களைப் படிக்கும் பொழுது உண்மையிலே நம் நாவில் ஒரு கனிச் சுவை ஊறுவது போலவும், மூக்கில் நறுமணம் ஏறுவது போலவும் ஓர் இன்ப உணர்ச்சி மேலிடுகின்றது. அத்தகைய மலைச்சாரல்களில் கனிமணம் கமழ்வதை இன்றும் நாம் உண்மையாகக் காண்கின்றோம். சம்பந்தர் பாடலிலும் இத்தகைய நுகர்ச்சியை நாம் பெற லாம் :

"நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கி நீள்வரை தன்மேல்
தேறுசிந்தை யுடையார்கள் சேரும் மிடமென்பரால்
ஏறிமாவின் கனியும்பல வின்னிருஞ் சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையொ டுண்டுகளுங் கேதாரமே."

(250-6)

இயற்கையை நன்கு நுனித்தறிந்து பாடவல்லவர்கள் சங்கப்புலவர்கள். குரங்குகளின் விரல்கள் கரிய நிறமுடையனவாய் இருக்கும் என்பது ஒரு நுட்பமான செய்தி. இதனையும் பாடலில் எடுத்துக்கூற அவர்கள் தயங்குவதில்லை. எடுத்துக்காட்டாக, "கருவிர லூகம் பார்ப்போடிரிய" (208) எனவரும் மலைபடு கடாம் பாடலின் அடியைக் கூறலாம். சம்பந்தரும் குரங்கின் விரல் கருநிற முடையது என்பதைக் குறித்துள்ளார் :

" வேயுயர்சாரற் கருவிர லூகம் விளையாடும்
சேயுயர் கோயிற் சிராப்பள்ளி மேய செல்வனூர்
பேயுயர்கொள்ளி கைவிளக்காகப் பெருமானூர்
தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் ருகாதே."

(98—7)

மலைப் பக்கங்களில் வளர்ந்துள்ள உயரமான அடர்ந்த மூங்கில் மரங்களில் குரங்குகள் தாவிக் குதித்து விளையாடுவது ஓர் இன்பமான இயற்கைக் காட்சியாகும். குரங்குகள் குதித்து ஓடுவதும், மூங்கில்கள் அசைந்து ஆடுவதும், வளைந்த மூங்கில் தளர்வதும் எழுவதும், தாழ ஆழ்வதும் மேலே விசையுடன் வெடித்துத் துள்ளுவதும், குரங்குகள் எந்த நிலையிலும் பிடி நெகிழாமல் அங்கும் இங்கும் பாய்ந்து கூத்தாடுவதும் ஒரு களியாட்டமாகவே இருக்கும். குரங்குகள் குதிரையைப் போலத் துள்ளிப் பாய்ந்து மூங்கிலில் ஆடும் என்று ஒரு குறுந்தொகைப் பாடல் கூறுகிறது:

“ பலவிற் சேர்ந்த பழமா ரினக்கலை
சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇச்
செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்
பெருவரை யடுக்கத்து.”

(குறுந்தொகை — 385)

இவ்வாறு கானவன் கணைக்குப் பயந்து குரங்கு மூங்கிலில் துள்ளிப் பாய்ந்தாலும் அது காண்போருக்கு ஒரு கவின் பெறு காட்சியாகவே இருக்கும். குரங்குகள் கழை பாயும் பொழுது மூங்கில்கள் வளைந்து கொடுத்து ஊசல் போல அசைவதும், அவற்றின் மேல் குரங்குகள் ஒரு வருத்தமும் இல்லாமல் நின்றும் இருந்தும் ஓடியும் நடனம் புரிவது ஓர் அற்புதக் காட்சியாகவே இருக்கும். இக்கழைக் கூத்தை விரும்பிக் கண்டு மலைவேட்டுவரும் ஆரவாரம் செய்து கைமறித்து வியப்பெய்துவார்கள் என்று சம்பந்தர் பாடுகிறார்:

“ மூடிய சீவரத்தர் முன்கூறுண்
டேறுதலும் பின்கூறுண்டு
காடி தொடுசமணைக் காய்ந்தா
ரிடம்போலுங் கல்சூழ் வெற்பில்

நீடுயர் பேய்குனியப் பாய்கடுவ
வீள்கழைமேல் நிருத்தஞ் செய்யக்
கூடிய வேடுவர்கள் கூய்விளியாக்
கைமறிக்குங் குறும்பலாவே.''

((207—10)

இது திருக்குற்ருலத்தில் பாடிய பாடல். இன்றும் குற்ருலம் செல்கிறவர்கள் அருவியைக் கண்டு மகிழ்வது போல் குரங்கைக் கண்டும் மகிழ்கிருர்கள். சம்பந்தரும் மறவாது மகிழ்ந்து பாடுகிருர்:

'' மலையார்சாரன் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்துங் குற்ருலம்
இலையார் சூல மேந்தியகையான் எயில்எய்த
சிலையான் மேய நன்னகர் போலுஞ் சிறுதொண்டீர்.''

(99—5)

சங்கப் புலவர்கள் மக்களுக்குள்ள சில சிறந்த இயல்பு களை விலங்குகளுக்கும் ஏற்றிவைத்து உள்ளுறை சிறக்கப் பாடுவது உண்டு. ஆண் குரங்கு இறந்துவிடவும் அதனைப் பிரிந்து வாழ முடியாத பெண் குரங்கு தன் கையிலிருந்த குட்டியை மற்றக் குரங்குகளிடம் ஒப்படைத்துவிட்டு, மலை யுச்சியிலேறிக் கீழே விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளும் என்ற செய்தியை ஒரு குறுந்தொகைப் பாடல் கூறுகிறது:

'' கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்.''

(குறுந்தொகை—69)

இது போல் சம்பந்தரும் சில இயல்புகளைக் குரங்கு களுக்கு ஏற்றிப்பாடுகிருர். ஆண் குரங்கோடு சண்டை யிட்டுக் கொண்ட பெண் குரங்கு தன் கையிலுள்ள குட்டி யுடனே உயிரை வெறுத்துக் கழைபாய்வதற்காக மலையின்

உச்சிக்கு ஏறிச் செல்லும் ஓர் அஞ்சத்தகு காட்சியை அழகுடன் சித்திரிக்கிருர்:

“ கைம்மகவேந்திக் கடுவனெடுடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முக வேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முக நாகம் மதியுடன் வைத்தல் பழியன்றே.”

(98 - 2)

தமிழ் மன்னர் தமிழ்ப் பண்ணைக் கேட்டுக் கொண்டே துயிலெழுவர் என்பதைப் பண்டைநூல்களில் நாம் பரக்கக் காணலாம். தமிழரசனது நாளோலக்க மண்டபத்தில் பாட்டும் பண்ணும் பரந்திசைத்துக் கொண்டே யிருக்கும். இதைக் குறித்து வேடிக்கையான செய்தி ஒன்று அகநானூற்றில் காணப்படுகிறது. தித்தன் வெளியன் என்னும் சோழவரசன் காலத்தில் அவன் தலைநகராகிய உறையூரைத் தாக்கவேண்டி வேற்று நாட்டரசனுகிய கட்டி என்பவன் படைதிரட்டிக் கொண்டு வந்தான். காலைப் பொழுதில் உறையூரைக் கிட்டினன். அப்பொழுது தித்தன் அவன் வரவை அறியாது தன் கொலு மண்டபத்தில் வீற்றிருந்து பாணர்களைக் கூட்டி இசை விருந்துண்டு மகிழ்ந்திருந்தான். கட்டி என்பவன் பிற நாட்டவன் ஆதலின் தமிழ் இசையை உணராதவனுய், சோழன் அரண்மனையினின் றெழுந்த முழவொலியைக் கேட்டு அது போர் முரசே எனப் பயந்து தன் படைகளுடன் ஓட்டம் பிடித்தவன் இன்னும் பிடிபடவில்லை. அப்பேதைக் கட்டியின் அறிவின் தெளிவும் போரின் திறமும் குறித்துத் தமிழ் நாடு முழுவதும் ஒரே பேச்சாயிருந்தது:

“ வலிமிகு முன்பிற் பாணனெடு மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
பாடின் தெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய ஆர்ப்பினும் பெரிதே.”

(அகநானூறு—226)

இவ்வாறு சோழன் அரண்மனையில் காலை யெழுந்த இன்னிசைக் கிணையின் ஒலியைப் போர் முரசொலியென மயங்கி யறிந்து ஒரு பகையசரசன் ஓடினான் என்று கூறுகிறது சங்க இலக்கியம். இதே கருத்தை வேறொரு முறையில் அமைத்து, சம்பந்தர் பாடிய ஒரு பாடலின் பொருளையும் ஈண்டுத்தெரிந்து கொள்ளுதல் நல்லதாகும்.

திருவையாறு ஓர் எழில் மிகுந்த ஊர். அங்கு ஆறுகளும் சோலைகளும் வாவிகளும் கோயில்களும் அழகாக அமைந்துள்ளன. மந்தியும் அறியா மரம்பயில் அடுக்கங்கள் நிரம்பியிருக்கும். வெயில் நுழை பறியாக் குயில் நுழை பொதும்பர்கள் செறிந்து தோன்றும். எல்லா உயிர்களுக்கும் உயிர் போகும் தறுவாயில் அஞ்சவேண்டாம் என்று அருள்புரிந்துகொண்டு ஐயாறப்பன் அங்குக் கோயில் கொண்டிருக்கிறான். அவ் இறைவன் கோயிலில் காலை வேளையில் இன்னிசை முழக்கம் எங்கும் எழுகிறது. இளம் பெண்கள் கோயிலை வலம் வந்து இனிமையாக நடனம் புரிகிறார்கள். மத்தள வொலியும் தத்தி வருகிறது. அருகே சூழ்ந்திருக்கும் சோலைகளில் உள்ள குரங்குகள் அது முழவின் ஒலி என்று தெரியாமல் மழைக்கு அறிகுறியாக இடிதான் பிடிக்கிறதோ என்று அஞ்சி, வானத்தில் மேக நிலையைத் தெரிவதற்காக அடர்ந்துயர்ந்த மரங்களின் நீண்ட உச்சிக் கிளைகளின் மேலே பாய்ந்தேறிச் சென்று பார்க்குமாம். சம்பந்தர் பாடுகிறார்:

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்
றருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவையாறே."

(130—1)

இது சம்பந்தர் திருவாய் மலர்ந்தருளியது. முன்னர்க் கண்ட அகநானூற்றுப் பாடலில் தித்தன் வெளியன் கோயிலில் எழுந்த தெண்கிணை யொலியைப் போர் முரசொலியென அஞ்சி ஓடினுன் கட்டி என்பான். சம்பந்தரின் திருவையாற்றுப் பாடலில் இறைவன் கோயிலில் எழுந்த முழவொலியை மழைபொழிய வெழுந்த இடி யொலி என்று மந்திகள் அஞ்சி மரத்தினில் ஏறி மஞ்சினைப் பார்த்தன! இவ்விரண்டிலும் ஓர் ஒப்புமை இருப்பதை ஒள்ளியார் உணர்வர் என்பது தெள்ளிது.

இவ்வருமைத் தேவாரப்பாடலில் பொதிந்துள்ள சில நயங்களை நாம் நோக்கிச் செல்லுதல் நலமாகும். இவ்வுலகத்துயிர்களுக்கெல்லாம் அச்சத்தைப் போக்குகிறவன் இறைவன் ஒருவனே யாகும். அவனையின்றி நமக்கு வேறு கதியில்லை, புகலில்லை, உய்வில்லை, உயிரும் இல்லை. சாதலைவிட இன்னுதது உலகத்து வேறில்லை. சாகும் பொழுது நம் அறிவு அழிந்துவிடுகிறது. பொறிகள் நெறி குலைகின்றன. புலன்கள் கலங்குகின்றன. மதிமயங்குகின்றது. அவ்வேளையில் இயற்கையே நம்மைத் துப்பிக் கழிப்பதுபோல் கோழை பெருகிக் கூடுவழி கிறது. ஆற்றல் அழிகிறது. இவ்வாறு ஐயாறு வாயாறு பாய்ந்து கையாறெய்து முன் ஐயாறனைக் கையார வாயார மெய்யார நாம் தொழுது அவன் அருளுக்குத் தக்கவர்களாக வேண்டும். வீணுக அஞ்ச வேண்டாம். அஞ்சேல் என்று ஆண்டவனே வலிய வந்து நம்மை ஆட்கொள்வான். அச்சத்தைப் போக்கும் ஐயாறன் கோயிலைச் சூழ்ந்த மரங்களில் குடியிருந்தும், அவன் கோயிலின் முழவொலியைக் கேட்டு மகிழ்ந்து கோயிலுட் சென்று இறைவனை வழிபடாது, முழவொலியை இடியென்று அஞ்சிக் கொண்டு வானரங்கள் மரத்தில் ஏறி வானத்தை அண்ணுந்து பார்த்து அலமருகின்றன. இது பகுத்தறிவில்லாத, ஒன்றை மற்ருென்

ருகத் திரித்து உணர்கின்ற விலங்குகளின் செயலேயாயினும், இவற்றைப் போன்ற மக்களும் இருக்கிருர்கள் என்பதைக் குறிப்பாக உணர்த்தவே சம்பந்தர் இவ்வாறு பாடினர். குரங்குகள் போல் அலமந்து மக்களும் அலேவார்களானல் என் செய்வது? தம்முடைய துயர்களேப் போக்க நாட்காலேயில் இறைவன் கோயிலுக்குச் சென்று அவனே வழிபடாது அவனே மறந்து, உலகியலிலும் சிற்றின்பங்களிலும் வெற்றின்பங்களிலும் உழன்று மக்கள் அஞ்சியஞ்சிச் சாகின்ருர்கள். அஞ்சவேண்டாத தற்கு அஞ்சும் அவலநிலேயை மந்தியின் செயல் கொண்டு நாம் அறியலாம். தம்முடைய மனக்கவலேகளேத் தனக்குவமையில்லாத தாயினுமினிய சங்கரனே தவிர்ப்பான் என்பதை அறியாது மக்கள் எங்கெல்லாமோ ஓடி இளேத்து ஏமாந்து போய் வறிதே வாழ்க்கையைப் பாழடித்துக் கொள்கின்றனர். திருவையாற்றுச் சில மந்திகள் அலமந்தது போல், மக்களும் வெருவி ஒன்றை மற்ருென்ருக மயங்கி அறிந்து உறுதிப்பொருளேக் கைநெகிழ விடலாகாது என்பதை அழகாக இப்பாடலில் சம்பந்தர் உள்ளுறை உவமமாக வைத்துக் கூறும் திறன் சிந்தித்துப் பயன்கொள்ளத்தக்கது.

### குறத்தி கூந்தல்

இப்பொழுது ஒரு தினேப்புனக் காட்சியைக் காண்போம். மலேச்சாரல் ஒன்றில் தினேக்கதிர்கள் விளேந்து கிடந்தன. புனத்தின் நடுவிலுள்ள பரண்மிசை ஒரு குறவன் மதுவுண்டு களித்துச் சிங்கக் குட்டி போன்று சாய்ந்திருந்தான். குறத்தியும் அவன் பக்கலில் அமர்ந்திருந்தாள். அவள் அணிந்திருந்த சந்தனக்குழம்பு இன்னும் வாடவில்லே. அவள் கூந்தலுக் கிட்ட மயிர்ச்சாந்து மணம் வீசிக் கொண்டிருந்தது. அவளது நீண்ட கரிய கூந்தல் காற்று வாட்டமாய் அசைந்து அலேந்து கொண்டிருந்தது. அதைத் தன் விரல்களால் வாரிக் கொடுத்துக் கொண்டே அத்தமிழ்மகள் பாடத் தொடங்கினள். குன்றுபோல் கொழுநன் அருகிருக்கவும், மெல்லிய பூங்காற்று மெத்தென உலவவும், அவள்

உள்ளம் பரவச மெய்தி விட்டது. களித்த மனத்திடைக் கனிவுறும் பாக்கள் பொங்கியெழும் என்பது உண்மையே. அதிலும் குறவன் மனம் உருகக் குறத்தி பாடும் பாட்டல்லவா? அதையும் குறிஞ்சிப் பண்ணில் இசைக்கலுற்ருள். மல்லல் மகிழ்ச்சியலம்பிக் கொழித்தது. அவ்விசைப்பெருக்கு மதுரகானமாயிருந்தது. தினை பறிக்கவந்த யானையும் இசையில் மனம் பறிகொடுத்து, ஆடாது அசையாது நின்றது. இழுமென்ற இசையின் இனிமையால், குறத்தியின் குறிஞ்சிப்பண் அத்திருட்டு யானையைத் தாலாட்டி உறங்கவும் வைத்து விட்டது. யானை தினைக்கதிரை மறந்ததன்றித் தன் இமையாத கண்களும் இமைபொருந்தி உறங்கும்படியாகி விட்டது. தமிழிசை யானையையும் கவர்ந்து விட்டது. அகநானூற்றில் இஃது ஒரு சித்திரமாகத் தீட்டப்பட்டிருக்கிறது:

“ உளைமான் துப்பின் ஓங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
உரைத்த சந்தின் ஊர விருங்கதுப்பு
ஐதுவரல் அசைவளி யாற்றக் கைபெயரா
ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம் புகல் மழகளிறு உறங்கும் நாடன்.”

(அகநானூறு-102)

(உளைமான்=சிங்கம். கழுது=பரண். பிழி=கள்.)

யாழை மீட்டிக்கொண்டே பாடகர் பாடுவது போல் குறத்தி விரல்களால் கூந்தலைக் கோதிக் கொடுத்துக் கொண்டே குறிஞ்சிப் பண்ணைப் பாடினளாம். சந்தனக் குழம்பில் தோய்ந்த அவளது நீண்ட கரிய கூந்தலின் மணம் காற்றிலே மிதந்து கொண்டு அந்த மலைச்சாரல் முழுதும் பரிமளித்தது. இங்கு நாம் நோக்க வேண்

டியது குறத்தி தனது மணங்கமழுங் கூந்தலைக் காற்றில் எவ்வாறு புலர்த்தினள் என்பதேயாகும். பொதுவாக மலைப்பகுதிகளில் வாழும் இளம் பெண்களுக்குக் கூந்தல் செழுமையாக நீண்டு கருமையாக அடர்ந்து வளரும். தினைப்புனம் காவல் காக்கும் பெண்கள் அங்கு வீசும் காற்றிலே தங்கள் கூந்தலை ஆடவிட்டுக் கைவிரல் களால் சிக்கெடுத்துக் காயவைப்பது இயல்பு. பழங் காலத்தில் கூந்தலுக்குச் சந்தனக்குழம்பும் கத்தூரிக் குழம்பும் கூட்டின மயிர்ச் சாந்தைத் தலைக்கு இடுவது வழக்கம். அதனால் கூந்தல் நறுமணம் கமழும். காற்றடிப் பதால் பக்கச் சூழலில் எல்லாம் கூந்தலின் இனிய மணம் வீசிக் கொண்டிருக்கும். இஃது ஒரு சின்னச் செய்தியாகத் தோன்றினாலும் ஒவ்வொன்றிலும் அழகைக் கண்டு வியக்கும் புலவர்களுக்கு இஃது ஒரு சிறந்த சுவைக்கக் கூடிய செய்தியாகத் தோன்றி அழகு தமிழில் அலங்கார மாகப் பாடியுள்ளார். இதனைத் திருஞானசம்பந்தப்பிள்ளை யாரும் தமது தேவாரத்தில் குறித்திருப்பது தான் நாமும் வியந்து கண்டு விழைவுடன் பேண வேண்டியதாகும்:

"வில்லிமையி னல்விறல ரக்கனுயிர்
    செற்றவனும் வேதமுதலோன்
இல்லையுள தென்றிகலி நேடவெரி
    யாகியுயர் கின்றபரனூர்
எல்லையில் வரைத்தகடல் வட்டமு
    மிறைஞ்சிநிறை வாசமுருவக்
கொல்லையி ளங்குறவர் தம்மயிர்
    புலர்த்திவளர் கோகரணமே." (337—9)

இங்கு இளங்குறவர் என்றது குறச் சிறுமியரை. கொல்லையில் நிறைவாசம் உருவ மயிர் புலர்த்தினர் என்க.

வளை சோர்தல்

அகத்துறைக்கு உரிய செய்தி ஒன்று இங்கே நோக்கத் தகும். தலைவன் பிரிந்து சென்றவிடத்துத் தலைவி வருந்தி வாடுவதால் அவள் மேனி மெலிவடையும். அங்ஙனம் மெலியும்பொழுது அவள் முன்கைவளையல்கள் கையினின்றும் கழன்று கீழே விழுந்துவிடும். இதனை வளை சோர்தல் அல்லது தொடி நெகிழ்தல் என்பர். இவ்வாறு தொடி நெகிழ்வதைக் காண்போர், தலைவி காதல் நோயுற்றிருக்கிறாள் என்று கொண்டு, அவள் களவுக் காதலை அறிந்து வெளியே தூற்றிப் பேசத் தலைப்படுவார்கள். அதனால் வளை கழலுவதைக் கண்டு தலைவி அஞ்சுவாள், வருந்துவாள். பின்னர்த் தோழிக்கு அறத்தொடு நின்று தான் காதலிக்கும் தலைவன் இன்னார் என்று அறிவிப்பாள். இதைப் பற்றிய குறிப்புக்கள் சங்கப் பாடல்களில் மிகுதியாகப் பயின்றுவரும். ஈண்டு எடுத்துக்காட்டாக ஒன்றைமட்டும் குறிக்கின்றேன்:

"யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும்ஓர் ஆடுகள மகனே."

(குறுந்தொகை—31)

இக்கருத்தைத் திருஞான சம்பந்தர் ஞானப்பால் உண்டவுடன் தாம் பாடிய "தோடுடைய செவியன்" என்று தொடங்கும் முதற்பதிகத்திலேயே இரண்டு இடங்களில் அமைத்துப் பாடியுள்ளார். இதனால் அம்முதற் பதிகம் அகத்துறையில் அமைந்துள்ளது என்பது தெளிவாகும். தலைவி வளை நெகிழ்ந்து நின்ற நிலையைக்கண்டு அவள் காதல்வயப்பட்டுள்ளாள் என்று தெரிந்து கொண்ட அவள் தோழி, அவள் வளை நெகிழ்த்த கள்வன் யார் என்று வினவவும், தன் உள்ளங்கவர் கள்வன் பிரமாபுரம் மேவிய பெம்மானாகிய இறைவனே என்று

தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல் என்ற துறையில் அமைத்து, சம்பந்தர் அப்பதிகத்தைப் பாடினார் என்று சொல்லலாம் :

"நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்
கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே."
(1—3)

"மறைகலந்தவொலி பாடலோடாடல ராகி மழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்
கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே."
(1—6)

குறிஞ்சிப்பண்

மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் குறிஞ்சிப்பண்ணைப் பாடி முருகனை வழிபடுவர் என்பதைத் திருமுருகாற்றுப்படையிற் காண லாம் :

"நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி."
(திருமுருகு—239)

சம்பந்தரும் தமது தேவாரத்தில் இதனைக் குறிப்பிடுகிறார்:

"அருகரொடு புத்தரவர் அறியாவரன்மலையான்
மருகவரும் இடபக்கொடி யுடையானிடமலரார்
கருகுகுழல் மடவார்கடி குறிஞ்சியது பாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடைவோமே."
(12—10)

கார்த்திகை விளக்கு

இக்காலத்தில் நடப்பதுபோல் முன்னாளிலும் கார்த்திகை மாதத்தில் விளக்குகளை அணியணியாக ஏற்றி

அழகு செய்து திருவிழாக் கொண்டாடி வந்தனர். இவ்விழாவிற் சிறப்பாகக் கலந்துகொள்வோர் மகளிரேயாவர். அழகுற நாள்தோறும் மாலையில் விளக்கேற்றி அஞ்சலிப்போர் அவரேயாகலான். இத்தீப வரிசை சரஞ்சரமாய் வகுக்கப்பெற்று இருளோட்டி ஒளிகான்று இலங்கி மிளிர்வது கண்கொள்ளாக் காட்சியாகும். அது காண்போர் உள்ளத்தையள்ளி மகிழ்வூட்டும். இவ்விளக்கணி புலவர்கள் உள்ளத்தை ஊடுருவிப் பாய்ந்து மறக்கொணு உணர்ச்சியை மட்டின்றி நல்கியுள்ளது. சங்கப் புலவர்களில் ஒருவரான பாலைபாடிய பெருங்கடுங்கோ இக்கார்த்திகை விளக்கக் கவிஞெளியில் மிகவும் ஈடுபட்டவர். காடுகளில் இலவமரம் இலையுதிர்ந்து செம்மலர்களால் அணிபெற்றிருப்பதும் கோங்க மரங்கள் கொத்துக் கொத்தாய் அடுக்கடுக்காய்ப் பூத்திருப்பதும் கார்த்திகை மாதத்தில் எடுக்கப்பட்ட ஒளியையுடைய நீண்ட வரிசையான விளக்குகளையே புலவருக்கு நினைவூட்டுகின்றன :

"அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கட்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்க மணிந்த காடே."

(நற்றிணை—202)

"வேனி லத்தத் தாங்கண் வானுலந்து
அருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு."

(அகநானூறு—185)

மாலைப் பொழுதிற் பெண்கள் அந்திவிளக்கை ஏற்றி இறைவழிபாடு செய்வார்கள் என்பதை,

"கயலே ருண்கண் கனங்குழை மகளிர்
கையுறை யாக நெய்பெய்து மாட்டிய
சுடர்துய ரெடுப்பும் புண்கண் மாலை."

(குறுந்தொகை—398)

என்ற அடிகளால் நாம் அறியலாம்.

இக் கார்த்திகைத் திருநாள் தொன்றுதொட்டுத் தமிழ்நாட்டில் சிவனுக்குரித்தாய் வழங்கிவரும் ஒரு திருவிழாவாகும். திருஞானசம்பந்தர் மயிலாப்பூரில் இறந்துபோன பூம்பாவைக்கு உருகி இரங்கிப் பாடலுற்ற போது இக் கார்த்திகை விழாவைக் குறிப்பிடுகிறார். மங்கையர் ஒன்றுகூடிக் கார்த்திகைத் திங்களில் விளக்கீடு கொள்ளுங் காட்சியைக் கண்டு மகிழ்ந்து, தானும் திளைத்து விளக்கேற்றி இறைவழிபாடு செய்யக் கொடுத்து வையாது பூம்பாவை மறைந்தனளே என்று அவர் பாடி வருந்துவது கற்போர் மனத்தைக் கனிவிப்பதாகும். அப் பாடல் வருமாறு :

''வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்
தளத்தேத் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்.''

(183—3)

இப்பாடலில் 'தொல்கார்த்திகை நாள்' என்று காழி வள்ளல் குறிப்பதால் இது நெடும்பண்டைக்காலம் முதல் தமிழ்நாட்டில் கொண்டாடப்படும் திருவிழா என்பது விளங்கும். இதனைப் பெண்களே சிறப்பாகக் கொண்டாடுதற்குரியரென்பதும், இது சிவனுக்குரிய விழா என்பதும், அதைக் கண்டு களிப்பது புண்ணியம் என்பதும் இப்பாடலால் தெளிவுறும்.

நீலம்

நீலமலரைப் பெண்களின் கண்ணுக்கு உவமையாகக் சொல்வது சங்ககால மரபு :

''நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலங்
கண்ணென மலர்ந்த சுனையும்.''

(அகநானூறு—38)

சம்பந்தர் தேவாரத்திலும் "கள்வாய் நீலங் கண்மல ரேய்க்குங் காமர் பெருந்துறை யாரே." (42—9) என வந்துள்ளது.

செருந்தி

சிறுபாணாற்றுப்படையில் செருந்திப்பூ பொன் போலும் நிறமுடையதாகக் கூறப்படுகிறது:

"தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்." (147)

(தமனியம் = பொன்.)

சம்பந்தரும் இச் செருந்தி மலரைப் பொன் என்றே கூறிப் பாடுகிறார்:

"மருந்தவை மந்திர மறுமைநன்
னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே
லியுறை செல்வர்தாமே." (350—1)

இப்பாடலில் சம்பந்தர் கொன்றை மலரையும் பொன்னோடு உவமித்துள்ளார். சங்க இலக்கியமாகிய முல்லைப் பாட்டிலும் கொன்றைப்பூ இவ்வாறு உவமிக்கப்படுகிறது:

"முறியிணர்க் கொன்றை நன்பொன் கால." (74)

புரிசை

பல கற்படைகளை அடுக்கி உயரமாய் எழுப்பும் மதிலை "விண்ணுற வோங்கிய பல்படைப் புரிசை" (352) என்று சங்க நூலாகிய மதுரைக் காஞ்சி கூறுகிறது. சம்பந்தரும் தமது தேவாரத்தில் "படையார் புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச் சரமே" என்று பாடியுள்ளார்.

### வனப்பு

பெண்ணின் உடல் வனப்பைக் கூறும்பொழுது "ஈர்க்கிடை போகா ஏரிள வனமுலை" (பொருநராற்றுப் படை—36) என வந்துள்ள சங்கநூற் கருத்தைத் தமது பாடலிலும் சம்பந்தர் "இடையீர் போகா இளமுலை யாளையோர், புடையிரே" (54—2) என்று அமைத்துள் ளார்.

### திருக்குறள்

இனி, திருக்குறளிலிருந்து சில கருத்துக்களைக் காண்போம். "அகர முதலானை அணியாப்ப னூரானை" (88—5) என்னும் சம்பந்தர் வாக்கு திருக்குறளின் முதற் குறளை நினைவுறுத்தும். சம்பந்தர் தேவாரத்திலுள்ள "மனனுணர்வொடு மலர்மிசை யெழுதரு பொருள்" (21—5) என்றும் "சுடர்க் கமலப் போதகஞ்சேர் புண்ணியனூர்" (66—2) என்றும் வரும் அடிகள் "மலர் மிசை யேகினான்" எனவரும் குறளை நினைப்பூட்டும். "பொறிவாயி லைந்தவித்தான்" எனவரும் குறளின் கருத்தை "வென்றவன் புலனைந்தும்" (113—10) எனவும், "அஞ்சொண் புலனு மவை செற்ற மஞ்சன்" (38—4) எனவும், "ஐந்து புலனொடு வென்று பொய்ம் மைகள் தீர்ந்த புண்ணியர்" (42—4) எனவும் வரும் சம்பந்தர் திருவாக்கால் அறியலாம். அக் குறளிலுள்ள "பொய் தீர் ஒழுக்க நெறி" என்ற கருத்தைப் பிள்ளை யாரும் "பொய்யிலா மெய்ந் நெறிக்கே, தக்கிருந்தார்" (178—1) என்று குறித்துள்ளார்.

"தனக்குவமை யில்லாதான்" என்னும் குறளடியை "தன்னொப்பாரில்லாத் தூயவன்" (113—2) "தன்னேர் பிறரில்லானை" (198—3) என்னும் சம்பந்தர் வாக்குகள் நினைவுறுத்துகின்றன. "எண் குணத்தான்" என

வள்ளுவர் கூறிய கருத்து "எண்ணமருங் குணத்தாரும்" (205—1) என்ற சம்பந்தர் வாக்கில் அமைந்துள்ளது. சம்பந்தர் பாடிய "தொண்டரஞ்சு களிறும் மடக்கி" (250—1) என்னும் அடியில் "உரனென்னும் தோட்டி யான்" என்ற குறளின் கருத்து அடங்கியுள்ளது. "ஈத்துவக்கும் இன்பம்" என்னும் வள்ளுவரின் வாக்கை "இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னு தீந் துவக்கும், தன்மையார் ஆக்கூரில் தான் தோன்றி மாடமே" (178—9) என்னும் சம்பந்தரின் வாய்மொழியிற் காணலாம்.

"சலத்தினுற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத் தன்மையார்" (380—5) என்னும் சம்பந்தர் வாக்கு, "சலத்தாற் பொருள்செய்து" எனவரும் திருக்குறளடியை நினைப்பூட்டுகின்றது. "மழித்தலும் நீட்டலும் வேண்டா" என்ற குறளின் கருத்து பின்வரும் சம்பந்தர் பாடலின் அடிகளில் அமைந்துள்ளது :

"மண்ணுதல் பறித்தலு மாயமிவை
எண்ணிய காலவை இன்பமல்ல." (111—10)

"ஐயுணர்வெய்தியக் கண்ணும் பயமின்றே, மெய் யுணர் வில்லா தவர்க்கு" என்னும் திருக்குறளை நினைந்தே, சம்பந்தர்—

"ஆறினர் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினர் வழிபடுந் தென்குடித் திட்டையே." (293—6)

என்று பாடியுள்ளார். இவைபோல் இன்னும் எத்தனையோ சங்கநூற் கருத்துக்கள் திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல்களில் பயின்று வந்துள்ளன. அவை விரிக்கிற் பெருகுமாதலின் இத்துடன் அமைகின்றேன். இவற்றால் சம்பந்தர் பாடல்கள் சங்கமலி செந்தமிழே என்பதை நாம் நன்கு அறியலாம்.

# நடுவு நிலைமை

திருமந்திர நூலின்கண் இத் தலைப்பு, சில சுவடிகளில் நடுவு நில்லாமை என்றும் காணப்படுகிறது. இதற்குரிய செய்யுட்கள் நான்கு. முதற் செய்யுளை நோக்கின், நடுவு நில்லாமை என்ற தலைப்பே சாலும் என்பது தெளிவாகும். முதற் செய்யுளின் முதலில் 'நடுவு நின்றார்க் கன்றி ஞானமும் இல்லை' என வந்துள்ளது.

திருக்குறளில் பன்னிரண்டாம் அதிகாரம் நடுவு நிலைமையைப் பற்றிக் கூறுகிறது. "பகை நொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை" என்று பரிமேலழகர் நடுவுநிலைமையை விளக்கியுள்ளார். அஃதாவது பகைவர், நொதுமலர் (அயலார்), நண்பர் ஆகிய மூவர்மாட்டும், விருப்பு வெறுப்பின்றி ஒப்ப நிற்றலே நடுவு நிலைமையாகும். இவ்வறம் உலகியல் நெறியை நோக்கியதாய், இல்லறத்தின் வழியில் ஒழுகுவார்க்குரிய பலவகை அறங்களுள் ஒன்றாகும். இதனைத் தகுதி, செப்பம் என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார். இவ்வறம் உலக மக்கள் அனைவர்மாட்டும், சிறப்பாக உயர் அதிகாரிகளிடத்தும், அறங்கூறவையத்தாரிடத்தும், வணிகர்களிடத்தும் இருக்க வேண்டியதொன்று. ஆயினும், இஃது இப்பொழுது முயற்கொம்பாகவே இருக்கிறது. அதற்குக் காரணம் யாதெனில், ஒவ்வொருவரும் பிறரிடம் நடுவுநிலைமை திகழ்வதைக் காண விழைகின்றனரேயன்றி, அது தாங்களும் கையாளவேண்டிய அறம் என்பதை மறந்துவிடுகின்றனர். நடுவுநிற்றலைக் கனவிலும் தாங்கள் கருதுவதில்லை. பிறர் அவ்வாறு நடக்கவில்லையே என்றுதான் குறைபட்டுக் கொள்ளுகின்றனர்.

தகுதியுடன் நேர்மையாய் நின்று உள்ளதை உள்ளவாறு கூறுவதற்கும், செயற்படுத்தற்கும் செம்மையான மனமும், உறுதிப்பாடும், அஞ்சாமையும், ஆசையின்மையும் வேண்டும்.

"சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்"

என்பது திருக்குறள். தனக்குக் கேடு வருவதாயிருந்தாலும், ஆக்கம் வருவதாயிருந்தாலும், நடுவு நிலைமையினின்று ஒருவன் தவறக்கூடாது. வாழ்க்கையிலே நன்மையும் தீமையும் வருவது இயற்கை. அதை நாம் நேர்நின்று சரிக்கட்டவேண்டுமே தவிர, அதற்காகக் கோணல் வழிகளிற் செல்லலாகாது. நடுவு நிலைமையைக் கைவிடலாகாது.

"கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி."

ஏறச்சொன்னால் எருதுக்குக் கோபம், இறங்கச் சொன்னால் முடவனுக்குக் கோபம், நமக்கென்ன ? என்று நடுவுநிலைமையில் நில்லாது உலகம் எளிதில் மாறிவிடும். சிலர் பேச்சில் தெளிவும் நீதியும் இருக்கமாட்டா. ஒரு தலைப்பக்கமாகவே கோணி நின்று பேசுவர் சிலர். பாம்பும் சாகக்கூடாது, கோலும் முறியக்கூடாது என்று சிலர் மசமசப்பாய் இருந்துவிடுவார்கள். அறத்தின்படியான உண்மையைக் கூறுவதற்கு அஞ்சுவார்கள். இத்தகைய விளக்கெண்ணெய்க் கொள்கை நடுவுநிலைமையாகாது. வாணிகத்துறையில் நடக்கும் திருட்டுக்கள் எல்லாம் நடுவுநிலைமைக்கு மாறானவை.

"வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்"

என்பது திருக்குறள். தராசில் படியைப் போட்டுப் பொருளை வைத்து நிறுக்குமுன் வெறுந்தட்டுக்களைச்

சமன்செய்து காட்டிப் பின்னர் நிறுக்கத் தொடங்க வேண்டும் என்கிறார் திருவள்ளுவர். "சமன்செய்து சீர் தூக்குங்கோல்" என்கிறார். சில தராசுகளின் முள் அங்கு மிங்கும் அசையாது ஒரு படித்தாயே நின்று மக்களை ஏமாற்றிவிடும். அத்தகைய தராசுகளை வைத்து வியாபாரிகள் மக்களை ஏமாற்றக்கூடாது. கொள்வதூஉம் மிகைபடாது கொடுப்பதூஉம் குறைபடாது வாணிகம் செய்தாலே வணிகர்கள் ஊதியம் அடைவார்கள் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். நடுவு நிலைமையைக் கடந்து பொருள் ஈட்டினால் அப்பொருள் பின்வரும் சந்ததிகளுக்கு நன்மையைத்தாராது ஒழிந்துவிடும் என்று எச்சரிக்கிறார் திருவள்ளுவர். இதனை அவர் எதிர்மறை முகத்தாற் கூறுவது நயமுடைத்து.

"செப்ப முடையவ னாக்கம் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து."

ஒருவனுக்குக் கேடுகாலம் பிடிக்கும்பொழுதுதான் நடுவு நிலைமையைக் கடந்த செயல்களிலே புத்திசெல்லும் என்கிறார் வள்ளுவர்.

"கெடுவல்யான் என்ப தறிக தன்னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்."

ஒருவன் மக்களை வைத்துத்தான் அவனது நடுவு நிலைமை புலனாதும் என்றும் கூறியுள்ளார் :

"தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்."

உலகில் மக்கள் தங்களுக்கு நல்லது ஒன்று நிகழ வேண்டும் என்று எதிர்பார்த்து அது நிகழாது போனால், அது யாராவது பிறர் ஒருவருடைய கொடிய செயலால் நிகழ்ந்தது என்று நொந்து கொள்வது வழக்கம். வாழ்க் கையில் என்றும் தோல்வியையே கண்ட பலர் கடவுளையும் நடுநிலைமையில்லாத கெடுநிலைக்காரன் என்று திட்டு

வதும் உண்டு. புறநானூற்றிலே பக்குடுக்கை நன்கணி யார் என்னும் புலவர் பாடிய பாடல் ஒன்றை இங்கே நினைந்து காணலாம் :

“ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்
இன்னு தம்ம இவ்வுலகம்
இனிய காண்கித னியல்புணர்ந் தோரே.”

திருப்பெருந்துறையில் அடியார்களோடு தம்மையும் கூட்டிச் செல்லாது இறைவன் விட்டுச் சென்றதை நினைத்து நினைத்து உருகியழுத,மாணிக்கவாசகர், அஃது இறைவனுடைய நடுநிலை யிகந்த செயல் என்றும், அவ்வாறு செய்தது நல்லது ஆகுமா என்றும் வருந்திப் பாடிய பாடல் கல்லையும் கரையச் செய்வதாகும்.

‘கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடிலாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாநான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றே வெங்கள் நாயகமே.”

ஆயினும், ஏழை பங்காளனாகிய சிவபெருமான் அம்பலத்தில் நின்று அருள் நடனம் புரிவது இன்னார் இனியார்க்கு என்றில்லாமல் அனைத்துயிர்களும் பேரின்பம் பெறவேண்டியே நடுவுநிலையாய்ப் பொதுவாக ஆடுகின்றான் என்பர்:

" ஆதியாய் நடுவுமாகி யளவிலா வளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேக மாகிப் பெண்ணுமா யாணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி
போற்றி."

திருமந்திரத்துள் வரும் நடுவுநிலைமை என்னும் அதிகாரமானது வீட்டுநெறியை நோக்கியதாய்த் துறவறத்தில் நின்று வீடுபேற்றை விழைபவருக்குரிய சாதனங்கள் பலவற்றுள்ளும் யோக நெறியைப் பற்றியதாகும். உடம்பின்கணுள்ள நாடிகள் 21000. அவற்றுள் சிறந்தவை பத்து. தசநாடி யென்ப. அவற்றுள்ளும் சிறந்தவை மூன்று. அவையாவன, இடைநாடி, பிங்கலை நாடி, சுழுமுனை நாடி யென்பன. இவற்றுள்ளும் சிறந்தது சுழுமுனை நாடியே. ஏனெனில், பேரின்பத்தைப் பெறுவதற்குரிய நாடி இதுவேயாகும். குண்டலி சத்தியின் விளக்கத்தையும், மணி, கடல், சங்கு முதலாகிய தசநாதங்களையும், சிவானந்தத் தேனையும் அனுபவித்தற்கு இந்த நாடியின் பயிற்சி இன்றியமையாதது. இடை நாடி, பிங்கலை நாடிகள் உலகவின்பங்களாகிய சிற்றின்பத்துக்கே கருவியாகும். இடை நாடி—சந்திரகலை, பிங்கலை நாடி—சூரியகலை, சுழுமுனை நாடி—செந்தீக்கலை. இடை, பிங்கலைகளின் வழியே இயல்பாய் இயங்கும் வளியை நிறுத்திச் சுழுமுனையாகிய நடுநாடியூடே செலுத்தி நிற்பின் பேரானந்தம் பெறலாம். அணிமாதி அட்ட சித்திகளும் தாமே வந்து சேரும். இந்த நிலையே ஈண்டு நடுவு நிலைமை எனப்பட்டது. நடுநாடியின் வழியே நிற்கும் நிலை நடுவு நிலைமையாம்.

" எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
செல்லா நடுநாடி யூடே தொடர்மூலம்
செல்லா எழும்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே"

என்ற திருமந்திரம் இதனை விளக்குவதாகும்.

திருமூலதேவர் இந்நெறியில் நின்ற சிவயோகியாவர். அவர் நான்மறை யோகிகளுள் ஒருவர்; அணிமாதிவரும் சித்திபெற்றுடையார். "சிவயோகம் தலைநின்று, பூவலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார்" எனவரும் பெரிய புராணக் குறிப்பாலும் உணரலாம்.

" நடுவுநின் ருர்வழி நானும் நின்றேனே" (320)
" நடுவுநின் ருரொடு நானும் நின்றேனே" (322)

என்பவற்ருலும் அறியலாம். இனி, நடுவு நிலைமைக்குரிய நான்கு திருமந்திரச் செய்யுளும் வருமாறு:

" நடுவுநின் ருர்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் ருர்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் ருர்நல்ல தேவரும் ஆவர்
நடுவுநின் ருர்வழி நானும் நின்றேனே" (320)

" நடுவுநின் ருன்நல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் ருன்நல்ல நான்மறை ஓதி
நடுவுநின் ருர்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் ருர்நல்ல நம்பனும் ஆமே" (321)

" நடுவுநின் ருர்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் ருர்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் ருர்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் ருரொடு நானும் நின்றேனே" (322)

" தோன்றிய எல்லாம் துடைப்பன் அவனன்றி
ஏன்றுநின் ருரென்றும் ஈசன் இணையடி
மூன்றுநின் ருர்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் ருர்நடு வாகிநின் ருரே." (323)

இனி, இம்மந்திரங்களுக்குத் திருவைந்தெழுத்தின் வகையா யுள்ள இருதலை மாணிக்கம், சூக்கும பஞ்சாக் கரங்களின் முறை பற்றிப் பொருள்கோடலும் ஒன்று.

இருதலை மாணிக்கம் என்பது சிவயவசி. சூக்கும பஞ்சாக் கரம் என்பது சிவயசிவ. இருபாலும் சிவமும் நடுவே அருளும் அமரத் தான் (உயிர்) அவற்றின் நடுவணி ருத்தல் இருதலை மாணிக்கம். ஒருபால் சிவமும் மற்றெரு பால் அருளும் அமர, தான் அவற்றின் நடுவேயிருத்தல் சூக்கும பஞ்சாக்கரம். இதனைத் திருவாசகப் பாடல் ஒன்றுலும் அறியலாம்:

"உடையா ளுன்ற னடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரு
மிருப்ப தாஞு லடியேனுன்
அடியார் நடுவு ளிருக்கு மரு
ளைப்புரி யாய் பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே."